# கட்டமைப்பியல் நோக்கில் சங்கப்பாடல்கள்

பெரியார் பல்கலைக்கழக
முழுநேர முனைவர் பட்டப்பேற்றிற்காக (பிஎச்.டி)
அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்
பெ.தாமரைச்செல்வி எம்.ஏ., எம்..ஃ.பில்.,

நெறியாளர்
முனைவர் கா.காந்தி எம்.ஏ., எம்..ஃ.பில்., பிஎச்.டி.
துறைத்தலைவர்






தமிழாய்வுத்துறை
மஹேந்ரா கலை அறிவியற் கல்லூரி (தன்னாட்சி)
காளிப்பட்டி – 637501, நாமக்கல் மாவட்டம்.


பிப்ரவரி – 2016.

# நெறியாளர் சான்றிதழ்

**முனைவர் கா. காந்தி எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,**
துறைத்தலைவர், தமிழாய்வுத்துறை,
மஹேந்ரா கலை அறிவியற் கல்லூரி (தன்னாட்சி),
காளிப்பட்டி – 637 501, நாமக்கல் மாவட்டம்.

பெரியார் பல்கலைக்கழகம் அளிக்கும் முனைவர் பட்டத்திற்காக **“கட்டமைப்பியல் நோக்கில் சங்கப்பாடல்கள்”** என்ற தலைப்பிலான ஆய்வேடு திருமதி பெ. தாமரைச்செல்வி அவர்கள் என்னுடைய மேற்பார்வையின்கீழ் ஆய்வு செய்துள்ளார். இவ்வாய்வு முழுவதும் அவருடைய சொந்த முயற்சியால் உருவானது என்றும், வேறு எவரும் இது பற்றி ஆய்வு செய்யவில்லை என்றும், வேறெந்த பட்டமும் இந்த ஆய்வேட்டின் மீது அளிக்கப்படவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

**இடம் : காளிப்பட்டி** **நெறியாளர் மற்றும்**

**நாள் :** **துறைத்தலைவர்**

**கையொப்பம்**

**முதல்வர்**

# ஆய்வாளர் உறுதிமொழி

**திருமதி. பெ. தாமரைச்செல்வி எம்.ஏ., எம்..ஃ.பில்.,**
முழுநேர முனைவர்பட்ட ஆய்வாளர்,
தமிழாய்வுத்துறை,
மஹேந்ரா கலை அறிவியற் கல்லூரி (தன்னாட்சி),
காளிப்பட்டி – 637 501, நாமக்கல் மாவட்டம்.

**"கட்டமைப்பியல் நோக்கில் சங்கப்பாடல்கள்"** என்னும் தலைப்பில் அமைந்த இவ்வாராய்ச்சி முழுவதும் என்னுடைய சொந்த முயற்சியால் செய்யப்பட்டது என்றும், இதற்கு முன் வேறு எவரும் இத்தலைப்பில் ஆய்வு செய்யவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

**ஆய்வாளர் கையொப்பம்**

இடம் : காளிப்பட்டி

நாள் : **(பெ. தாமரைச்செல்வி)**

# நன்றியுரை

**"கட்டமைப்பியல் நோக்கில் சங்கப்பாடல்கள்"** என்னும் தலைப்பில் ஆய்வு செய்வதற்கு அனுமதியளித்த பெரியார் பல்கலைக்கழகத்திற்கும், அதற்கு வாய்ப்பளித்த மஹேந்ரா கலை அறிவியற் கல்லூரித் **தாளாளர் எம்.ஜி.பாரத்குமார்** அவர்களுக்கும், இயக்குநர் மற்றும் **முதல்வர் ஆர்.கே.வைத்தியநாதன்** அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்விற்கு மேற்பார்வையாளராக இருந்து தகுந்த ஆய்வு நெறிமுறைகளை வகுத்துத் தந்தும், இடையறாது என்னை ஊக்குவித்தும் இவ்வாய்வு செம்மையாக அமைய எனக்கு வழிகாட்டிய தமிழாய்வுத்துறையின் தலைவர் **முனைவர் கா. காந்தி** அவர்களுக்கு என் உளமார்ந்த நன்றி உரியதாகும்.

ஆய்வின் போது எனக்கு ஆலோசனைகள் வழங்கியும், ஆய்விற்குத் தேவையான நூல்களைத் தந்து உதவிய தமிழாய்வுத்துறையின் பேராசிரியர்கள் **முனைவர் இரா.சுந்தரமூர்த்தி, முனைவர் ந.சிவசுப்பிரமணி, முனைவர் அ.ஜெயக்குமார், முனைவர் கோ.பூங்காவனம், திரு சி.பாலமுருகன், திரு த.ஏழுமலை, திருமதி கோ.சுசீலா, திருமதி மு.கோகிலா, திரு தி.நடராசன்** அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஆய்வு மேற்கொள்ளும் காலத்தில் உரிய ஆலோசனைகள் வழங்கியும் பல்வேறு ஐயங்களை நீக்கியும், நூல்களை வழங்கியும் உதவி புரிந்த **முனைவர் க.வினோத்குமார்** அவர்களுக்கு என் நன்றியினை உரித்தாக்குகின்றேன்.

ஆய்வு காலத்தில் உடனிருந்து பல்வேறு ஐயங்களை நீக்கிய முனைவர் **பொ.சகுந்தலா குமரேசன், முனைவர் வெ.நிர்மலா அன்பு** அவர்களுக்கும், பெரியார் பல்கலைக்கழக சமூகவியல் துறை உதவிப்பேராசிரியர் **முனைவர் ஜெயசீலன்** அவர்களுக்கும், முனைவர் பட்ட ஆய்வாளர் **பாரி** அவர்களுக்கும், உடன் பயிலும் **முனைவர்**

பட்ட **ஆய்வாளர்கள்** மற்றும் **ஆய்வியல் நிறைஞர்களுக்கும்**, **இளங்கலை, முதுகலை மாணவ மாணவிகளுக்கும்** என் நன்றி உரியதாகும்.

முனைவர் பட்டம் மேற்கொள்வதற்கு உறுதுணையாக இருந்த என் **பெற்றோருக்கும்**, எனது ஆய்விற்கு பல வகையிலும் உதவி புரிந்த எனது கணவர் **செ. உதயகுமார்** அவர்களுக்கும், எனது மகள் **சஞ்சனா**விற்கும் மற்றும் **என் குடும்பத்தாருக்கும்** என் நன்றி உரியதாகும்.

பல்வேறு நூல்களை பார்வையிடுவதற்கு அனுமதியளித்த **மஹேந்ரா கலை அறிவியற் கல்லூரி நூலகத்திற்கும், பெரியார் பல்கலைக்கழக நூலகத்திற்கும், பாரதியார் பல்கலைக்கழக நூலகத்திற்கும், நாமக்கல் மாவட்ட மைய நூலகத்திற்கும், ஈரோடு மாவட்ட மைய நூலகத்திற்கும், சேலம் மாவட்ட மைய நூலகத்திற்கும்** என் நன்றியை உரித்தாக்குகின்றேன்.

ஆய்வேடு சிறந்த முறையில் தட்டச்சு செய்து வடிமைத்துக் கொடுத்த **ஆய்வுப் பூங்கா** நிறுவனத்திற்கும் எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

**(பெ. தாமரைச்செல்வி)**

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகத். | - | அகத்திணையியல் |
| அகம் | - | அகநானூறு |
| உ.ஆ | - | உரை ஆசிரியர் |
| ஐங் | - | ஐங்குநுறூறு |
| கம்ப | - | கம்பராமாயணம் |
| கலித் | - | கலித்தொகை |
| கார் | - | கார்ப்படலம் |
| குறள் | - | திருக்குறள் |
| குறுந் | - | குறுந்தொகை |
| சிலம்பு | - | சிலப்பதிகாரம் |
| சிறுபாண் | - | சிறுபாணாற்றுப்படை |
| தொ | - | தொகுதி |
| தொ. ஆ | - | தொகுப்பு ஆசிரியர் |
| தொல் | - | தொல்காப்பியம் |
| நற் | - | நற்றிணை |
| நூ | - | நூற்பா |
| ப | - | பக்கம் |
| பக் | - | பக்கங்கள் |
| பா | - | பாடல் |
| பா. அ | - | பாடல் அடி |
| பா. அடி | - | பாடல் அடிகள் |
| ப. ஆ | - | பதிப்பு ஆசிரியர் |
| பதிற் | - | பதிற்றுப்பத்து |
| புறம் | - | புறநானூறு |
| பொருந | - | பொருநராற்றுப்படை |
| பொருள் | - | பொருளதிகாரம் |
| மரபு | - | மரபியல் |
| மலைபடு | - | மலைபடுகடாம் |
| மெய் | - | மெய்ப்பாட்டியல் |
| மேலது | - | மேலே கூறப்பட்ட நூல் |

# பொருளடக்கம்

# முன்னுரை

தமிழ் இலக்கிய வரலாற்றில் சங்ககாலம் மிகத் தொன்மையான காலமாகும். வரலாற்று ஒளி படரும் எல்லைக்குள் சங்ககாலம் இருப்பதை ஆய்வாளர்கள் எடுத்துக்காட்டியுள்ளனர். யவனர் போன்ற அயல் நாட்டினரையும், நந்தர், மோரியர் போன்ற வடநாட்டினரையும் பற்றிச் சங்க இலக்கியம் குறிப்பிடுகிறது. பழங்காலப் புலவர்கள் நாட்டின் அனைத்துப்பகுதிகளிலும் தோன்றி ஆங்காங்குப் பலவகையான பாடல்களை இயற்றியிருந்தனர். அவை பல்லாயிரக்கணக்கில் புலவர்களின் இருப்பிடங்களிலும் அரண்மனைகளிலும் காணப்படுகின்றன. நாட்டின் பல பகுதிகளிலும் சிதறுண்டு கிடந்தவற்றில் பல காலப்போக்கில் அழிவுக்குள்ளாகியிருந்தன. பின்பு அழிந்து மறைந்தவை போக, எஞ்சியிருந்த பாடல்களைக் காப்பது என்ற எண்ணம் புலவர்கள், புரவலர்களிடையேயும் எழுந்தன. மேலும் அவர்களின் முயற்சியால் தொகுக்கப்பட்டவைகளே எட்டுத்தொகை என்னும் தனித்தனிப்பாடல்களின் தொகை நூல்களாகவும், பத்துப்பாட்டு என்னும் நீண்ட பாடல்களின் தொகுதிகளாகவும் காணப்படுகின்றன.

சங்க இலக்கியப் பாடல்களில் பழைய மரபுகள் பல உண்டு. அவற்றில் காதல் பற்றிய கற்பனையை அகம் என்றும், வீரம், கொடை, புகழ் முதலியவற்றைப் புறம் என்றும், பாகுபாடு செய்த விதம் பழைய மரபுகளுள் ஒன்றாகும். அகப்பாட்டுகளில் கற்பனைத் தலைவன் தலைவியின் காதல் பாடப்படும். புறப்பாடல்களில் நாட்டை ஆளும் தலைவனுடைய சிறந்த வீரச் செயல்களும், கொடைப் பண்பும், குடிமக்களுள் சிறந்தவர்களின் அருஞ்செயல்களும் பிறவும் பாடப்பட்டுள்ளன. பெரும்பாலும் அகப்பாட்டுகள் கற்பனையாகவும், புறப்பாட்டுகள் உள்ளதை உள்ளவாறு எடுத்துரைப்பதாகவும் அமைந்துள்ளன.

அகம் களவு, கற்பு என இரண்டு பிரிவினை உள்ளடக்கியது. களவு எனப்படுவது இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டம், பாங்கியற் கூட்டம் என நான்கு உட்பிரிவினை உடையதாகவும், கற்பு எனப்படுவது பிரிவு, ஊடல், புணர்தல், இருத்தல், இரங்கல் என்ற ஐந்து உரிப்பொருள்களை உடையதாகவும் இதில் பல்வேறு துறைகளும், அத்துறைகள் சார்ந்த கருத்துக்களும் மாந்தர்தம் கூற்றுகளும் சிறப்பாகக் கட்டமைக்கப்பட்டுள்ளன. காதலர்தம் தொடக்க கால நிகழ்வுகளை

கைக்கிளை எனவும், பின்னர் நிகழும் நிகழ்வுகளைப் புணர்தல், இருத்தல், பிரிதல், ஊடல், இரங்கல் என முறையே குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் போன்றவற்றை ஐந்திணை என்றும், எல்லை கடந்த உணர்வு நிலைகளைப் பெருந்திணை எனவும் ஏழுதிணைகளாகப் பிரித்து பகுத்துள்ளனர். பின் அதற்கேற்ப புறமும் வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் என ஏழு வகைகளாகப் பிரிக்கப்பட்டு சங்ககாலப் புலவர்களால் சிறப்பாகக் கட்டமைக்கப்பட்டுள்ளன. இவ்வாறு இலக்கியம் திணை இலக்கியமாக அமைந்து அகமும் புறமுமாக வளர்ந்துள்ளது. இது வேறு எம் மொழியிலும் இல்லாத தமிழில் மட்டுமே காணப்படும் தனிச்சிறப்பு உடையதாக அமைந்துள்ளது.

மனித மாண்புகள் நிறைந்த மிகச் சிறப்புடைய விழுமியங்கள் சிறப்பானதொரு இலக்கியக் கட்டமைப்பினைக் கொண்டு பத்துப்பாட்டு நூல்கள் விளங்குகின்றன. இங்கு கட்டுதல் என்பதற்கு அமைத்தல், ஒட்டுமொத்தமாகச் சேர்த்தல், வசப்படுத்துதல் எனப் பல பொருள்கள் உண்டு என வையாபுரிப்பிள்ளையின் தமிழ் அகராதி (தொகுதி-I) எடுத்துரைக்கிறது. அதாவது எந்தவொரு பொருளாயினும் அதனைத் திட்டமிட்டு ஒழுங்குபடுத்தப்படும் அமைப்பே கட்டமைப்பாகும். இவ்வமைப்பானது பத்துப்பாட்டு என்னும் நீண்ட பாடல்களில் எவ்வாறு அமைக்கப்பட்டுள்ளன என்பதை ஆராயும் விதமாக இவ்வாய்வு அமைந்துள்ளது.

## ஆய்வுத் தலைப்பு

**“கட்டமைப்பியல் நோக்கில் சங்கப்பாடல்கள்”** என்பதே இவ்வாய்வேட்டின் தலைப்பாக அமைகின்றது.

## ஆய்வு நோக்கம்

இலக்கியங்களில் காணலாகும் திணைகள், இயற்கைச் சூழல் மற்றும் சமூக அமைப்பானது எவ்வாறு கட்டமைக்கப்பட்டுள்ளன என்பதையும், பாடுபொருள் அடிப்படையில் பாடல் அமைக்கப்பட்ட விதத்தினையும் உலகிற்கு வெளிக்கொணர்வதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

## கருதுகோள்

சங்க இலக்கியம் பொதுவாக காதலையும் வீரத்தையும் மையமாகக் கொண்டே அமைக்கப்பட்டுள்ளன. சங்ககாலத்தமிழர்கள் தங்களுக்கென தனிநெறி வகுத்து அக வாழ்விலும், புறவாழ்விலும் சிறந்து விளங்கினர்.

இவ்விரு வாழ்விலும் முறைபிறழாப் பொது நெறி காத்துத் தமிழர்கள் வாழ்வொழுக்கத்தை உலகில் தனிநிலை பெற்று சிறக்கச் செய்தனர். இத்தகைய சிறப்புகள் பொருந்திய பத்துப்பாட்டினை அமைப்பியல் நோக்கில் ஆராய்வதே இவ்வாய்வின் கருதுகோளாகும்.

## ஆய்வு எல்லை

சங்க இலக்கியங்களான பத்துப்பாட்டு நூல்களில் இடம்பெறும் **முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை** என்ற ஐந்து நூல்கள் மட்டுமே ஆய்வு எல்லையாக அமைகின்றன.

## ஆய்வு ஆதாரங்கள்

ஆய்விற்குரிய அடிப்படை ஆதாரங்கள் **முதன்மை ஆதாரங்கள், துணைமை ஆதாரங்கள்** என இரு வகையாக அமைகின்றன.

## முதன்மை ஆதாரங்கள்

1. முல்லைப்பாட்டு
2. மதுரைக் காஞ்சி
3. நெடுநல்வாடை
4. குறிஞ்சிப்பாட்டு
5. பட்டினப்பாலை

ஆகிய கழக வெளியீட்டின் ஐந்து நூல்களும் ஆய்வின் முதன்மை ஆதாரங்களாக அமைகின்றன.

## துணைமை ஆதாரங்கள்

ஆய்விற்கு அரண்சேர்க்கும் வகையில் அமைந்த **சங்க இலக்கிய நூல்கள், திறனாய்வு நூல்கள், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ஆய்வுக்கட்டுரைகள், ஆய்வேடுகள், இதழ்கள் வலைத்தளங்களில் பெறப்பட்ட தரவுகள்** ஆகியவை துணைமைச் சான்றாதாரங்களாக அமைந்துள்ளன.

## ஆய்வு முன்னோடிகள்

1. அ.ஆலிஸ் - **"கட்டமைப்பு நோக்கில் அகநானூறும் புறநானூறும்"**
2. எல்.இராமமூர்த்தி - **"தமிழ் இலக்கியங்கள் கட்டவிழ்ப்பும் கட்டமைப்பும்"**
3. ஜெ.நிஷாந்தினி - **"புலவர்கதைகள் : வகைமை, கட்டமைப்பு ஆய்வு"** (முனைவர் பட்ட ஆய்வேடு)

4. ந.வேலம்மாள் - **"தமிழ் இதழ்களில் கட்டமைப்புக்கூறுகள்"**
5. செ.வை.சண்முகம் - **"கவிதைக்கட்டமைப்பு"** முதலான ஆய்வுநூல்கள், ஆய்வேடுகள் போன்றவை இவ்வாய்விற்கு ஆய்வு முன்னோடிகளாக விளங்குகின்றன.

## ஆய்வு அணுகுமுறைகள்

இவ்வாய்வில்,

1. **அமைப்பியல் முறை ஆய்வு அணுகுமுறை (Structural Approach)**
2. **பகுப்பு முறை ஆய்வு அணுகுமுறை (Analytical Approach)**
3. **விளக்கமுறை ஆய்வு அணுகுமுறை (Descriptive Approach)**
4. **ஒப்பீட்டாய்வு அணுகுமுறை (Comparative Approach)**
5. **மதிப்பீட்டு முறை ஆய்வு அணுகுமுறை (Evaluation Approach)**
6. **சமூகவியல் ஆய்வு அணுகுமுறை (Sociological Approach)** போன்ற அணுகுமுறைகள் இவ்வாய்வில் பின்பற்றப்பட்டுள்ளன.

## இயல் பகுப்பு

இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை, நீங்கலாக ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளன.

| | | |
|---|---|---|
| | | **முன்னுரை** |
| **இயல் ஒன்று** | - | **பத்துப்பாட்டு அமைப்பும் தொகுப்பும்** |
| **இயல் இரண்டு** | - | **திணை அமைப்பும் பாகுபாடும்** |
| **இயல் மூன்று** | - | **இயற்கையும் வருணனைஅமைப்பும்** |
| **இயல் நான்கு** | - | **பாடுபொருளும் பாடல் அமைப்பும்** |
| **இயல் ஐந்து** | - | **கட்டமைப்பியல் நோக்கில் சமூகம்** |
| | | **முடிவுரை** |
| | | **துணைநூற்பட்டியல்** |

## முன்னுரை

ஆய்வுப் பொருளின் சிறப்பு, ஆய்வுத்தலைப்பு, ஆய்வு நோக்கம், கருதுகோள், ஆய்வு எல்லை, ஆய்வு மூலம், ஆய்வு அணுகுமுறை, ஆய்வு பகுப்பு என்னும் முறைமையில் ஆய்வேட்டின் கட்டமைப்பையும் தன்மையையும் அறிமுகம் செய்யும் வகையில் ஆய்வேட்டின் முன்னுரை அமைந்துள்ளது.

## இயல் ஒன்று – பத்துப்பாட்டு அமைப்பும் தொகுப்பும்

**‘பத்துப்பாட்டு அமைப்பும் தொகுப்பும்’** என்னும் இவ்வியல் சங்கம் வைத்து தமிழாராய்ந்த சூழலில் சங்கம் தோன்றிய காலம் எவை என்பன பற்றியும், பத்துப்பாட்டு நூல்களின் தன்மை, பத்துப்பாட்டின் அமைப்பு முறை, அதன் பல்வேறு சிறப்புகள், தொகுப்பு முறை, பத்துப்பாட்டை பதிப்பிக்க எடுத்த முயற்சிகளும் அதில் முக்கிய முதல் மூன்று பதிப்பு வரலாறும், பதிப்பு முன்னோடிகள் யார் என்பதைப் பற்றியும், நூல்களைப் பதிப்பிக்க அறிஞர்கள் எடுத்துக்கொண்ட நெறிமுறைகள், பத்துப்பாட்டு பதிப்பு வெளியீடுகள், பெயர் வைப்புமுறை, பத்துப்பாட்டு நூல்களில் தனித்தனியாக பெயர் சூட்டப்பட்ட விதம் போன்றவற்றை ஆராய்ந்து இவ்வியல் வெளிப்படுத்தியுள்ளது.

## இயல் இரண்டு – திணை அமைப்பும் பாகுபாடும்

**‘திணை அமைப்பும் பாகுபாடும்’** என்னும் இரண்டாம் இயலில் இலக்கியம் எவ்வாறெல்லாம் பாகுபாடு செய்யப்பட்டுள்ளன என்பதையும், திணை என்பதன் சொற்பொருள் விளக்கம், திணை இலக்கியக் கொள்கைகள், திணைப்பாகுபாடு, அகம் என்ற சொல்லின் பெயரும் பொருளும், அகத்திணையின் பாகுபாடுகள் குறித்தும், முதற்பொருள், கருப்பொருள் மற்றும் உரிப்பொருள்கள் இலக்கியங்களில் அமைந்துள்ள தன்மை, பிரிவு ஆற்றாமை, புறத்திணை என்பதன் பொருள் பற்றியும், புறப்பாடல்களில் போர் முரசு, மன்னன் போரில் வெற்றி பெறும் சிறப்பு போன்றவற்றை ஒப்பீட்டு முறையில் ஆராய்ந்து உலகிற்கு பல்வேறு கருத்துக்களை வெளிப்படுத்துவதாக இவ்வியல் அமைக்கப்பட்டுள்ளன.

## இயல் மூன்று - இயற்கையும் வருணனைஅமைப்பும்

**‘இயற்கையும் வருணனைஅமைப்பும்’** என்னும் மூன்றாம் இயலில் பழங்கால மக்கள் இயற்கையோடு இயைந்து வாழ்ந்த வாழ்வினையும், சூரியன், மலை, மழை, அருவி மற்றும் குளிர்கால நிலையை வருணிக்கும் பாங்கினையும், கூதிர் காலத்தில் பறவைகள், விலங்குகள் மற்றும் மகளிர்களின் நிலையையும், கூதிர்காலத்தில் பயன்படாத பொருட்கள் எவை எவை என்பவை பற்றியும், பூக்கள், பூக்களின் வேறுபெயர்கள், அதன் பூக்களின் வகைகள் பற்றியும், முதிர்ந்த நெற்கதிர்களின் காட்சிகள், தலைவன் தலைவியின் அழகை வருணிக்கும் பாங்கினையும், மகளிர் கிளிகளை ஓட்டும் காட்சி, காவிரியின் வளத்தை வருணிக்கும் தன்மை,

தலைவியின் அந்தபுர வருணனை, கட்டிலின் ஒப்பனைத்திறம், தலைவன் வெற்றி பெற்று மீளுமிடத்து வழியில் காணும் அழகான இயற்கைக் காட்சி போன்றவற்றையும் தக்கச்சான்றுகளுடன் தெளிவாக ஆராய்ந்து விளக்கப்பட்டுள்ளன.

## இயல் 4 : பாடல் அமைப்பும் பாடுபொருளும்

**'பாடுபொருளும் பாடல் அமைப்பும்'** என்னும் நான்காம் இயலில் இலக்கியம் எவ்வகையான பாடுபொருளைக் கொண்டு பாடப்பட்டுள்ளன என்பதையும், அதன் அமைப்பினையும், பாடல் கட்டமைக்கப்பட்டுள்ள விதத்தினையும், முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை என்ற ஐந்து நூல்களிலும் உள்ள நீண்ட பாடல்களை அமைக்கப்பட்ட விதத்தையும், பாடப்பட்ட பாடுபொருளின் தன்மையையும் அதன் கட்டமைப்பையும் மதிப்பீடு செய்து அவை இலக்கிய உலகில் எத்தகைய மதிப்பீட்டைப் பெற்றுள்ளன என்பதை வெளிக்காட்டுவதாக அமைந்துள்ளது.

## இயல் 5 : கட்டமைப்பியல் நோக்கில் சமூகம்

**'கட்டமைப்பியல் நோக்கில் சமூகம்'** என்னும் ஐந்தாம் இயலில் சமுதாயம் என்பதன் விளக்கம் பற்றியும், மக்களை மாக்களிடமிருந்து பிரித்துக் காட்டுபவை பண்பாடுகளே ஆதலின் பண்பாடு என்பதன் சொற்பொருள் விளக்கம் பற்றியும், சங்ககால மக்களிடம் காணப்படும் நாகரிகத்தையும் அவர்தம் பண்பாடுகளையும் அவர்களிடம் காணலாகும் காதல், வீரம், வாழ்க்கை மேன்மையுற நடத்தப்படும் இல்லறப்பாங்கு, பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள், சமய வாழ்வு, நானிலத்தெய்வ வழிபாடு, நிமித்தமும் சடங்குமுறைகளும், வெறியாட்டு, மக்கள் பின்பற்றும் உணவு, உடை, உறைவிடம், அணிகலன்கள், விளையாட்டு மற்றும் மக்களின் வானியல் அறிவு, அவர்களின் தொழில்கள், வணிகம், வணிகர்களுக்கேயுரிய நடுநிலைமை, பண்டமாற்றுமுறை, அட்டில்சாலைகளின் தன்மைகள் போன்றவற்றை இவ்வியலில் தெளிவாக ஆராயப்பட்டுள்ளன.

## முடிவுரை

ஆய்வின் இறுதியாக முடிவுரை அமைகின்றது. முடிவுரையில் ஒவ்வொரு இயலிலிருந்தும் பெறப்பட்ட ஆய்வு முடிவுகள் தொகுத்துத்தரப்பட்டுள்ளன.

## துணைநூற்பட்டியல்

ஆய்விற்குப் பயன்பட்ட அகாரதிகள், ஆய்வேடுகள், நூல்கள் போன்றவற்றை துணைநூற்பட்டியலில் முடிவுரைக்குப் பின் தொகுத்து தரப்பட்டுள்ளன.

## ஆய்வுப் பயன்

பத்துப்பாட்டில் உள்ள ஒவ்வொரு நீண்ட பாடலும் கவிச்சுவை நிரம்பியதாகவும் உள்ளத்தை உள்ளவாறு கூறும் இயல்பினை உடையதாகவும், பொருள் தெளிவும் சொற்சிறப்பும் உடையதாகவும் காணப்படுகிறது. இதில் வெற்றுச்சொற்களைக் காண்பது அரிது. இவ்வகையான இலக்கியங்களில் இனிமை, எளிமை, அளவு மீறாக் கற்பனை போன்றவை மக்கள் மனதில் நீங்கா இடம்பெற்றுள்ளன. வாழ்க்கையை இன்பம் மிகுந்ததாக்கித் துன்பத்தையும் இன்பமாய்க் கொள்ளுகின்ற மனநிலையை இலக்கியங்கள் தருகின்றன.

பத்துப்பாட்டுப் பாடல்களுள் முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, குறிஞ்சிப்பாட்டு, நெடுநல்வாடை, பட்டினப்பாலை போன்ற ஒவ்வொன்றும் ஒரே கருத்தை மட்டும் கூறாது, தாம்பாடும் சமூகச் சூழலுக்கேற்ப அச்சமூகத்திற்குப் பயன்தரும் வகையில் சமூதாய நிகழ்வுகளை எடுத்துக்கூறுவதாக அமைந்துள்ளன.

இப்பாடல்களில் அமைந்துள்ள பாடுபொருளான காதல், வீரம் போன்றவை எடுத்துக் கூறுவதன் வாயிலாக சங்ககால மக்களின் நம்பிக்கைகளையும் பண்பாடுகளையும் இன்றையச் சமூகம் உணர்ந்து கொள்ள இவ்வாய்வு ஒரு வாய்ப்பாக அமைந்துள்ளது.

எப்படியும் வாழ்வது வாழ்க்கையல்ல. இப்படித்தான் வாழ்வது வாழ்க்கை என்ற வாழ்வின் நெறிமுறைகளை அக்காலச்சூழலுக்கேற்ப பாட்டின் வழி தந்தவர்கள் நம் புலவர் பெருமக்கள். வாழ்க்கையின் பயனாகக் காதலையும் வீரத்தையும் எடுத்துக்கூறும் சங்க இலக்கியங்கள் தாங்கள் இயற்றிய ஒவ்வொரு பாடலையும் நிலப்பாகுபாட்டின் அடிப்படையில் கட்டமைத்த விதம் சிறப்புக்குரியதாகும். சங்க இலக்கியங்கள் பற்றி ஆய்வாளர்கள் பல்வேறு தலைப்புகளில் ஆய்வு மேற்கொண்ட போதிலும், கட்டமைப்பியல் நோக்கில் (பாட்டும் தொகையும்) ஆய்வு செய்வது ஒரு புதிய முயற்சியாகும்.

பாடலின் அமைப்பினையும் அதில் பொதிந்துள்ள கருத்துக்களையும் எடுத்தியம்புவதன் மூலம் கற்போர் மனதில் பாடல்கள் படிப்பதற்கு எளிமையானவை என்ற எண்ணங்கள் தோன்றுவதோடு மட்டுமல்லாது அவர்கள் சிறந்த இலக்கியங்கள் படைப்பதற்கும் அவ்விலக்கியங்கள் வழிநின்று மக்கள் சிறந்தோங்குவதற்கும் இவ்வாய்வு நல்வித்தாக அமையும் என்பதில் ஐயமில்லை.

# இயல் – 1

## பத்துப்பாட்டு அமைப்பும் தொகுப்பும்

# இயல் - 1

# பத்துப்பாட்டு அமைப்பும் தொகுப்பும்

சங்க இலக்கியங்களை ஆங்கிலத்தில் மொழியாக்கம் செய்யும் பணி 1940 களிலேயே தொடங்கிவிட்டது. சங்க இலக்கியப் பாடல்களை முழுமையாகப் புரிந்து கொள்வதற்கு வெறும் எழுத்தறிவு மட்டும் போதாது. மரபிலக்கணமும் தெரிந்திருத்தல் வேண்டும். அப்போதுதான் சங்க இலக்கியப் பாடல்களை முழுமையாகவும் எளிமையாகவும் புரிந்து கொள்ள முடியும். இங்கு மரபிலக்கணம் என்பது அகம் புறம் பற்றிய மரபாகும். அக இலக்கியங்கள் மனித மனத்தை சமூகச் சூழலோடு ஒன்றி வாழ வைக்கின்றன. ஆனால் புற இலக்கியங்கள் மனிதனின் வீரம், கொடை,ஈகை, பண்பு போன்றவற்றை எடுத்தியம்புவதாக அமைந்துள்ளன. இவ்வாறு பல்வேறு பண்புகளை வெளிப்படுத்தும் பத்துப்பாட்டின் அமைப்பினை இவ்வியல் ஆராய முற்படுகின்றன.

## 1.1 சங்கமும் காலமும்

சங்க இலக்கியம் என்பது சங்கமிருந்து தமிழாராய்ந்த காலத்தை நினைவிற் கொண்டு வழங்கி வரும் பெயராகும். புலவர்கள் கூடும் பேரவையம் ஒன்றைப் பாண்டிய மன்னர்கள் தம்தம் தலைநகர்களில் அமைத்துப்போற்றினர். கடல்கோள்களால் தமிழ் இலக்கியங்கள் அழிந்துபடுமோ என்ற அச்சம் தோன்றிய போது இவ்வவையப் புலவர்கள் பல்வேறு திணைப் பாடல்களைப் பாடித்தொகுத்தும் முன்னரே பாடப்பெற்றிருந்தவற்றைச் சேர்த்தும் காக்கும் பணியில் ஈடுபட்டனர்.

“சங்கத் தொகைப் பாடல்கள் அனைத்தும் அகம் புறமாகிய திணை பற்றியவாதலின் அவற்றைத் ‘திணையிலக்கியம்’ என்று வகைமை சுட்டுதலே பொருத்தமுடையதாகும்”[1] என்று தமிழண்ணல் குறிப்பிடுகின்றார். இத்திணைப் பாடல்கள் இன்று கிடைத்துள்ள தமிழ் இலக்கியங்கள் அனைத்திலும் தொன்மை மிக்கனவாகும். காலத்தால் முற்பட்ட தமிழ் இலக்கியம் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை எனத் தொகுக்கப்பட்டு ஒரு வரையறைக்குட்பட்டு விளங்குவதை உணரமுடிகின்றன.

## 1.2 பத்துப்பாட்டு

தமிழ் இலக்கியத்தை சங்ககால இலக்கியம், இடைக்கால இலக்கியம், பிற்கால இலக்கியம் என மூன்று வகையாகப் பிரிக்கலாம். பாண்டியர்

வழிவழியாகச் சங்கம் வைத்துத் தமிழை வளர்த்த காலமே சங்ககாலம் எனலாம். சங்க காலத்தின் எல்லையை இராசமாணிக்கனார், "கீழ் எல்லை ஏறத்தாழ கி.பி. 300 எனவும், மேல் எல்லை வரையறுத்துக் கூற இயலாத பழமை உடையது"[2] என்று கூறுகின்றார்.

பரந்துபட்ட அச்சங்ககாலத்தில் செய்யப்பட்ட இலக்கிய நூல்களும், இலக்கண நூல்களும் எண்ணற்றவை என்பதைத் தொல்காப்பிய பேரிலக்கணத்தாலும் அதன் உரைகளாலும், சிலப்பதிகாரம், யாப்பருங்கலம், இறையனார் களவியல் ஆகியவற்றின் உரைகளாலும் அறியப்படுகின்றன. பத்துப்பாட்டு என்னும் நூலில் பத்து நெடும்பாடல்கள் அடங்கியுள்ளன. இதனை,

**"முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை**
**பெருகு வளமதுரைக் காஞ்சி – மருவினிய**
**கோல நெடு நல்வாடை கோல்குறிஞ்சிப் பட்டினப்**
**பாலை கடாத்தொடும் பத்து"**[3]

என்கிறது பழம் வெண்பா பாடல். அவை திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம் என்பவையாகும். அவற்றுள் மிகச்சிறியது முல்லைப்பாட்டு. இது 103 அடிகளை உடையது. இதில் மிகப்பெரிய பாட்டு மதுரைக்காஞ்சி. இது 782 அடிகளை உடையதாகக் காணப்படுகின்றது.

பத்துப்பாட்டுள் திருமுருகாற்றுப்படை சமயத் தொடர்பானது. முல்லைப்பாட்டும், குறிஞ்சிப்பாட்டும் அகப்பொருள் பற்றியவை. பொருநராற்றுப்படையும், பட்டினப்பாலையும் கரிகாலன் மீது பாடப்பட்டதாகும். நெடுநல்வாடையும், மதுரைக்காஞ்சியும் பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டிய நெடுஞ்செழியன் மீது பாடப்பட்டவையாகும். பெரும்பாணாற்றுப்படை தொண்டை நாட்டை ஆண்ட தொண்டைமான் இளந்திரையன் மீது பாடப்பட்டது. சிறுபாணாற்றுப்படை தொண்டை நாட்டை, அடுத்து ஓய்மா நாட்டை ஆண்ட நல்லியக்கோடன் மீது பாடப்பட்டுள்ளது.

மலைபடுகடாம் தொண்டை நாட்டு பல்குன்றக் கோட்டத்தை ஆண்டு வந்த நன்னன் மீது பாடப்பட்டுள்ளது. எனவே இப்பாடல்கள் தொண்டை நாடு, ஓய்மாநாடு, சோழநாடு,பாண்டிய நாடு ஆகிய நாடுகளைப் பற்றிக் கூறுவதாக எழுந்துள்ளன. மேலும் அந்நாடுகளை ஆண்ட அரசர்களின் வீரச்சிறப்பையும், கொடைச் சிறப்பையும், ஆட்சி சிறப்பையும் நாட்டு அமைப்பு மற்றும் பல திறப்பட்ட மக்களின் வாழ்க்கை முறையினையும் படம் பிடித்துக் காட்டுகின்றன. அப்பாடல்கள் அனைத்தும் கி.பி முதல் மூன்று நூற்றாண்டுகளைச் சேர்ந்தவையாகும். ஆதலால் அம்மூன்று நூற்றாண்டுகளிலும் நிலவிய தமிழ்நாட்டு அரசியல், மக்கள் வாழ்க்கை, பயிர்த்தொழில், கைத்தொழில், சமயம், நாகரிகம், பண்பாடு முதலியவற்றை அப்பாடல்களின் துணையைக் கொண்டு அறியமுடிகின்றன.

## 1.3 பத்துப்பாட்டின் அமைப்பு

இலக்கியப் பாடல்களுக்கு இன்றியமையாதது அதன் அமைப்பு முறையேயாகும். தமிழ் இலக்கியப் பாடல்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு அமைப்பில் பாடப்பெற்றுள்ளன. பாடல்கள் மக்களின் மனதில் பதிவதற்கு காரணம் அதன் அமைப்பு முறையேயாகும். இவ்வகையில் நோக்கும் போது பத்துப்பாட்டு பாடல்கள் எவ்வகையில் அமைக்கப்பட்டுள்ளன என்பதைக் கீழ்க்கண்டவாறு காண முடிகிறது.

“அமைப்பு என்னும் போது அதற்குள்ள தனிமங்களும் (Basic Elements) அவைகள் இணைக்கிற–கட்டமைக்கிற முறையும் முக்கியமானது. கட்டமைப்பில் இரண்டு கூறுகள் அடிப்படையானது. ஒன்று நீள்தொடர் அல்லது கிடக்கை நிலைக் கட்டமைப்பு (Syntagmatic Construction) அங்கும் கட்டுப்பாடும் அமைப்பு ஒழுங்கும் உண்டு. மற்றொன்று, அடுக்குநிலை அல்லது செங்குத்து நிலை (Paradigmatic Construction) கட்டமைப்பு. இதிலும் கட்டுப்பாடும் சில ஒழுங்கு முறையும் உண்டு. மேலும் தொடர் கட்டமைப்பில் படிநிலை (Hierachical) அமைப்பு அமைந்துள்ளதும் புறநிலை அமைப்பு (Surface Structure), புதைநிலை அமைப்பு (Deep Structure) என்ற மாறுபட்ட அமைப்பும் சீர்மைபடுத்தப்பட்டுள்ளது. அவை ஒவ்வொன்றிலும் ஒழுங்குமுறைகள் (Patterns or Systems) இருப்பதை வலியுறுத்துவதே அமைப்பியல் எனப்படும். அந்த ஒழுங்குமுறையில் இரண்டு வகை உண்டு. ஒன்று உலகளாவியது. மற்றொன்று

தனிமொழிக்குரியது"[4] என்று செ.வை.சண்முகம் குறிப்பிடுவது ஒப்புநோக்கத்தக்கதாக உள்ளது.

தமிழ்ச் செய்யுள்கள் வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என நான்கு வகைப்படும். இவை நான்கும் வெண்பா, ஆசிரியப்பா என்னும் இரண்டனுள் அடங்கும். அதாவது வஞ்சிப்பா ஆசிரியப்பாவிலும் கலிப்பா வெண்பாவிலும் அடங்கும். எனவே ஆசிரியப்பாவும் வெண்பாவுமே மிக தொன்மை வாய்ந்தவை என்பது புலப்படுகிறது. ஆசிரியப்பாவில் நான்கு சீர்களைக் கொண்ட அடிகளே பெரும்பாலும் பயின்று வரும். இதில் அகவல் ஓசை பொருந்தியிருக்கும். இயற்சீர் பயின்றும் அயற்சீர் விரவியும் தன்தளை தழுவியும் பிறதளை மயங்கியும், நிரை நடுவாகிய வஞ்சியுரிச்சீர் பெறாமலும் வரும். சங்கத்தொகை நூல்களாகிய பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும், இரட்டைக் காப்பியங்களும் பெரும்பாலும் அகவற்பாக்களையே பெற்றுள்ளன. அத்தகைய நீண்ட அகவற்பாக்களின் தொகுப்பே பத்துப்பாட்டாகும். இதில் ஒவ்வொரு நீண்ட பாடலும் பல கருத்துக்களை எடுத்துரைக்கின்றன. பத்துப்பாட்டைப் பற்றி, "பத்துவகை மலர்களின் தொகுப்பாகிய மாலை போன்றது பத்துப்பாட்டைப் **'பன்மலர் மாலைத் திரள்'** என்று சுந்தர சண்முகனாரும், **'தண்டமிழ்த் தெரியல்'**[5] என்று நச்சினார்க்கினியரும் கூறுகின்றனர்.

பத்துப் பாடல்களும் ஒரு தொகை நூல்களாகும். அது அளவில் பெரிய பாடல்களின் தொகுதியாகும். ஒவ்வொன்றும் தனியாக இயங்க வல்லது. இன்று நமக்கு கிடைக்கும் பழந்தமிழ் நூல்களுள் நெடியப் பாடல்களாக பத்துப்பாட்டு அமைந்துள்ளதைக் காண முடிகிறது.

## 1.4 பத்துப்பாட்டின் சிறப்பு

இலக்கியங்கள் கருத்துகளை எடுத்து இயம்புவதோடு மட்டுமல்லாது பல சிறப்புகளையும் உடையதாகவும் காணப்படுகிறது. அவ்வகையில் பத்துப்பாட்டுக்கு பல சிறப்புகள் உண்டு.

**"ஆன்றோர் புகழ்ந்த அறிவினிற் றெரிந்து**
**சான்றோர் உரைத்த தண்டமிழ்த் தெரியல்**
**ஒருபது பாட்டும்"**[6]

என நச்சினார்க்கினியரின் உரைச்சிறப்புப் பாயிரமும்,

**"பத்துப்பாட்டாதி மனம் பற்றினார் பற்றுவரோ**

**எத்துணையும் பொருட்கிசையா இலக்கணமில் கற்பனையே"**[7]

என்னும் பேராசிரியர் சுந்தரம்பிள்ளையின் கூற்றும் பத்துப்பாட்டின் சிறப்பினை உணர்த்துகின்றன. பாட்டும் தொகையும் என்று குறிப்பிடும் போது பாட்டு என்பது பத்துப்பாட்டைக் குறிக்கும். இங்கு பாட்டு முன் கூறப்படும் பெருமையை உடையது. பத்துப்பாட்டிலுள்ள பாடல்களைப் **'பா'** என்றும், **'பாட்டு'** என்றும் குறிப்பிடுவதை இலக்கியங்கள் வாயிலாக அறிய முடிகின்றது.

## 1.5 தொகுப்பு முறை

சங்க இலக்கியங்கள் ஒவ்வொன்றும் தோன்றிய காலம் வேறு. தொகுக்கப்பட்ட காலம் வேறு. ஒரு காலக்கட்டத்தில் பாடப்பட்ட இலக்கியங்கள் சில நூற்றாண்டுகளுக்கு பிறகுதான் தொகுக்கப்பட்டது. அவ்வகையில் பத்துப்பாட்டை தொகுத்த முறையினைக் கீழ்க்கண்டவாறு காணலாம். பத்துப்பாட்டில் இடம்பெற்றுள்ள பாடல்களின் தொகுப்பு குறித்து ஔவை துரைசாமிபிள்ளை, மாயாண்டி பாரதி ஆகியோரும், திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை குறித்து பொ.வே. சோமசுந்தரனாரும், திருமுருகாற்றுப்படை குறித்து ஆறுமுகநாவலர், கி.வா. ஜகந்நாதன், தமிழண்ணல் ஆகியோரும், மலைபடுகடாம் வைப்புமுறை குறித்து லெ.ப. கரு இராமநாதன் செட்டியாரும் கருத்துத் தெரிவித்துள்ளனர். ஔவை துரைசாமிப்பிள்ளை பத்துப்பாட்டுத் தொகுப்பு குறித்து,

**"திருமுருகாற்றுப்படை, முதல் பெரும்பாணாற்றுப்படை யீறாக**
**நான்கையும் முறையே நிறுத்தி, வேறுபாடுகள் ஐந்தனை**
**இடையே நிறுத்தி இறுதியில் கூத்தராற்றுப்படையை**
**வைத்துப் பத்துப்பத்து தொகுக்கப்பட்டுள்ளது"**[8]

என்று கூறுகின்றார். பத்துப்பாட்டில் திருமுருகாற்றுப்படை முதலில் வைக்கப்பட்டதைக் குறித்து, பொ.வே. சோமசுந்தரனார்,

"நிலையுறுதலின்றி அழி தன் மாலைத்தாகிய பொருள்களை வழங்கும் மானிட வள்ளலைப் பாடிய ஏனைய ஆற்றுப்படைகளிலும் அழிதலில்லாத வீட்டின்பத்தையே வழங்கும் அழிவற்ற இறைவனைப் பாடும் இவ்வாற்றுப்படை, எவ்வாற்றலானும் சாலச்சிறந்ததெனக் கருதியே பத்துப்பாட்டுள் முதற்பாட்டாக வைத்துள்ளனர்"[9] என்று கூறுவதன் மூலம் இது இறைவனைப் பாடியுள்ளதால் முதலில் வைக்கப்பெற்றுள்ளது என்று குறிப்பிடுவதைக் காண முடிகிறது.

பத்துப்பாட்டின் காலமுறை குறித்து ஆராய்ந்துள்ள எஸ். வையாபுரிப்பிள்ளை பத்துப்பாட்டில் இடம் பெற்றுள்ள பாடல்களை,

1. பொருநராற்றுப்படை
2. பெரும்பாணாற்றுப்படை
3. பட்டினப்பாலை
4. குறிஞ்சிப்பாட்டு
5. மலைபடுகடாம்
6. மதுரைக்காஞ்சி
7. நெடுநல்வாடை
8. முல்லைப்பாட்டு
9. சிறுபாணாற்றுப்படை
10. திருமுருகாற்றுப்படை

என வரிசைப்படுத்தியுள்ளார். இவற்றுள் சிறுபாணாற்றுப்படை முதல் எட்டு நூல்களுக்கும் 2 அல்லது 3 தலைமுறைகள் பிற்பட்டுத் தோன்றியிருக்கலாம் என கருதமுடிகிறது. ஆனால் முருகாற்றுப்படை இவற்றிற்கு பல நூற்றாண்டுகள் பிற்பட்டு இயற்றப்பெற்றிருத்தல் வேண்டும் என வரிசைப்படுத்துகிறார்."[10] மேலும், பத்துப்பாட்டு நூல்கள் அகம் புறம் என்ற அடிப்படையில் முறைப்படுத்தவில்லை. திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை என்ற ஆற்றுப்படைகளோடு கூத்தராற்றுப்படையை (மலைபடுகடாம்) வைத்தால் ஆற்றுப்படைப் பாடல்கள் அனைத்தும் ஓரிடத்தில் அமைந்துவிடும். இது தவிர மதுரைக்காஞ்சியை ஆறாவதாக வைத்தால் புறப்பாடல்களின் தொகுப்பு நிறைவு பெறும்.

அடுத்து அகப்பாடல்களில் முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை என்ற மூன்றையும் அடுத்தடுத்து வைத்தால் புறப்பாடல் இறுதியாக இடம் பெற்றுள்ள காஞ்சித்திணையோடு (மதுரைக்காஞ்சி) இம்மூன்று (முல்லை, குறிஞ்சி, பாலை) அகத்திணைகளுக்குமாக மொத்தம் நான்கு திணைகளும் இடம்பெறும். பட்டினப்பாலைக்கு 'வஞ்சி நெடும்பாட்டு' என மற்றொரு பெயரும் உள்ளதால் 'பாட்டு' என்று கூறப்படும். அதனால் இது முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, வஞ்சி நெடும்பாட்டு (பட்டினப்பாலை) என்ற மூன்று நூல்களும் அடுத்தடுத்து அமைந்துவிடுகின்றன. இறுதியாக

நெடுநல்வாடையை வைத்து தொகுத்தால் அகப்பாடல்களின் வரிசை நிறைவு பெறும்”[11] என்று ந. இராணி குறிப்பிடுகிறார்.

மேற்கூறியுள்ளவாறு தொகுப்பதற்கு வாய்ப்பு இருந்தும் முறைப்படுத்தப்படாது முதலிலும் இறுதியிலும் ஆற்றுப்படைகளை வைத்தே பத்துப்பாட்டுத் தொகுக்கப்பெற்றுள்ளன. பிறிதொரு நிலையிலும் இத்தொகுப்பு இயைபு அமைந்துள்ளதைக் காணமுடிகிறது. அதாவது முதலாவது பாட்டு கடவுள் வாழ்த்தாக மட்டுமின்றி குறிஞ்சித்திணையோடு தொடர்புடையதாகவும் உள்ளது. இவ்வாறே இறுதிப்பாடல் குறிஞ்சி நிலமான மலையும் மலை சார்ந்த இடம் பற்றியதாய் குறிஞ்சி நில தெய்வத்தின் உறைவிடமான மலையோடு தொடர்புடையதாய் அமைந்துள்ளது. இவ்வாறு குறிஞ்சியில் தொடங்கி இடையில் பிற திணைகள் வர, இறுதியில் குறிஞ்சியில் முடிவதாக இத்தொகுப்பு அமைந்துள்ளதை எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

## 1.6 பதிப்பு முயற்சிகள்

தமிழ்ப் பதிப்பு முயற்சிகள் ஏறத்தாழ இருநூறு ஆண்டுகளுக்கும் மேலாக பழைமையுடையதாக விளங்குகின்றன. அச்சுக்கலை வரவால் தமிழ்ச் செம்மொழி நூல்கள் ஏட்டுச்சுவடிகளினின்றும் படியெடுக்கப்பெற்று மக்களிடையே பெரிதும் பரவின. பல நூறு ஆண்டுகளுக்குப் பின்னர் ஒரு நூலினைப் பதிப்பிக்கும் போது ஆசிரியரின் உண்மைப் பாடத்தைத் தெரிந்து பதிப்பிப்பது அரிய பணியாகும். பல்வேறு சுவடிப் பிரதிகளையும் திரட்டி மூலப்பாடத்தைத் தெரிவு செய்து பதிப்பித்தல் வேண்டும். இவ்வரிய பதிப்புப் பணியின் பெருமையைப் பின்வரும் நா.முருகவேளின் பாடல் வெளிப்படுத்துகின்றது.

**“ஏடு படித்தல் என்பது ஒரு கலை**
**எல்லோரும் ஏடு படித்தல் இயலாது**
**அதற்குத் தக்க நற்பயிற்சி பெரிதும்**
**உழைத்துப் பெறுதல் வேண்டும்**
**செல்லும் பூச்சியும் ஏட்டைச் சிதைக்கும்**
**ஏடுகள் ஒடிந்தும் கிழிந்தும் இருக்கும்**
**மெய்யெழுத்துக்கள் புள்ளி எய்தா**
**ஒற்றைக் கொம்பும் சுழியின் கொம்பும்**
**வேறுபாடின்றி ஒத்து விளங்கும்**

**காலும் ரகரமும் ஒன்றே போலும்**
**பரக யகரம் நிகர்உறத் திகழும்**
**கசதநற என்பவை வசதியாய் மாறி**
**ஒன்றன் இடத்தை மற்றொன்று கவரும்**
**எழுதுவோர் பலப்பல பிழைகளைப் புரிவர்**
**பக்கங்கள் பலப்பல மாறிக் கிடக்கும்**
**சீரும் தளையும் செய்யுள் வடிவும்**
**சரிவரத் தெரியா வரிகள் விடுபடும்**
**இத்தகு நிலைகளால் எத்தனையோ பல குழப்பமும்**
**கலக்கமும் விளைத்து நிற்கும்**
**தொன்று மொழி அந்தோ 'தோன்று மொழி' ஆகும்**
**'எதிபங்கம்' அச்சோ 'எதிர்பங்கம்' ஆம்**
**'யவமத்திமம்' எனும் எழிற்பெருஞ் சொல்தான்**
**'பவமத்திமம்' எனப் பண்பிற் பிறழும்**
**'அரிய வழக்கு' அன்னோ ஆரிய வழக்காம்**
**போரவை மாறிப் 'போர்வை' எனப்படும்**
**இணைய பல்பிழைகளை யெல்லாம் களைந்து**
**செப்பன் இட்டுத் திருத்தி அமைத்து**
**அறிஞர்கள் ஏற்ப ஆய்ந்தாய்ந்து**
**பதிக்கும் பதிப்பாசிரியர் பணியின் சிறப்பு**
**பெரிது பெரிது மிகவும் பெரிதே"**[12]

படித்தல் என்பது ஒரு கலை. அக்கலையை பயிற்சியால் மட்டுமே பெற முடியும் என்பதையும், ஆரம்பகாலத்தில் ஏடுகளின் நிலையையும், எழுத்துக்களின் அமைப்பு முறையினையும், தற்காலத்தில் எழுத்துகளின் மாற்றத்தினையும், நூல்களை பதிப்பிக்கும் முயற்சிகளையும், அதைப் பதிப்பிக்கும் பதிப்பாசிரியரின் சிறப்பினையும் கூறி பாராட்டுவதாக இப்பாடல் அமைந்துள்ளதைப் புலப்படுத்துகிறது.

## 1.7 பதிப்பு முன்னோடிகள்

தமிழ் மொழி நூல்களின் உரையில்லாத மூலங்களில் எழுத்தும் சொல்லும் குறைந்தும் பிறழ்ந்தும் திரிந்தும் பலவாறு வேறுபட்டிருந்ததன்றி, இவற்றுள் சில பாடல்களின் பின் திணை எழுதப்படாமலும் சிலவற்றின் பின்

துறை எழுதப்படாமலும், சிலவற்றின் பின் இரண்டும் எழுதப்படாமலும் பாடினோர் பெயரும் சிதைந்திருந்தன. இவற்றையெல்லாம் கூர்ந்தாய்ந்து பதிப்பித்த முன்னோடிகளாக சிலரைச் சுட்டலாம். அவர்களாவன,

1. அ.தாண்டவராய முதலியார்
2. சிவக்கொழுந்து தேசிகர்
3. திருத்தணிகை விசாகப் பெருமாளையர்
4. களத்தூர் வேதகிரி முதலியார்
5. புஷ்பரதஞ் செட்டியார்
6. ஆறுமுக நாவலர்
7. சி.வை.தாமோதரம்பிள்ளை
8. மழவை மகாலிங்கையர்
9. சாமுவேல் பிள்ளை
10. உ.வே.சாமிநாதையர்
11. எஸ்.வையாபுரிப்பிள்ளை

போன்றோராவர். பழங்கால இலக்கியங்கள் ஓலைகளில் எழுதப்பட்டதால் அவை எளிதில் விரைவில் அழிந்துவிடும் என்றெண்ணிய அறிஞர் பெருமக்கள் பதிக்கும் பணியில் ஈடுபட்டதையும், யார்யார் இப்பணியை மேற்கொண்டனர் என்பதையும் அறிய முடிகின்றது.

## 1.8 பதிப்பு நெறிகள்

நூல்களைப் பதிப்பதற்கு சில பதிப்பு நெறிமுறைகள் கையாளப்பட்டன. பழந்தமிழ்ப் பதிப்புகளில் காணலாகும். முன்னுரைகளில் பதிப்புநெறி குறித்த பல்வேறு செய்திகள் இடம்பெறுகின்றன. இதிலிருந்து பதிப்புமுன் முயற்சிகளும், முழு முயற்சிகளும், மூலப்பாட ஆய்வு நெறிமுறைகளும் தெரிய வருகின்றன. பிற இலக்கிய இலக்கணங்களின் துணைகொண்டு மூலப்பாடத்தை வரையறை செய்த தன்மையைக் குறிப்பிடுகின்றனர். அறிஞர் பெருமக்களுக்குப் பதிப்பித்த நூல்களை அனுப்பி அவர்தம் கருத்தினை அறிந்து பாடத்தைச் செம்மைப்படுத்தியுள்ளனர். அவ்வகையில் பதிப்பு நெறியில் மிகவும் இன்றியமையாத ஒன்று எவ்வகையிலும் நூலாசிரியரின் சொற்களை மாற்றாது அப்படியே பதிப்பிக்க வேண்டும் என்பதாகும். அதனை கருத்திற்கொண்டு முன்னையோர் பாடங்களில் ஐயம் ஏற்படின் அவற்றை அவ்வப்பக்கங்களின் கீழ் உரிய விளக்கங்களோடு பதிப்பித்தனர். பதிப்புக்கலை வளரவளர நூல்களை

வெளியிடும் முறையிலும் மாற்றம் நேர்ந்தது. பின் பொருள் விளக்கத்திற்காகச் சந்திகளைப் பிரித்தும் பதிப்பித்தனர். இப்பதிப்புக் கலையைப் பற்றி கி.ஆதிநாராயணன் "தொடக்க காலத்தில் பாடல்களைப் பதிப்பிக்கும் போது சந்தி பிரிக்காமலும் குறியீடுகளை அமைக்காமலும் பதிப்பித்தனர். பிற்காலத்தில் அரைப்புள்ளி, நிறுத்தற்புள்ளி, முற்றுப்புள்ளி முதலிய குறியீடுகளைப் பயன்படுத்தினர்"[13] என்று கூறுகின்றார்.

ஒரு நூலைப் பதிப்பிக்கும் போது அந்நூல் தொடர்பான அனைத்துச் சுவடிகளையும் தொகுத்து ஒப்புநோக்கி அதன் பின்னரே பதிப்பு முயற்சியில் ஈடுபட வேண்டும். மூலப்பாடங்களை முடிவு செய்வதற்குக் குழு முயற்சி இன்றியமையாததாகும். பதிப்பு நெறிமுறைகளில் இம்முறை கட்டாயம் பின்பற்றப்பட வேண்டியதாகும். எழுத்தோ, சொல்லோ கூட்டாமலும் குறையாமலும் மூல பாடத்தைக் கணித்தனர். "பதிப்பிக்கும் போது எழுத்துப் பிழையின்றி பதிப்பிக்கப்பட வேண்டும். அவ்வாறு எழுத்துப்பிழையின்றி உருவாக்கப்பட்ட பாடத்தைச் **'சரவை பார்த்த பாடம்'** என்று அறிஞர்பெருமக்கள் குறிப்பிடுகின்றனர்"[14] இவ்வாறு பல்வேறு பதிப்பு நெறிமுறைகளைச் சான்றோர்கள் பின்பற்றியதைத் தெரிந்து கொள்ள முடிகிறது. இங்கு **'சரவை'** என்பது **'எழுத்துப்பிழை'** என்ற பொருளில் கையாளப்பட்டுள்ளது. சங்க இலக்கியப் பதிப்பினை உருவாக்குவதற்குப் பின்வரும் பதிப்பு நெறிமுறைகளை பின்பற்ற வேண்டும்.

1. உரையின்றி நூல்களின் மூலம் மட்டும் கிடைக்குமிடத்துப் பிரதிகளிலுள்ள மூலத்தால் மட்டுமே திருத்தம் செய்தல்.
2. உரைகளும் உள்ள இடத்து அவற்றின் துணை கொண்டு பிரதிகளிலுள்ள மூலத்தை நோக்கில் பொருத்தமுள்ள பாடங்காணல்.
3. தொல்காப்பிய உரை முதலியவற்றில் மேற்கோளாக எடுத்தாளப்பட்டுள்ளவிடத்து ஒப்பு நோக்கி தகுதியுள்ள பாடங்காணல்.

இவற்றையெல்லாம் அடிப்படையாகக் கொண்டு சங்க இலக்கியப் பதிப்பினை உருவாக்கியுள்ளனர் என்பது தெளிவாகிறது.

## 1.9. முதல் மூன்று பதிப்புகள்

அறிஞர் பெருமக்கள் சில நெறிமுறைகளைப் பின்பற்றி நூல்களை பதிப்பித்து வந்தனர். அவற்றுள் பழந்தமிழ் பதிப்புகளுள் மிகப் பழமையானப் பதிப்பாகக் கிடைப்பது 1812 ஆம் ஆண்டில் வெளியிடப்பட்ட

திருக்குறள் பதிப்பாகும். இதுவே முதல் பதிப்பு நூலாகும். தொல்காப்பிய எழுத்ததிகாரம் நச்சினார்க்கினியர் உரையுடன் 1847 ஆம் ஆண்டு மழவை மகாலிங்கய்யரால் பதிப்பிக்கப்பட்டது. தமிழ் நூல்களின் பதிப்பு முயற்சிகளில் இதனை இரண்டாவதாகக் குறிப்பிடலாம். சங்க இலக்கியப் பதிப்பு நூல்களுள் முதன் முதலில் திருமுருகாற்றுப்படை 1851 ஆம் ஆண்டு ஆறுமுகநாவலரால் அச்சிடப்பெற்றது. இப்பதிப்பு முயற்சி தமிழ்ச்செம்மொழி நூல்களின் பதிப்பு முயற்சிகளில் மூன்றாவதாக அமைகின்றது.

## 1.10. பத்துப்பாட்டு பதிப்புகள்

பத்துப்பாட்டு நூல்களைப் பல்வேறு பதிப்பகங்கள் பதிப்பித்து வெளியிட்டுள்ளன. அவை,

1. பத்துப்பாட்டு முழுமைக்குமான பதிப்புகள்
2. ஒவ்வொரு பாட்டிற்குமான தனித்தனிப் பதிப்புகள்

என இருவகையாகப் பாகுபடுத்தலாம். பத்துப்பாட்டை ஏட்டுச் சுவடிகளிலிருந்து உ.வே. சாமிநாதையர் தான் முதன் முதலாக 1889 இல் முழுமையாகப் பதிப்பித்துள்ளார். இதன் மறுபதிப்புகள் 1918, 1937, 1961—ஆம் ஆண்டுகளில் வெளிவந்துள்ளன. மேலும், பத்துப்பாட்டினை (உ.வே.சாமிநாதையர் பதிப்பு) மறுபதிப்பாகத் தமிழ்ப்பல்கலைக்கழகம் 1986-ல் வெளியிட்டுள்ளது. இப்பதிப்பை அடுத்து, பொ.வே.சோமசுந்தரனார் உரையுடன் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் பத்துப்பாட்டை இருபகுதிகளாக வெளியிட்டுள்ளது. இவையனைத்தும் பத்துப்பாட்டு முழுமைக்குமான பதிப்புகளாகும்.

1851-இல் ஆறுமுக நாவலர் திருமுருகாற்றுப்படையையும், 1906-இல் பட்டினப்பாலையையும், 1907-இல் வா.மகாதேவ முதலியார் பொருநராற்றுப் படையையும், 1909-இல் மறைமலையடிகள் முல்லைப்பாட்டினையும் 1909-இல் சிறுபாணாற்றுப்படையும் 1912-இல் மலைபடுகடாமும் நச்சர் உரையுடன் வெளியிடப்பட்டுள்ளன. மேலும், வி.நடேசன் 1936-இல் திருமுருகாற்றுப் படைக்கு உரை எழுதியுள்ளார். இவ்வுரை குறித்து “திருமுருகாற்றுப் படைக்குத் தாம் உரை எழுத விரும்பியதாகவும், நண்பாக்ளின் வேண்டுகோளுக்கிணங்கவும் திருமுருகாற்றுப்படைக்கு உரையும் ஆராய்ச்சிக் குறிப்பும் எழுதியுள்ளதாகவும் நூல் முன்னுரையில் குறிப்பிடுகின்றார்.”[15]

மேலும், 1903-இல் முல்லைப்பாட்டு ஆராய்ச்சி உரையை சுவாமி வேதாசலம் பதிப்பித்துள்ளார். இதன் மறுபதிப்பு 1919-இல் வெளிவந்துள்ளது.

முல்லைப்பாட்டுக்கு க.ப.சந்தோஷமும், சு.நடராச பிள்ளையும் உரை எழுதியுள்ளனர். மேலும் 'பொருநர் ஆற்றுப்படை விளக்கம்' என்ற தலைப்பில் கி.வா.ஜகந்நாதன் 1985-இல் ஒரு பதிப்பை வெளியிட்டுள்ளார். 1937-இல் 'பெரும்பாணாற்றுப்படை ஆராய்ச்சியுரை' என்ற பெயரில் சு.அருளம்பலம் நூல் பதிப்பித்து வெளியிட்டுள்ளார். "மறைமலையடிகள் முல்லைப்பாட்டிற்கான ஆராய்ச்சியுரையில் நச்சினார்க்கினியர் மாறுகொளச் சுட்டும் பொருளை விடுத்து, பாடலாசிரியர் சுட்டும் நேரடிப் பொருளை விளக்கும் வகையில் தாம் உரை எழுதியுள்ளமையைக் குறிப்பிடுகின்றார்."[16]

எஸ்.வையாபுரிப்பிள்ளை திருமுருகாற்றுப்படையின் மூலத்தை மட்டும் ஆசிரியர் அகர நிரலிலான சங்க இலக்கியத் தொகுப்பின் ஒரு பகுதியாக 1943-இல் பதிப்பித்து வெளியிட்டுள்ளார்.

கழகம், பாரிநிலையம், வர்த்தமானன் பதிப்பகம், மாணிக்கவாசகர் பதிப்பகம், மெய்யப்பன் பதிப்பகம், கோவிலூர் மடாலயம், தமிழ்ப்பல்கலைக்கழகம் போன்ற பதிப்பகங்கள் பல்வேறு காலக் கட்டங்களில் பல்வேறு பதிப்பு முறைகளைப் பின்பற்றி மூலம், பழைய உரை, புத்துரை போன்ற நிலைகளில் பத்துப்பாட்டைப் பதிப்பித்து வெளியிட்டுள்ளன. இன்னும் பல பதிப்பகத்தாரும் செம்மொழி நூல்கள் வரிசையில் பத்துப்பாட்டு நூல்களைப் பதிப்பித்துள்ளனர்.

சங்க இலக்கியப் பதிப்புப் பணியில் சைவ சித்தாந்த மகாசமாஜத்தின் பணி குறிப்பிடத்தக்கது. வையாபுரிப்பிள்ளையவர்களின் தலைமையும் அறிஞர் குழுவினர் முயற்சியும் அவர்களின் உழைப்பும், ஆசிரியர் அகர வரிசை என்ற புதிய அமைப்பில் சங்க இலக்கியங்களை ஒருங்கிணைத்து ஒரே தொகுதியாக பாடல்களின் மூலம் மட்டும் சரியான பாடத்தேர்ச்சியுடன் 1940-இல் வெளியிடப்பட்டது. 1967-இல் இரண்டாம் பதிப்புப் பாரி நிலையத்தாராலும் வெளியாகியுள்ளது.

இவ்வாறு பல்வேறு நோக்குடன் பத்துப்பாட்டு நூல்கள் வெளியிடப்பட்டுள்ளன. இப்பதிப்புகளில் முழுமையான பதிப்புகள் அனைத்துமே மரபான வைப்பு முறையிலேயே பதிப்பிக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு பாட்டிற்கும் பழம் பெயர்கள் இருந்தாலும் கூட அப்பெயரீடு

பாட்டின் தலைப்பாகத் தரப்படவில்லை. இவற்றில் புதியதாய் பெயர் சேர்த்தவர் புலியூர்கேசிகன் மட்டுமே என்பது தெளிவாகிறது. மேலும் மரபான சந்தியோடன்றி எளிதில் படிப்பதற்கு ஏற்ற வகையில் சந்தி பிரித்துப் பதிக்கப்பட்ட பதிப்பு மர்ரே எஸ். ராஜம் பதிப்பாகும் என்பதும் புலனாகின்றது.

## 1.11. பத்துப்பாட்டு பெயர் வைப்பு

பத்துப்பாட்டு என்ற பெயர் ஏற்பதைக் குறித்து அறிஞர்கள் பலவாறு கருத்துக்களைக் கூறுகின்றனர். பத்துப்பாட்டு என்ற பெயர் முதன் முதலாக நன்னூல் மயிலைநாதரின் உரையில் தான் (நூ.387) கூறப்பட்டுள்ளது.

> **“ஆண்பாற் பொருட்பெயரும் பெண்பாற் பெயரும் காலப்**
> **பெயரும் சினைப்பெயரும் பண்புப்பெயரும் தொழிற்**
> **பெயரும் மரபுப்பெயரும் வழுவாமல் ஐம்பெருங்காப்பியம்**
> **எண்பெருந்தொகை, பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க்கணக்கு**
> **என்னும் இலக்கியங்களுக்குள்ளும் விரித்த உரிச்சொற்**
> **பனுவல்களுக்கு முறைத்தவறு அறிந்து வழங்குக.”**[17]

என்று கூறுவதன் மூலம் அறிய முடிகின்றது. ஆனால் இவருக்கு முற்பட்ட இளம்பூரணார் தொல்காப்பிய உரையில் பத்துப்பாட்டில் உள்ள பாடல்கள் தனித்தனிப் பெயர்களாலேயே குறிப்பிடப்பட்டுள்ளன என்று குறிப்பிடுகின்றார். பத்துப்பாட்டு பெயர் வைப்புக் குறித்து மா. இராசமாணிக்கனார், “கால அடிப்படையில் பேராசிரியருக்குப் பின்பே பத்துப்பாட்டு என்ற வழக்கு மயிலைநாதர் உரையில் காணப்பட்டமையைக் குறிப்பிடுகின்றார்”[18] மேலும், “இறையனார் களவியல் உரையில் பத்துப்பாட்டு என்பது குறிக்கப்படாமையால் பிற்காலத்தவரால் கி.பி 14-ஆம் நூற்றாண்டுக்கு முன்னர் ‘பத்துப்பாட்டு’ என வழங்கப் பெற்றிருக்கலாம் என்று வையாபுரிபிள்ளை கருதுகிறார்.”[19] மேலும், “மாரே எஸ். ராஜம் பதிப்பில் உரையாசிரியர் காலத்தில் இருந்து பத்துப்பாட்டு, எட்டுத்தொகை வழக்கில் இருப்பதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.”[20] மேலும், “பாட்டு என்பது தொகை, திரட்டு என்ற பொருள் அடிப்படையில் நச்சினார்க்கினியர் பயன்படுத்தப்பட்டுள்ளமையைச் சுந்தர சண்முகனார் குறிப்பிடுவதாக ந.இராணி குறிப்பிடுகின்றார்.”[21] ஆனால் பேராசிரியர் உரையில் பாட்டு என்னும் சொல்லால் இத்தொகை நூல் குறிப்பிடப்பட்டுள்ளதை நோக்கும் பொழுது 13 ஆம் நூற்றாண்டில் ‘பத்து’ என்னும் அடையின்றி இப்பெயர் வழங்கப்பட்டுள்ளமைத் தெளிவாகின்றது.

மேலும் 14 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த மயிலைநாதர் உரையில் ‘பத்துப்பாட்டு’ என்னும் பெயர் வருதலால் 13, 14 ஆம் நூற்றாண்டே இப்பெயர் தோன்றிய காலம் எனக் கருத முடிகிறது. ஆனால் இது தொகுக்கப்பட்ட காலப் பெயரன்று என்பது குறிப்பிடத்தக்கது.

## 1.12. பத்துப்பாட்டுகளின் தனித்தனிப் பெயரீடு

பத்துப்பாட்டில் இடம்பெற்றுள்ள பாடல்களுக்குப் பாடல்களில் இடம்பெற்றுள்ள தொடர் அடிப்படையிலும், பாடுபொருள் அடிப்படையிலும் பெயரீடுகள் அமைந்துள்ளன. இவ்வகையில் ஒவ்வொரு பாடலுக்கும் உரிய பெயரீடு குறித்த அறிஞர் கருத்துக்களும் இங்கு ஆராயப்படுகின்றன.

திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம் என்பன பத்துப்பாட்டு எனப்பெயர் பெறும். இவற்றுள், திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, மலைபடுகடாம், மதுரைக்காஞ்சி என்ற ஆறு நூல்களை புறநூல்கள் என்றும், அவற்றுள் முதல் ஐந்தும் ஆற்றுப்படை நூல்கள் எனவும், ஏனைய, முல்லைப்பாட்டு, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை என்ற நான்கு நூல்கள் அகநூல்கள் என்றும் குறிப்பிடுவர். ஆனாலும் நெடுநல்வாடை என்ற நூல் அகமா புறமா என்ற ஆய்விற்குரிய நூலாக இன்றும் கருதப்படுகிறது. இருப்பினும் இந்நூலில்

**“வேம்புதலை யாத்த நோன்கா ழெ஗.காம்”**[22]

என்ற அடிகள் பாண்டியனின் அடையாளப் பூவினைக் கூறியமையால் இது அகமாகாது புறமாயிற்று என்பதைப் புலப்படுத்துகின்றன. ‘சுட்டி ஒருவர் பெயர் கொளப் பெறார்’ (தொல். பொருள்-57) என்று தொல்காப்பியர் அகத்திற்கு இலக்கணம் கூறுவார். அவ்வகையில் நோக்கும் போது இந்நூல் அடையாளப் பூவினைக் கூறியுள்ளமையால் புறநூலாக ஏற்றுக்கொள்ள முடிகிறது.

### 1.12.1. திருமுருகாற்றுப்படை

317 அடிகளை உடைய இதன் ஆசிரியர் நக்கீரர். திருமுருகாற்றுப்படை குறித்து முருகனிடத்து ஆற்றுப்படுத்தியது, முருகனை ஆற்றுப்படுத்தியது என்ற இருவகைக் கருத்துகள் காணப்படுகின்றன. திருமுருகாற்றுப்படைக்குப் ‘புலவராற்றுப்படை’ என்ற பெயரும் அறிஞர்களால்

குறிப்பிடப்பட்டுள்ளது. திருமுருகாற்றுப்படையின் பெயரீடு பற்றி நச்சினார்க்கினியர் தொல்காப்பிய புறத்திணையியலில் (நூ-36) குறிப்பிடுகிறார். இதில் ஆற்றுப்படைக்கான இலக்கணம் குறித்து குறிப்பிடும் பொழுது,

"முருகாற்றுப்படை யென்பதற்கு முருகன்பால் வீடுபெறுதற்குச் சமைந்தான் ஓரிரவலனை ஆற்றுப்படுத்த லென்பது"[23] என்பதிலிருந்து முருகனிடம் இரவலனை ஆற்றுப்படுத்தியது எனக் குறிப்பிடுவதைக் காண முடிகிறது. திருமுருகாற்றுப்படையை புலவராற்றுப்படையென்று உ.வே.சாமிநாதையர், எஸ்.வையாபுரிப்பிள்ளை, மா.நவநீதகிருட்டிணன், பெரி.மு.இராமசாமி ஆகியோரும், புலவராற்றுப்படை அன்று என நச்சினார்க்கினியர், சு.அருளம்பலம், பொ.வே.சோமசுந்தரனார், லெ.ப.கரு இராமநாதன் செட்டியார், ந.செயராமன் ஆகியோரும் குறிப்பிடுகின்றனர். மேலும், கோ.வடிவேலு செட்டியார், "திருமுருகாற்றுப்படை யென்பதற்கு முக்தியைப் பெற்றானொருவன் பெறுதற்குப் பக்குவனாகிய ஓரிரவலனை அது பெறும்பொருட்டு ஸ்ரீசுப்பிரமணிய சுவாமியிடத்தே வழிபடுத்தலையுடைய பிரபந்தமெனப் பொருள் கூறுக"[24] என்று குறிப்பிடுகின்றார். முக்தி பெற்றவன் அதைப் பெற நினைப்பவனை ஆற்றுப்படுத்துவது என்பதற்குப் பந்த பாசங்களிலிருந்து விடுபட்டவன் அதைப் பெற நினைக்கும் பிறிதொருவனை ஆற்றுப்படுத்தியது எனப் பொருள் கொள்ள வேண்டும் என்று கூறுவதைக் காண முடிகிறது.

திருமுருகாற்றுப்படை பெயரீடு குறித்து வி. நடேசன், "முருகு+ஆறு+படை= முருகாற்றுப்படை. முருகாற்றுப்படை என்பது முருகனைப் படிமத்தானது வெறியாட்டுக் களத்திற்கு ஆற்றுப்படுத்தியதாகத் திருமுருகாற்றுப்படை 244—ஆம் அடியில் முருகாற்றுப்படுத்த என்னும் தொடரைக் கொண்டு அகநானூறு 22—ஆவது பாட்டில் "செந்தினை குருதியொடு தூஉய் முருகாற்றுப்படுத்த உருகெழு நடுநாள்'' என்னும் அடிகளைக் கொண்டும் பொருள் கூறலாம். மற்றும் முருகனை புலவனிடத்தில் வழிப்படுத்தல் எனத் திருமுருகாற்றுப்படை 284—5 அடிகளாகிய **"அளியன் தானே முதுவாய் இரவலன் வந்தோன், பெரும! நின் வண்புகழ் நயந்து"** இவற்றின் கருத்தைக் கொண்டும் பொருள் கொள்ளலாம்"[25] என்று முருகனை வெறியாட்டுக் களத்திற்கு ஆற்றுப்படுத்தியது எனவும், புலவனிடத்தில் வழிப்படுத்தியது எனவும் குறிப்பிடுகின்றார். இவற்றிலிருந்து பல ஆசிரியர்கள் புலவனை

ஆற்றுப்படுத்துவதாகக் குறிப்பிட்டிருக்க இவர் மாறுபட்டுப் புலவனிடத்து முருகனை ஆற்றுப்படுத்தியது என்று கூறுவதை அறிய முடிகின்றன.

இதில் முருகனுடைய உருவச் சிறப்பு, மாலை விசேடங்கள், ஊர்திகள், கொடி பற்றிய செய்திகள், சூரரமகளிர் செயல்கள், பரங்குன்றம், பழமுதிர்ச்சோலை மலையின் இயற்கை வளம், முருகனை வழிபடும் முனிவர்களின் இயல்புகள், குறமகள் முருகனை வழிபடுதல், முருகனுடைய ஆறுமுகங்கள், அப்பெருமான் எழுந்தருளியுள்ள இடங்கள், பன்னிரண்டு கைகள், அவன் அடியார்க்கு அருள்புரியும் திறன் முதலிய பல்வேறு செய்திகள் இடம்பெற்றுள்ளதை எடுத்துரைக்கின்றன.

### 1.12.2. பொருநராற்றுப்படை

பொருநராற்றுப்படை 248 அடிகளை உடையது. இதன் ஆசிரியர் முடத்தாமக்கண்ணியார். பொருநராற்றுப்படை என்பதற்கு உ.வே. சாமிநாதையர்,

“பரிசில் பெறக் கருதிய ஒரு பொருநனைப் பரிசில் பெற்றானொரு பொருநன் இளஞ்சேட் சென்னி புதல்வனாகிய கரிகாற் பெருவளத்தானை முடத்தாமக் கண்ணியார் பாடியது. பொருநர் ஏர்க்களம் பாடுவோர், போர்க்களம் பாடுவோர், பரணி பாடுவோர் என மூவகையினர். அவருள் இங்கு கூறப்படுபவன் போர்க்களம் பாடும் பொருநன்”[26] என்று பொருநனைப் பொருநன் ஆற்றுப்படுத்துவதாகக் குறிப்பிடுகின்றார். மா.நவநீதகிருட்டிணன், சுந்தரசண்முகனார் ஆகியோரும் பொருநனைப் பொருநன் கரிகால் பெருவளத்தானிடம் ஆற்றுப்படுத்துவதாகவே இதன் பெயர்க்காரணத்தைக் குறிப்பிடுகின்றார். மேலும் பொருநனை விளித்து,

**“ஆற்று எதிர்படுத்தலும் நோற்றதன் பயனே**
**போற்றிக் கேண்மின் புகழ் மேம்படுந”**[27]

எனப் பொருநன் ஆற்றுப்படுத்தப்படுதலால் பாடுபொருள் அடிப்படையில் இப்பெயரீடு அமைந்துள்ளது என்பதை உணர முடிகிறது.

இப்பாடல் சோழப் பேரரசனான கரிகால் வளவனிடம் பரிசில் பெற்று மீண்ட பொருநன் ஒருவன், வறிய பொருநனை வழியிற் சந்தித்து தான் கரிகாலனிடம் உதவி பெற்றதைக் கூறி,அவனை அவ்வேந்தன்பால் ஆற்றுப்படுத்தும் முறையில் பாடப்பட்டதாகும். மேலும் வறிய பொருனனது

யாழின் சிறப்பு, அவனுடன் சென்ற பாடினி வருணனை, கரிகாலனின் சிறப்பு, அவன் இரவலனை வரவேற்று உண்பிக்கும் முறை, கொடைத்தன்மை, கரிகாலன் ஆண்ட சோழநாட்டின் இயற்கை வளம் போன்றவற்றை மிக அழகாக எடுத்துரைக்கின்றன.

## 1.12.3. பாணாற்றுப்படைகள்

பாணாற்றுப்படைகள் எனப்படுபவை சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை என இரு வகைகள் உண்டு. உ.வே. சாமிநாதையர் சிறுபாணாற்றுப்படை குறித்துக் குறிப்பிடும் பொழுது, சிறுபாணாற்றுப்படைகள் பெரும்பாணாற்றுப்படைகள், சிறுபாணர், பெரும்பாணர் என்பதாலும் அடியளவாலும், சீறியாழ், பேரியாழ் என்ற யாழ் வேறுபாட்டாலும் பாகுபடுத்தப்பட்டிருக்கலாம் எனக் குறிப்பிடுகின்றார். ஆனால் மா.இராசமாணிக்கனார், "யாழ்ப்பாணர் சிறிய யாழை இசைத்துப் பாடுவோரும் பெரிய யாழை இசைத்துப் பாடுவோரும் என இருவகையினராவர். முன்னவர் சிறுபாணர் என்றும், பின்னவர் பெரும்பாணர் என்றும் வழங்கப்பெறுவர். சிறுபாணனை ஆற்றுப்படுத்தியதால் சிறுபாணாற்றுப்படை எனவும், பெரும் பாணனை ஆற்றுப்படுத்தியதால் பெரும்பாணாற்றுப்படை எனவும் பெயர் பெற்றது"[28] என்று பாணன் அடிப்படையில் பெயரீடு அமைந்துள்ளமையைக் குறிப்பிடுகின்றார். மேலும் ம.நவநீதகிருட்டிணன் "அடியின் சிறுமை, பெருமை அடிப்படையிலும் பாணர் நடந்து சென்ற தொலைவை உள்ளிட்டும் சிறுபாணாற்றுப்படை ரெும்பாணாற்றுப்படை என்ற பெயர் வந்திருக்கலாமெனக் குறிப்பிடுகின்றாா."[29] இவ்வாறு பாணாற்றுப்படைக் குறித்து பல்வேறு கருத்துக்கள் நிலவுவதைக் காண முடிகிறது.

### 1.12.3.1. சிறுபாணாற்றுப்படை

இது 269அடிகளை உடையது. ஓய்மாநாட்டை ஆண்டு வந்த நல்லியக்கோடன் என்பவனிடம் பரிசில் பெற்று மீண்டு வந்த சிறுபாணன் ஒருவன், வறிய சிறுபாணனை வழியிற் கண்டு அவனை அவ்வள்ளலிடம் ஆற்றுப்படுத்துவதாக இடைகழி நாட்டு நல்லூர் நத்தத்தனாரால் பாடப்பட்டதாகும். இப்பாட்டில் சேர, சோழ, பாண்டிய நாடுகளும் அவற்றின் தலைநகரங்கள் பற்றிய செய்திகளும், கடையேழு வள்ளல்களின் கொடைத்தன்மையும், ஓய்மாநாட்டின் கடற்கரை, முல்லை நிலம், மருதநிலம் பற்றிய செய்திகளும், எயிற்பட்டினம், வேலூர், ஆமூர், கிடங்கில் ஆகிய

ஊர்களைப் பற்றிய செய்திகளும், நல்லியக்கோடனின் கொடைத்தன்மையும், பிற பண்புகளும் சிறப்பாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

### 1.12.3.2. பெரும்பாணாற்றுப்படை

தொண்டைமான் இளந்திரையன் என்பவன் காஞ்சியைத் தலைநகரமாகக்கொண்டு தொண்டை நாட்டை ஆண்டு வந்தான். அம்மன்னனிடம் பரிசில் பெற்று மீண்ட பெரும்பாணன் ஒருவன், வறிய பெரும்பாணனையும் அவன் சுற்றத்தாரையும் வழியிற் கண்டு, அப்பெரும்பாணனை இளந்திரையன்பால் ஆற்றுப்படுத்துவதாக கடியலூர் உருத்திரங் கண்ணனாரால் பாடப்பட்டதே பெரும்பாணாற்றுப்படையாகும். இது 500 அடிகளை உடையது. இதில் வறிய பெரும்பாணன் தொண்டைநாட்டுக் கடற்கரை பட்டினத்திற்குச் செல்லும் வழி, அங்கிருந்து காஞ்சிக்குச் செல்லும் வழி, இரு வழிகளிலும் உள்ள நில அமைப்பு, பலவகை நிலங்களில் வாழும் மக்களின் உணவு, உடை, உறையுள், தொழில்கள், உள்நாட்டு வாணிகம், கடல் வாணிகம், இளந்திரையனின் வீரச் சிறப்பு, கொடைச் சிறப்பு போன்றவை இந்நெடும்பாட்டில் இடம் பெற்றுள்ளதை உணர்த்துகின்றது.

### 1.12.4. முல்லைப்பாட்டு

இது 103 அடிகளை உடையது. முல்லைப்பாட்டு என்பது குறித்து நச்சினார்க்கினியர், “முல்லை சான்ற கற்புப் பொருந்தியதனால் இல்லறம் நிகழ்த்துதற்குப் பிரிந்து வருந்துணையும் ஆற்றியிருவென்று கணவன் கூறிய சொல்லைப் பிழையாமல் ஆற்றியிருந்து இல்லறம் நிகழ்த்திய இயற்கை முல்லையாமென்று கருதி இருத்தலென்னும் பொருள் தர முல்லையென்று இச்செய்யுள் நப்பூதனார் பெயர் கூறினமையிற் கணவன் வருந்துணையும் ஆற்றியிருத்தலாகப் பொருள் கூறலே அவர் கருத்தாயிற்று”[30] என்று இருத்தலாகிய உரிப்பொருளால் திணை அடிப்படையிலான பெயரீடு அமைந்துள்ளமையைக் குறிப்பிடுகின்றார்.

இப்பாட்டில் பாசறையின் நிலை, தலைவனைப் பிரிந்த தலைவியின் துயரம், தலைவனின் மீட்சி போன்றவை முல்லையின் பாடுபொருளாக

அமைந்துள்ளன. இப்பாடலில் கார்காலத்தே விரிச்சி கேட்டல், தலைவியைத் தேற்றுதல், தலைவனைப் பிரிந்த தலைவி பெற்ற துயரம், அரசன் துயிலாது சிந்தனையில் இருத்தல், முல்லை நில இயல்பு என முல்லைத்திணைக்குரிய பாடல் கூறுகள் விரிவான நிலையில் பாடப்பட்டுள்ளன. எட்டுத்தொகைப் பாடலுக்குத் திணைத் தலைப்பு அமைந்ததைப் போல் பாடுபொருள் அடிப்படையில் இப்பாட்டுக்கு முல்லைப்பாட்டு எனப் பெயரமைந்துள்ளதைக் காண முடிகிறது.

## 1.12.5. மதுரைக்காஞ்சி

காஞ்சித்திணை என்பது உலகம் நிலையாமை, செல்வம் நிலையாமை, வாழ்வு நிலையாமை எனப் பல்வேறு நிலையாமையை எடுத்தியம்புகிறது. மதுரையிடத்து அரசனுக்குக் கூறிய காஞ்சி ஆதலின் இப்பாடல் மதுரைக்காஞ்சி எனப்பெயர் பெற்றது. இது 782 அடிகளைக் கொண்டு பத்துப்பாட்டுள் மிகப்பெரிய பாடலாகத் திகழ்கின்றது.

“காஞ்சித்திணை என்பது உலகம் நிலையாமை, செல்வம் நிலையாமை எனப் பல்வேறு நிலையாமை பற்றிச் சான்றோர் கூறும் குறிப்பை உடையது. மதுரையிடத்து அரசனுக்குக் கூறிய காஞ்சி (நிலையாமை பற்றியது) ஆதலின் இப்பாடல் ‘மதுரைக்காஞ்சி’ எனப் பெயர் பெற்றது என்றும் பாடப்பட்ட இடம், பாடப்பட்ட திணை அடிப்படையில் பெயரீடு அமைந்துள்ளதைக் குறிப்பிடுகின்றார்.[31] ஆனால் பொ.வே. சோமசுந்தரனார் மதுரைக்காஞ்சி குறித்து கூறும்போது, “பாடப்பட்ட இட அடிப்படையிலும், பாடப்பட்ட பொருள் அடிப்படையிலும் மதுரைக்காஞ்சி என்னும் பெயரீடு அமைந்துள்ளமையைக் குறிப்பிடுகின்றார்.”[32]

இப்பாடல் நெடுஞ்செழியன் தன் பகைவர் மீது படையெடுத்துச் சென்று அவர்தம் அரண்களையும் காவல் மரங்களையும் அழித்தல், சேர சோழரையும் குறுநில மன்னர் ஐவரையும் வெல்லல், பல ஊர்களைக் கைபற்றல், பவைகர் நாட்டிலிருந்து கொணர்ந்த பொருள்களைப் புலவர் முதலியவர்க்கு வழங்குதல், முன்னோர் சிறப்புகள், அம்முன்னோர் வழியில் நடத்தல், வாய்மை, கொடை முதலிய நல்லியல்புகள் இப்பாடலில் கூறப்பட்டுள்ளன. இவற்றிலிருந்து மதுரைக்காஞ்சி என்னும் பெயரீடானது திணை அடிப்படையிலும், இடஅடிப்படையிலும், பாடுபொருள் அடிப்படையிலும் அமைந்துள்ளதாகக் கருதமுடிகிறது.

### 1.12.6. நெடுநல்வாடை

நெடுநல்வாடை அகமா புறமா? என ஐயத்திற்கிடமாயிருப்பினும் வ. சுப. மாணிக்கம் புறநானூற்றில் **'தீங்கனி யிரவமொடு வேம்புமனைச் செரீஇ'**[33], **'வேம்பு சினை யொடிப்பவும்'**[34] என்ற வரிகளைச் சான்றுகாட்டி பேய் தீண்டாது காப்பு செய்தற்கு பயன்பட்டுள்ளமையைக் குறிப்பிடுகின்றார். இவர் நெடுநல்வாடையிலும் 'வேம்பு தலையாத்த' என்ற தொடருக்கு, "விழுப்புண் காணப்போர் வேந்தனுக்கு வேம்பின் வேலால் புண்ணுடையாளர்களைச் சுட்டிக்காட்டினான் என்ற நிகழ்வினைக் கருத்திற் கொண்டு நெடுநல்வாடையில் குறிப்பிட்டுள்ள வேம்பு பேய்த்தடுப்புக்கு உதவும் என்பதும், இது சமுதாய வழக்கு என்பதும், அதனையே நக்கீரர் இவ்விடத்துச் சுட்டினார் என்றும், இங்கு 'வேம்பு தலையாத்த' என்பதற்கு வேப்பந்தழை கட்டிய என்பதே பொருளாகும்"[35] என்று குறிப்பிடுவதால் இந்நெடுநல்வாடை அகப்பாடலாக கொள்ளலாம் என்று கூறுகின்றார். ஆனால் பொ.வே. சோமசுந்தரனார், "ஆசிரியர் நக்கீரனார் வாடைக் காற்றை வளம்பெறக் கூறினார். இவ்வாடைக்கு ஓரடை கொடாது ஈரடை புணர்த்தி நெடுவாடை, நல்வாடை என்று பாராட்டிக் கூறி நெடுநல்வாடை யெனப் பெயர் சூட்டினார்"[36] என வாடை குறித்து பெயரீடு வந்துள்ளமையைச் சுட்டிக்காட்டுகிறார். இது 188 அடிகளையுடையது. இதனை பாடியவர் நக்கீரர். மேலும்,

"தலைவனைப் பிரிந்திருந்து வருந்தும் தலைவிக்கு ஒரு பொழுது ஒரூழி போல நெடிதாகிய வாடையாய் பாலையாகிய உரிப்பொருள் உணர்த்திற்று. அகத்து ஒடுங்கி போகம் நுகர்வோர்க்குச் சிறந்த காலமாயினும், அரசன் போகம் வேண்டிப் பொதுச்சொல் பொறானாய் அப்போகத்தில் மனமற்று வேற்றுப்புலத்துப் போந்திருக்கின்ற இருப்பாகலின் அவற்றிற்கு நல்லதாகிய வாடை ஆயிற்று"[37] என்று நச்சினார்க்கினியர் விளக்கம் தருகின்றார். இது பாட்டின் பெயர்க்காரணத்தை நன்கு விளக்குகின்றது. இப்பாடல் குளிர்காலத்தில் மக்களும், விலங்குகளும், பறவைகளும் குளிராற் படுந்துன்பம், தலைவனைப் பிரிந்த தலைவி வாழும் அரண்மனை இயல்பு, அரண்மனை வாயிலின் அழகு, தலைவியின் கட்டிலமைப்பு, தலைவன் பிரிவால் தலைவி வருந்தும் நிலை, மகளிரும் செவிலியரும் அவளை ஆற்றுப்படுத்தல், பாசறையில் அரசன் புண்பட்ட வீரர்களைப் பார்த்து ஆறுதல் கூறுதல் போன்ற பல்வேறு நிகழ்வுகளை எடுத்துக் கூறுவதாக அமைந்துள்ளளன.

### 1.12.7. குறிஞ்சிப்பாட்டு

நச்சினார்க்கினியர் குறிஞ்சிப்பாட்டு குறித்துக் குறிப்பிடும் பொழுது, “இயற்கைப் புணர்ச்சியும் பின்னர் நிகழும் புணர்ச்சிகளுக்கு நிமித்தங்களும் கூறுதலின் அன்றியும் முதல் பொருளாலும் கருப்பொருளாலும் குறிஞ்சிக்குரியனவே கூறப்படுதலால் அப்பெயர் கூறினார்.”[38] என்று முதல், கரு, உரி என்ற மூன்று பொருளாலும் இப்பெயரீடு அமைந்துள்ளதைக் குறிப்பிடுகிறார். ஆனால் உ.வே. சாமிநாதையர் பத்துப்பாட்டு முகவுரையில், “குறிஞ்சி – புணர்தலும் புணர்தல் நிமித்தமுமாகிய ஒழுக்கத்தை உடையது. இதன்கண் இயற்கைப் புணர்ச்சியும் பின்னர் நிகழும் புணர்ச்சிகளுக்கு நிமித்தங்களும் கூறப்படுதலின் இது இப்பெயர் பெற்றது. இப்பாட்டு ‘பெருங்குறிஞ்சி’ எனவும் வழங்கப்படும்.”[39] என்று திணை, உரிப்பொருள் அடிப்படையில் பெயரீடு அமைந்துள்ளதைப் புலப்படுத்துகிறார். மேலும் பெருங்குறிஞ்சியைப் பற்றி, “இனிச் சுனைக்குவளையும் சுனையாம்பலும் உண்மை என்பதைப் பெருங்குறிஞ்சியினுள், கண்டு கொள்க”[40] என்று குறிப்பிடுவதிலிருந்து பெருங்குறிஞ்சி என்ற பெயர் இடம் பெற்றுள்ளது என்பதை அறியமுடிகின்றது. இவ்வாறு பத்துப்பாட்டின் சில பாடல்களுக்கு இரு பெயர்கள் இருப்பதைப் போல இதற்கும் இரு பெயர்கள் உள்ளன என்பதை எடுத்துரைக்கின்றன.

இப்பாடலில் தோழி அறத்தொடுநிற்றல், தலைவியின் அன்பு மிகுதி, தினைபுனம் காத்தல், சுனையில் நீராடல், தொண்ணூற்றொன்பது வகை மலர்களை பறித்து குவித்தல், தலைவன் வருகை, விலங்குகளைக் கண்டு பயப்படுதல், யானையைத் தலைவன் அம்பு எய்து துரத்தல், தலைவி தலைவனுடன் கூடிய நிலை, தலைவன் பிரிந்த நிலை, தலைவியின் துன்பம் என பல்வேறு செய்திகளை உள்ளடக்கியுள்ளமையை அறியமுடிகிறது. இங்கு குறிஞ்சி நிலத்தில் நடந்த நிகழ்வுகளாலும், புணர்தலும் புணர்தல் நிமித்தமும் இதன் உரிப்பொருளாக அமைத்துப் பாடியுள்ளமையாலும் இப்பாடல் பாடுபொருள் அடிப்படையில் பெயரீடு அமைந்துள்ளதைக் அறியமுடிகிறது.

### 1.12.8. பட்டினப்பாலை

பட்டினப்பாலை என்பதற்கு நச்சினார்க்கினியர்,“இது பட்டினத்தைச் சிறப்பித்துக் கூறிய பாலைத்திணை யாகலின் இதற்குப் பட்டினப்பாலையென்று பெயர் கூறினார். பாலையாவது பிரிதலும் பிரிதல்

நிமித்தமும் பற்றிக் கூறுவது. இப்பாட்டு தலைவன் செலவழுங்கி கூறிவதாக அமைந்துள்ளது"[41] என்று உரிப்பொருளால் பெயரீடு பெற்றுள்ளமையை குறிப்பிடுகின்றார். மேலும் பட்டினப்பாலை ஆராய்ச்சி உரையில் சுவாமி வேதாசலம் கரிகாலனின் காவிரிப் பூம்பட்டினத்தைச் சிறப்பித்துக் கூறப்பாலைத் திணையொழுக்கத்தைப் பாடி உணர்த்தியமையால் திணை அடிப்படையில் பாடலைப் பாடிய ஆசிரியராலேயே 'பட்டினப்பாலை' எனப் பெயர் குறிப்பிடப்பட்டுள்ளதாக மா.இராசமாணிக்கனார் குறிப்பிடுகின்றார்."[42] பட்டினம் - காவிரிப்பூம்பட்டினம், பாலை–பிரிவு, பட்டினத்தைச் சிறப்பித்துக் கூறிய பாலைத்திணை ஆகலின் இப்பாடல் 'பட்டினப்பாலை' எனப் பெயர் பெற்றதை உணர்த்துகின்றது. இப்பாடலில் சோழநாட்டு இயற்கை வளம், காவிரியின் சிறப்பு, கரிகாலன் போர்ச்சிறப்பு, கொடைச்சிறப்பு, காவிரிப்பூம்பட்டினத்துக் கடல் வாணிகம், பரதவர்களின் செயல்கள், வணிகர்கள், வேளாளர்களின் செயல்கள், கடைத்தெருவின் செயல்கள் போன்றவை திறம்பட இடம்பெற்றுள்ளதைக் காண முடிகிறது.

### 1.12.9. மலைபடுகடாம்

ஆற்றுப்படைகளுள் ஒன்று மலைபடுகடாம். இதன் பெயரீடு குறித்து பத்துப்பாட்டு முன்னுரையில் உ.வே. சாமிநாதையர்,

**"அலகைத் தவிர்த்த வெண்ணருள் திறத்த,**
**மலைபடுகடாஅ மாதிரத் தியம்ப"[43]**

என்ற அடிகளால் மலைக்கு யானையை உவமித்து அதன்கட் பிறந்த ஓசையைக் கடாமெனச் சிறப்பித்ததனால் இப்பாட்டு மலைபடுகடாமென்று பெயர் பெற்றது. "கடாமென்பது ஆகுபெயராய் அதனாற் பிறந்த ஓசையை உணர்த்திற்று. இது கூத்தராற்றுப்படை எனவும் வழங்கப்படும்"[44] என்று குறிப்பிடுவதால் பாடலில் இடம்பெற்றுள்ள தொடராலும் சொல்லாலும் மலைபடுகடாம், கூத்தராற்றுப்படை என்ற இரண்டு பெயரும் இந்நூலுக்கு வழங்கப்பட்டுள்ளமையைக் குறிப்பிடுகின்றார்.

இது பரிசில் பெற்று மீண்டுவந்த கூத்தன் ஒருவன் வறிய கூத்தனையும், அவன் சுற்றத்தாரையும் செங்கண்மாத்து வேள் நன்னன் சேய் நன்னன் என்பானிடம் ஆற்றுப்படுத்தும் முறையில் 583 அடிகளில் பாடப்பட்டுள்ளது. இதில் நன்னனது மலையடிவார வளம், மலை வழிகள், முல்லை, பாலை, மருத நிலங்களின் தன்மை, மலைகளில் கேட்கும்

பலவகை ஓசைகள், உணவுப் பொருள்கள், நவிரமலை, மலைகளில் உள்ள அரண்கள், நாடு, காவலரின் இயல்புகள், நடுகற்கள், நன்னனது அரண்மனை முற்றத்தின் சிறப்பு, நன்னன் கொடைச் சிறப்பு போன்ற பல நிகழ்வுகளை எடுத்துக்காட்டுவதாக அமைந்துள்ளதைக் காண முடிகிறது.

## 1.13. தொகுப்புரை

- ❖ இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு தோன்றியதாகக் கருதப்படும் இலக்கியங்கள் சங்க கால மக்களின் சிந்தனைகளையும் வாழ்க்கை நெறிமுறைகளையும் எடுத்தியம்புவதாக அமைந்துள்ளன.
- ❖ சங்க இலக்கியத்தை அகம் புறம் என்று இரண்டாக பகுத்த நம் சான்றோர்கள் அக இலக்கியங்கள் மக்களை சமூகச் சூழலோடு ஒன்றி வாழ வைப்பதாகவும், புற இலக்கியங்கள் மக்களின் வீரம், கொடை, பண்பு நலன்கள் போன்றவற்றை வெளிப்படுத்துவதாகவும் அமைத்து பாடியுள்ளதை குறிப்பிடப்பட்டுள்ளன.
- ❖ சங்கமிருந்து தமிழாராய்ந்த காலத்தினை நினைவிற் கொண்டு இவ்விலக்கியங்களுக்கு சங்க இலக்கியம் எனப் பெயர் பெற்றதையும், இவ்வகையான இலக்கியங்களுக்கு திணை இலக்கியம் எனப்பெயர் உண்டென என்பதையும் தெளிவாகக் கூறப்பட்டுள்ளன.
- ❖ பரந்துபட்ட அச்சங்ககாலத்தில் இயற்றப்பட்ட இலக்கிய நூல்களும் இலக்கண நூல்களும் எண்ணற்றவை என்பதை தொல்காப்பிய பேரிலக்கணத்தாலும், அதன் உரைகளாலும் சிலப்பதிகாரம், யாப்பருங்கலம், இறையனார் களவியல் போன்றவற்றின் உரைகளாலும் கண்டறியப்பட்டுள்ளன. மேலும் இலக்கியப் பாடல்கள் மக்களின் மனதில் பதிவதற்கு காரணம் அதன் அமைப்பு முறையே என்பதை விளக்கப்பட்டுள்ளன.
- ❖ தமிழ்ச் செய்யுள்கள் பெரும்பாலும் நான்கு வகை பாக்களில் ஆசிரியப்பாவும் வெண்பாவுமே பயின்று வரும். அவ்வகையில் பெரும்பாலும் சங்க இலக்கியங்கள் ஆசிரியப்பாவையே பெற்றுள்ளதைக் குறிப்பிடப்பட்டுள்ளன.
- ❖ பத்துப்பாட்டானது அகம், புறம், ஆற்றுப்படை என அமைக்காமல் முதல் பாட்டும் (திருமுருகாற்றுப்படை), இறுதிப்பாட்டும் (மலைபடுகடாம்) என முதலிலும் இறுதியிலும் ஆற்றுப்படைகளை வைத்து அமைக்கப்பட்டுள்ளதை எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

❖ பழங்கால இலக்கியங்கள் ஓலைகளில் எழுதப்பட்டமையால் அவை விரைவில் அழிந்து வருவதை அறிந்த சான்றோர் பெருமக்கள் அவைகளை ஏடுகளில் பதிக்கும் பணியில் ஈடுபட்டனர். இவர்கள் சில நெறிமுறைகளை கையாண்டு பதிப்புப் பணியில் ஈடுபட்டதை இவ்வியலில் தெளிவாக விளக்கப்பட்டுள்ளன.

❖ நூலாசிரியரின் மூல நூலில் உள்ள சொற்களை மாற்றாது அவ்வாறே பதிப்பிக்க வேண்டும் என்ற நெறியைக் கடைப்பிடித்தும், ஐயம் ஏற்படுவதாக இருப்பின் அவ்வப் பக்கங்களின் கீழ் உரிய விளக்கங்கள் அளித்தும் பதிப்பித்ததை சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.

❖ பதிப்புகளுள் மிக பழமையான பதிப்பாக 1812 ல் வெளியிடப்பட்ட திருக்குறள் பதிப்பும், 1847 ஆம் ஆண்டு மகாலிங்கய்யரால் பதிப்பிக்கப்பட்ட தொல்காப்பிய எழுத்ததிகார பதிப்பும், 1851 ல் ஆறுமுக நாவலரால் பதிக்கப்பட்ட திருமுருகாற்றுப்படையும் மிகச் சிறந்த பதிப்புகளாக வெளியிடப்பட்டுள்ளன.

❖ பத்துப்பாட்டை ஏட்டுச்சுவடிகளிலிருந்து உ.வே. சாமிநாதையர் தான் 1889 ல் முதன் முதலில் பதிப்பித்தார் என்பதை சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

❖ பல்வேறு நோக்குடன் பத்துப்பாட்டு நூல்கள் வெளியிடப்பட்டு இருப்பினும் பதிப்புகளில் முதன்மையான பதிப்புகள் அனைத்துமே மரபான வைப்பு முறையிலேயே பதிப்பிக்கப்பட்டதையும் இவ்வியலில் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

❖ பத்துப்பாட்டு என்ற பெயரானது முதன் முதலில் நன்னூல் மயிலைநாதரின் உரையில் தான் கூறப்பட்டுள்ளது. இதற்கு முன் எந்த நூலிலும் காணப்படவில்லை என்பதை விளக்கமாக குறிப்பிடப்பட்டுள்ளன.

❖ பேராசிரியர் உரையில் 'பாட்டு' என்னும் சொல்லால் இத்தொகை நூல் குறிப்பிடப்பட்டுள்ளதை நோக்கும் பொழுது 13, 14 ஆம் நூற்றாண்டே இப்பெயர் தோன்றிய காலம் என்பதை குறிப்பிடப்பட்டுள்ளன.

❖ முல்லைப்பாட்டு திணை அடிப்படையிலும், மதுரைக்காஞ்சி திணை, இடம் மற்றும் பாடுபொருள் அடிப்படையிலும், நெடுநல்வாடைக்கு ஓரடை கொடாது ஈரடை புகுத்தி நெடுவாடை, நல்வாடை என பாடப்பட்டதன் அடிப்படையிலும், குறிஞ்சிப்பாட்டு திணை, மற்றும் உரிப்பொருள் அடிப்படையிலும், பட்டினப்பாலைத் திணை அடிப்படையிலும் பெயரீடுகள் அமைந்துள்ளன. இவற்றையெல்லாம் நோக்கும் போது பொதுவாக

இப்பெயரீடுகள் பெரும்பாலும் திணை அடிப்படையிலே அமைந்துள்ளதை எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

# பின்குறிப்புகள்

1. தமிழண்ணல், புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, ப. 91.
2. இராசமாணிக்கனார். மா, பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப. 9.
3. வேங்கடராமன். கா.கோ, தமிழ் இலக்கிய வரலாறு, ப. 68.
4. சண்முகம். செ.வை, கவிதைக் கட்டமைப்பு, பக். 253 – 254.
5. ஆதிநாராயணன். கி, தமிழின் செம்மொழிப் பண்புகள், ப. 147.
6. வேங்கடராமன். கா.கோ, தமிழ் இலக்கிய வரலாறு, ப. 66.
7. மேலது, ப. 66.
8. துரைசாமிப்பிள்ளை ஔவை (ப.ஆ), திருமுருகாற்றுப்படை, பத்துப்பாட்டுச் சொற்பொழிவுகள், ப. 31.
9. சோமசுந்தரனார். பொ.வே, பத்துப்பாட்டு (முதல் தொகுதி) பாயிரம், ப.13.
10. வையாபுரிப்பிள்ளை. எஸ், சங்க இலக்கியம் (பாட்டும் தொகையும்) பகுதி 1,2, ப. 114.
11. இராணி. ந, சங்க இலக்கியத் தொகுப்பு நெறிகள், ப. 321.
12. ஆதிநாராயணன். கி, தமிழின் செம்மொழிப் பண்புகள், பக். 147 – 148.
13. மேலது, ப. 149.
14. மேலது, ப. 150.
15. நடேசன். வி, திருமுருகாற்றுப்படை புத்துரையும் ஆராய்ச்சியுரையும், ப. 1.
16. இராணி. ந, சங்க இலக்கியத் தொகுப்பு நெறிமுறைகள், ப. 294.
17. மேலது, ப. 295.
18. இராசமாணிக்கனார். மா, பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப. 26.
19. இராணி. ந, சங்க இலக்கியத் தொகுப்பு நெறிமுறைகள், ப. 297.
20. மேலது, ப. 297.
21. மேலது, ப. 297.
22. சோமசுந்தரனார். பொ.வே, நெடுநல்வாடை, பா.அ. 176.
23. இராணி. ந, சங்க இலக்கியத் தொகுப்பு நெறிமுறைகள், ப. 298.
24. வடிவேலு செட்டியர். கோ, திருமுருகாற்றுப்படை மூலமும் பரிமேலழகருரையும், ப. 16.
25. நடேசன். வி, திருமுருகாற்றுப்படை புத்துரையும் ஆராய்ச்சியுரையும், ப. 5.
26. சாமிநாதையர். உ.வே (ப.ஆ), பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கினியருரையும், ப. 14.
27. சோமசுந்தரனார். பொ.வே, பத்துப்பாட்டு (தொகுதி–1), பொருநராற்றுப்படை பா.அ 59-60.

28. இராணி. ந, சங்க இலக்கியத் தொகுப்பு நெறிகள், ப. 305.வநீதகிருட்டிணன், தமிழ் இலக்கியத்தில் ஆற்றுப்படை, ப. 75.
29. சாமிநாதையர். உ.வே (ப.ஆ)–பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கியருரையும், ப. 272.
30. இராசமாணிக்கனார். மா, பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப. 190.
31. சோமசுந்தரனார். போ. வே, பத்துப்பாட்டு (தொகுதி. 2), பக். 16–17.
32. மாணிக்கவாசகன். ஞா, புறநானூறு, பா. 281.
33. மேலது, பா. 296.
34. இராணி. ந, சங்க இலக்கியத் தொகுப்பு நெறிகள், ப. 309.
35. சோமசுந்தரனார். பொ. வே, பத்துப்பாட்டு (தொகுதி. 2) பதிப்புரை.
36. இராசமாணிக்கனார். மா, பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப. 21.
37. சாமிநாதையர். உ.வே (ப.ஆ), பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கினியருரையும், ப. 481.
38. மேலது, முகவுரை, ப. 21.
39. மேலது, ப. 21.
40. சாமிநாதையர். உ. வே (ப. ஆ), பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கியருரையும், ப. 530.
41. இராசமாணிக்கனார். மா, பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப. 24.
42. சாமிநாதையர். உ.வே, (ப.ஆ), பத்துப்பாட்டும் மூலமும் நச்சினார்க்கினியருரையும், மலைபடு, பக். 347–348.
43. மேலது, முன்னுரை, ப. 25.

# இயல் – 2

## திணை அமைப்பும் பாகுபாடும்

# இயல் - 2

# திணை அமைப்பும் பாகுபாடும்

மனித வாழ்வைப் பாடி மகிழ எண்ணிய சங்க இலக்கியப் புலவர்கள் தங்கள் பாடல்களில் இலக்கிய நயமும், கற்பனைத் திறனும் கவிதை உணர்வும் குறியீட்டு நிலையும் ஒன்றிவர ஏற்படுத்திக்கொண்ட ஒரு கவிதை மரபே திணை இலக்கியமாகும். புதுமையான எங்கும் காணாத தனியொரு உத்தியை வகுத்து கவிதைகளாக வடித்து மகிழ்ந்தனர் சங்ககாலப் புலவர்கள். அவ்வகையில் சங்ககால மக்களின் வாழ்க்கை முறையை, ஒழுக்க நெறிகளை மக்களுக்கு புலப்படுத்த தோன்றிய இலக்கியமே சங்க இலக்கியமாகும். இவ்விலக்கியம் வாழ்க்கை நெறிகளை அறிந்து கொள்வதோடு மட்டுமின்றி, நல்வழியில் நடந்து கொள்வதற்கும் உதவுகின்றன. இன்றைய தமிழர்கள் தமிழ்ப் பண்பாடு, கலாச்சாரம், கலை, பாரம்பரியம் ஒழுக்க நெறிகள், மகளிர், ஆடவர் நிலைகள், தொழில் முறைகள் போன்று இன்னோரன்னவை பற்றி படிப்பதோடு மட்டுமல்லாது, இவ்விலக்கியங்களை மையமாக வைத்து வாழ்ந்தும் வருகின்றனர். அத்துணை அளவுக்குச் சங்க இலக்கியங்கள் தமிழர்தம் வாழ்வுகளைப் பிரதிபலிப்பதாக அமைந்துள்ளன.

சங்ககாலப் புலவர்கள் காதலுணர்வை நாகரிக மிக்கதாகப் படைத்தளிக்க விரும்பினர். அன்பு வழிப்பட்ட மனிதகுல ஒருமைக்கு அகத்திணை ஒழுக்கலாறே வழிகோலுமென நம்பினர். இந்நிலையில்தான் அவர்கள் சங்க அகப்பாடல்களைத் தோற்றுவித்தனர். பொதுவாக அகப்பாடல்கள் அனைத்தும் தன்னுணர்ச்சி நிறைந்த பாடல்களாக காணப்படுகின்றன. இவை தனிமனித வாழ்வில் காணப்படும் ஒவ்வொரு உணர்வையும் அடிப்படையாகக் கொண்டு ஆக்கப்பட்ட பாடல்கள் எனினும் ஆசிரியரின் தற்சார்பு நிலையைப் போக்க உத்தி ஒன்றைக் கண்டு அனைத்துப் பாடல்களையும் பொதுச்சார்பு நிலைக்கு உயர்த்தி நின்றனர் என்பதை எடுத்துரைக்கிறது.

## 2.1. இலக்கிய உறுப்புகள்

இலக்கியத்தைப் புரிந்துகொள்ள மிக இன்றியமையாத் தேவை இலக்கிய உறுப்புகளாகும். இலக்கியத்தை ஒரு முழுமையாகக் கொண்டு அதற்கு முப்பத்து நான்கு உறுப்புகள் உண்டென தொல்காப்பியர்

குறிப்பிடுகின்றார். இருபத்தாறு எனவொரு தொகுதியும், எட்டென ஒரு தொகுதியும் பிரித்து இம்முப்பத்து நான்கினையும்,

**"மாத்திரை எழுத்தியல் அசைவகை எனாஅ**
**யாத்தசீரே அடி யாப்பு எனாஅ**
**…………………………………….**
**…………………………………….**
**நல்லிசைப் புலவர் செய்யுள் உறுப்பென**
**வல்லிதின் கூறி வகுத்துரைத்தனரே"[1]**

என்று தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். தொல்காப்பியர் தனிச் செய்யுட்களை மட்டுமின்றி இலக்கிய முழுமையையும் கூடச் 'செய்யுள்' என்ற சொல்லாலேயே ஆள்கிறார். இவ்வாறு இலக்கியத்தை முழுமையாகக் கொண்டு அதன் வடிவம், பொருள், அணி, உத்தி போன்ற அனைத்தையும் வேறுபாடின்றி உறுப்புகளாக காணும் போக்கு தொல்காப்பியம் காட்டும் புதுமையாகும். வடிவமும் பொருளும் இணைந்த வனப்புகளையுங் கூட அவர் உறுப்புகளாகக் கணக்கிடுகின்றார். இவ்வாறு உறுப்புகள் அனைத்தும் ஒருங்கிணைந்த இலக்கியத்தை நோக்கும் முறைமை சிறப்புடைய நெறி என்பர். இலக்கியத்தை உயிர்ப்பும் உறுப்புமுடைய முழுமையாகக் கொண்டு போற்றும் இந்நெறியே மேலைநாட்டுத் திறனாய்வாளர்களால் பெரிதும் போற்றப்படுகின்றன.

## 2.2. உறுப்புகளின் வகைகள்

மக்களின் எண்ணங்களைப் பிரதிபலிக்கும் இலக்கியத்தின் உறுப்புகளை மூன்று வகையாகப் பிரிக்கலாம். அவை,

1. வடிவம் சார்ந்த உறுப்புகள்
2. பொருள் சார்ந்த உறுப்புகள்
3. நாடகப் பண்பு சார்ந்த உறுப்புகள்

என்பனவாகும். மாத்திரை, மாத்திரையாலாகிய ஒலி எழுத்து, எழுத்துக்கள் சேர்ந்தமைந்த அசை, அசை சேர்ந்த சீர், சீரால் தளைக்கப்பட்ட அடி, மோனை, எதுகை எனத்தொடுக்கும் தொடை, அடியால் உருவாகும் பா, பாவினது அடியளவு, பாவிலமையும் ஓசை நயம் போன்றவையே வடிவம் சார்ந்த உறுப்புகளாகும். இவை பற்றி பிற்காலத்தில் பல யாப்பு நூல்கள் எழுந்திருப்பதை அறிய முடிகின்றன.

இலக்கியத்தில் பொருளே முக்கியத்துவம் வாய்ந்தவையாக அமைந்துள்ளன. சங்ககால இலக்கியங்கள் பெரும்பாலும் பொருளுணர்ச்சியோடு பாடப்பட்டவையாகும்.

1. வடிவத்தில் பொருளை யாத்தமைக்கும் யாப்பு
2. சொல்லாட்சி மரபு
3. ஒரு மாத்திரை முதல் முழுவதும் திட்டமைக்கும் நோக்கு
4. பாட்டினை நில அடிப்படையில் பாகுபடுத்தும் திணை
5. அதன் உட்பிரிவாகிய கைகோள்
6. பொருள் பற்றிய பயன்கள்
7. பொருள் பற்றிய எச்சங்கள்
8. பொருளமைதியின் பொதுமையைச் சுட்டும் பொருள்
9. பாடற்கருத்தினை வகைப்படுத்திக் காட்டும் துறை
10. கொண்டு கூட்டிப் பொருளுணர்த்திறனை உணர்த்தும் பாட்டு போன்றவை பொருள் பற்றிய உறுப்புகளாகும்.இவற்றைப் பற்றிப் பிற்காலத்தில் அகப்பொருள் நூல்களும் புறப்பொருள் நூல்களும் தோன்றின.

மேலும், 1. கூற்று 2. கேட்போர் 3. களன் 4. காலம் 5. முன்னம் 6. மெய்ப்பாடு என்பன நாடகப்பண்பு சார்ந்த இலக்கிய உறுப்புகளாகும். இலக்கியங்கள் பெரும்பாலும் நாடகத் தன்மை வாய்ந்தனவாகவே அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

## 2.3. திணை சொற்பொருள் விளக்கம்

திணை என்பது ஒரு பொதுச்சொல்லாகும். நிலம், காலம், தாவரங்கள், பறவைகள், விலங்குகள் முதலியவற்றைச் சார்ந்ததாக இயங்கும் மனித வாழ்வின் அனைத்துச் செயல்பாடுகளையும் திணை என்ற பொதுச்சொல்லால் குறிப்பிட முடியும். இம்முறையில் தான் திணைப் பொருளியல், திணை அரசியல், திணை உயிரியல், திணை மண்ணியல், திணை மொழியியல், திணை வரலாற்றியல் என்றெல்லாம் நாம் வகுத்துக் கொள்கிறோம். குடும்பம் ஆண் பெண் உறவு, விளிம்புநிலை மக்கள், பொழுதுபோக்கு முதலியனவற்றையும் இவற்றொடு இணைத்துக் கொள்ள முடியும். மேலும் இலக்கியம் என்பதனுள் மனிதவாழ்வு வரலாற்று உள்ளியக்கங்கள் அனைத்தையும் 'திணை' என்பதன் வழியே காண முடிகிறது.

திணை என்ற சொல்லுக்கான பெயர்காரணத்தை ஒவ்வொரு அறிஞர்களும் ஒவ்வொரு கருத்தினைக் குறிப்பிடுகின்றனர். “திண் என்பது பகுதியாகத் திண்மைப்பட்டு நிற்றலை உணர்த்தியதாகலாம். இதை எண்ணியே திணையென்பது முதல் நிலமான குறிஞ்சிக்கே பெயர் என்றும், திண்+ஐ-திணை என்றாகியது என்றும்,இது வலிமையுடைய மலையையே உணர்த்திற்று.”[2] என்று இராம.குருநாதன் திணை என்ற சொல்லுக்கு விளக்கம் தருகின்றார்.

“திணையெனும் சொல் தன்னளவில் பன்முகத் தன்மை கொண்டதாக அமைந்துள்ளது. நிலம், காலம், இயற்கைச்சூழல், உயிர்த் தொகுதிகளின் அமைப்பு வகைகள், அவற்றின் இயக்கங்கள், முதன்மை இவற்றோடு இணைந்த மனித வாழ்க்கைமுறை, குடும்ப அமைப்பு, ஆண் பெண் உறவு நிலைகள், மொழிச் சூழல், பண்பாடு, கலை முதலியவற்றின் இயல்பு, தனித்தன்மைக் கூறுகள், அறிவு/மெய்யியல் அடிப்படைகள் என்று விரிந்த வெளியில் திணையின் இயக்கம் அமைந்துள்ளன”[3] என்று ஜவகர் குறிப்பிடுகின்றார்.

திணையெனும் சொல்லின் விரிவாக்கத்தை வரலாற்று நிலையில் வைத்து விளக்கிய கா. சிவத்தம்பி “ஆதியில் குடியிருப்பைக் குறித்த இச்சொல் (குடும்பமும், குழுவும் குடியிருப்புடன் பொருந்தியவை) கால வளர்ச்சியில் சொற்பொருள் மாறுதலைந்து குடியிருப்பில் உள்ள மக்களின் ஒழுக்க வடிவங்களைச் சுட்டுவதாக மாறியிருப்பது சாத்தியமே”[4] என்கிறார். இவற்றையெல்லாம் நோக்கும் பொழுது திணை என்ற சொல்லானது மனிதனின் ஒழுக்கம் நிறைந்த அனைத்து செயல்பாடுகளையும் குறிப்பதாக அமைந்துள்ளதை எடுத்துரைக்கின்றன.

## 2.4. திணைப்பாகுபாடு

திணை இலக்கியம் நில அடிப்படையில் அமைந்துள்ளன. நிலமும் பருவப் பொழுதுகளும் இயற்கையும் இவற்றைப் பின்னணியாகக் கொண்ட மனித வாழ்வும் இயைபுபடப் புனையப்படுவதே திணை இலக்கியமாகும். நிலச் சாயலும் அதில் வாழும் உயிரினச் சாயலும், மனித வாழ்வின் சாயலும் இலக்கியத்தில் ஓவியமாகப் படிந்து கிடக்கின்றன. திணை இலக்கிய வகைகள் தனிப் பண்புகள் பலவற்றை உடையன. இது தனக்குப்

பின் தோன்றிய பல இலக்கிய வகைகளை வென்றது. எதிர்காலத்தில் தோன்றக்கூடிய இலக்கிய வகைகளையும் வெல்லவல்லது. தன்னுணர்ச்சிப்பா வகையில் மீக்கூர்ந்து நிற்கும் உணர்வையும் காப்பியப்பாவின் புனைத் திறன்களையும், நாடக வடிவ அமைப்பையும் ஒரு சேரப் பெற்றது. இதில் மனித உளவியலை மையமாகக் கொண்டு, அகப்புற நிகழ்ச்சிகளைக் கருவாக்கி அவற்றில் தோன்றும் சிறுசிறு அடிப்படைச் சிக்கல்களைப் பின்னிப் புனைவதாக அமைந்துள்ளன. திணை இலக்கியத்தின் பொதுமையும் புதுமையும் போற்றத்தக்கனவாகும். இத்திணை இலக்கியத்தை இரண்டு பெரும் பிரிவுகளாகப் பிரிக்க இயலும். அவை,

1. அகத்திணை
2. புறத்திணை என்பனவாகும்.

## 2.5. அகம் - பெயரும் பொருளும்

'அகம்' என்ற சொல்லுக்கு உள்ளம், இல்லம் என்ற இருபொருள்கள் உண்டு. உள்ளத்தில் ஒன்றுபட்டு இல்லறம் சேரும் தலைவன் தலைவியரது இன்ப ஒழுக்கத்தினைக் கூறுவதால் அவ்விலக்கியக் கூறு அகத்திணை எனப்பட்டது. அகம் என்பது களவு, கற்பு என்னும் இருவேறு கைகோள் நிலைகளிலும், பாலுணர்ச்சியோடு தொடர்புடைய நிலையில் எழுகின்ற உள்ளத்து உணர்வுகளையும் செயல்களையும் குறிப்பிடுகின்றது. இதிலிருந்து உள்ளத்து உணர்வுகளைப் பிரதிபலிப்பதே 'அகம்' என்று உணரலாம்.

ஒத்த அன்புடைய தலைவன் தலைவி ஆகிய இருவர் உள்ளத்தே நிகழும்இன்ப நிகழ்ச்சியை உணர்த்துவதே 'அகப்பொருள்' எனப்படும். "ஒத்த அன்பான ஒருத்தியும் ஒருவனும் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம் அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவரும் ஒருவருக்கொருவர் தத்தமக்குப் புலனாகாமல் இவ்வாறு இருந்ததெனக் கூறப்படாததாய் யாண்டும் உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்பமுறுவதோர் பொருளாதலின் அதனை அகமென்றார்"[5] நச்சினார்க்கினியர்.

அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு உறுதிப் பொருள்களுள் அகம் இன்பத்தையும், புறம் ஏனையவற்றையும் குறிக்கும். அகம் என்பது காதல் என்றும், புறம் என்பது கொடை, அளி, செங்கோல் மற்றும் போர்த்தொடர்பானது என்று பொதுவாக குறிப்பிட்டாலும்,

இளம்பூரனார் “அகப்பொருளாவது போக நுகர்ச்சியாகலான் அதனால் ஆயபயன் தானே அறிதலின் அகம் என்றார் என்றும் புறப்பொருளாவது, மறஞ்செய்தலும் அறஞ்செய்தலும் ஆகலான் அவற்றான் ஆயப்பயன் பிறர்க்குப் புலனாதலின் புறம் என்றார்”[6] என்றும் தமிழண்ணல் விளக்குகின்றார்.அகம் உள்ளத்து உணர்வுகளைப் பிறருக்க இதுவென எடுத்துக்கூற இயலாததாக அமைந்துள்ளதை காணமுடிகிறது.

## 2.6. அகத்திணை

“திணை என்பதற்கு நிலம், இடம், வீடு, குலம், ஒழுக்கம் எனப் பல பொருள்கள் உண்டு என சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்பேரகராதி விளக்கம் தருகிறது.”[7] இந்த ஒழுக்கத்தை அக ஒழுக்கம், புற ஒழுக்கம் எனப்பகுத்து அவற்றை அகத்திணை புறத்திணை என வழங்கினர் பண்டையத் தமிழ் நூலார். திணை இலக்கியம் தமிழுக்கே உரியதாகும். பழந்தமிழ் இலக்கியத்தை அகத்திணைகளை ஏழாகவும், புறத்திணைகளை ஏழாகவும் பகுத்துள்ளனர்.

“அகத்திணையைப் பாடுங்கால் புலவன் மரபுவழிப்பட்ட சில விதிகளை உள்ளத்தில் பதித்துக் கொள்கிறான். அவை,

1. அகப்பாடல்கள் பாத்திரக் கூற்றாகவே அமைய வேண்டும்.
2. அகப்பாடல்களில் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்ற மூன்றுமோ அல்லது இவற்றுள் இரண்டோ அல்லது உரிப்பொருள் மட்டுமோ அமையும்.
3. கருப்பொருள் என்ற இயற்கைப் பொருளின் வருணனை பாட்டில் தனியே அமைதல் இல்லை. பாத்திரத்தின் கருத்தை உள்ளுறையாகவோ இறைச்சியாகவோ சொல்லுதற்குரிய ஊடகமாகவே இயற்கை அமையும்.
4. காதல் நிகழ்ச்சிகளுக்குரிய பாத்திரங்களின் இயற்பெயர்கள் கூறப்பெறுதல் இல்லை. குறிப்பாக அப்பெயர்கள் புலப்படின் அப்பாடல்கள் புறம் எனப்படும்.
5. அகப்பாடல்கள் நாடகப் பாங்கில் அமைந்தவை. பாத்திரம் நெஞ்சுக்குக் கூறியனவாகவோ, பிறரிடத்துக் கூறியனவாகவோ அமையும்.

6. அகப்பாடல்களில் உவமை வழியாக வேந்தர்கள், குறுநில மன்னர்கள், புலவர்கள், பேரூர், சிற்றூர்ப் பெயர்கள் போன்றவை இடம்பெறும்.

இவற்றின் அடிப்படையிலேயே அகப்பாடல்கள் இயற்றப்பெறுகின்றது"[8] என கு.வெ.பாலசுப்பிரமணியன் கூறுகின்றார்.

"சங்கப் பாடல் ஒவ்வொன்றும் மானிட இயற்கையின் நிகழ்ச்சிகளுள் ஒன்றைச் சொல்லோவியமாக விளக்கும் முறையில் அமைந்துள்ளது. ஒவ்வொரு பாடலுக்கும் உரிய திணை வகையில் அதற்குரிய வினைப்புலமாகிய நிலம் குறிக்கப்படுகிறது. நிகழ்ச்சிக்குரிய பருவமும் காலமும் வெளிப்படையாகவோ குறிப்பாகவோ சுட்டப்படுகின்றன. இவை இரண்டும் நிலம் பொழுது இரண்டின் அடிப்படையில் தோன்றும். அனைத்து நிகழ்ச்சிகளுக்கும் இவையிரண்டும் இன்றியமையாதது. காலமும் களனும் இல்லாமல் நிகழ்ச்சிகளே நடைபெறாது"[9] என்று அ.அ.மணவாளன் குறிப்பிடுகின்றார்.

பத்துப்பாட்டு நூலில் அகம்சார்ந்தவை நான்கு. முல்லைப்பாட்டு, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை என்ற இந்நான்கும் 101 – 301 அடிக்கு உட்பட்டவையாகும். குறிஞ்சிப்பாட்டானது நிரல்பட இனிதாக களவொழுக்கத்தை விரித்துச் சொல்கிறது. வேற்றுப்பொருள் இதனுள் விரவி வரவில்லை. பிற மூன்று பாட்டுகளிலும் உரிப்பொருட் பகுதி குறைவாக வருதலின் அவ்வாசிரியர்கள் அகப்பொருளைத் தலைக்கீழாக வைத்துப் புறப்பொருளைச் சிறப்பித்தனர் என்று கூறுவது பொருத்தமுடையதாகும்.

## 2.7. அகத்திணைப் பாகுபாடு

தொல்காப்பியர் தம் பொருளதிகார அகத்திணையியலில் அகத்திணையை ஏழு வகையாகப் பாகுபாடு செய்துள்ளார்.

**"கைக்கிளை முதலா பெருந்திணை இறுவாய்**
**முற்படக் கிளந்த எழுதிணை என்ப"**[10]

என்று கூறுகிறார். ஏழு திணையாவன,

1. கைக்கிளை
2. குறிஞ்சி
3. முல்லை
4. மருதம்

5. நெய்தல்
6. பாலை
7. பெருந்திணை என்பனவாகும்.

இத்திணைகள் யாவும் தலைவன் தலைவியிடத்து நிகழும் காதலின் ஒழுக்கத்தினை குறிப்பதாக அமைந்துள்ளன. கைக்கிளையை ஒருதலைக்காமம் என்றும், பெருந்திணையை பொருந்தாகாமம் என்றும் தொல்காப்பியர் கூறுவார். நடுவில் கூறப்பட்ட குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகியவற்றை 'நடுவண் ஐந்திணை' என்பர். அன்பினால் ஒத்த தலைவன் தலைவியைப் பற்றி மொழிவதால் இது அன்பின் ஐந்திணை எனவும் பெயர் பெற்றது. பொதுவாக சங்க அக இலக்கியங்கள் முழுவதும் நாம் காண்பது ஒத்த அன்புடையாரையேயாகும். இத்தகு ஒத்த அன்பினை கேண்மை, தொடர்பு, நட்பு, நயம், காமம் போன்ற பெயர்களால் சஙகப் புலவர்கள் குறிப்பிடுகின்றனர்.

"மக்கள் வாழ்க்கையில் ஒருகால எல்லைக்குள் நிகழும் காதல் ஒழுக்கலாறுகளையே ஐந்திணை புனையமுற்படுகிறது"[11] என்று வ.சுப.மாணிக்கனார் குறிப்பிடுகின்றார். இவ்வாறு அகத்திணையானது மனித ஒழுக்கலாறுகளை எடுத்தியம்புவதாக அமைந்துள்ளன.

### 2.7.1. கைக்கிளை

கைக்கிளை என்பது ஒருதலைக் காமம் என்று தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார். காமத்தன்மையே இல்லாத பெண் ஒருத்தியின் மீது காதல் கொண்டு எழும் பேச்சு நிலைகள் யாவும் கைக்கிளையில் வைக்கப்பட்டுள்ளது. இத்தகு கைக்கிளைப் பற்றித் தொல்காப்பியர்,

**"காமம் சாலா இளமையோள் வயின்**
**ஏமம் சாலா இடும்பை எய்தி**
**நன்மையும் தீமையும் என்றிரு திறத்தான்**
**தன்னொடும் அவளொடும் தருக்கியப் புணர்த்துச்**
**சொல்லெதிர்ப் பெறாஅன் சொல்லி இன்புறல்**
**புல்லித்தோன்றும் கைக்கிளைக் குறிப்பே"**[12]

என்று இலக்கணம் வகுத்துள்ளார். காமக் குறிப்பிற்குப் பொருத்தமில்லாத மிகுந்த இளமையுடையப் பெண்ணொருத்தியைக் கண்டு காம உணர்ச்சி எழ, அதனால் வருத்தமுற்று அவளிடமிருந்து பதில் எதிர்ப்பாராத நிலையிலும் அவளிடம் தம் காம உணர்ச்சியைப் பேசி இன்புறதலே கைக்கிளையாகும். காமக் குறிப்பிற்கு அனுமதியில்லாதப் பெண்ணை காம உணர்வு எழ முன்னிலைப்படுத்திப் பேசும் பாங்கில் கவிதைப் புனைவது கைக்கிளையாகும். இது ஆண்கள் பேசுவது போன்றுதான் அமையும். இலக்கியங்களில் பெண்கள் இத்தகைய கைக்கிளை உணர்வில் நின்று பேசுவதாக பாடப்பெறுதல் இல்லை. தொல்காப்பியர் கைக்கிளையை நிறைவேறாதக் காதல் என்றும், இருபுறக்காதலுக்கு முன்னைய நிலை என்றும் பகுத்துள்ளார். முன்னது அகப்புற கைக்கிளை என்றும், பின்னது அகப்பொருள் கைக்கிளை என்றும் குறிக்கப்படுகிறது. பத்துப்பாட்டு அக இலக்கியங்களில் கைக்கிளைப் பற்றிய செய்திகள் எதுவும் இடம்பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

### 2.7.2 பெருந்திணை

பொருந்தாகாமமே பெருந்திணையாகும். தலைவன் தலைவியரின் பல்வேறு பொருந்தாத தன்மைகளைக் கொண்டு நிகழ்கின்ற காமங்கள் யாவும் பெருந்திணை எனப்படும். பெருந்திணைக்கு தொல்காப்பியர்,

**"ஏறிய மடற்திறம் இளமை தீர்திறம்**
**தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம்**
**மிக்க காமத்து மிடலொடு தொகைஇ**
**செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பே"**[13]

என்று இலக்கணம் வகுத்துள்ளார். தலைமகனுக்கே உரிய மடலேறுதலும், இளமை நீங்கி முதுமை உற்ற காலத்தும் ஆசையினை விடாத அளவிலே காமம் கொள்ளுதலும், தெளிவில்லாத நிலையில் மிகுதியான காமத்தைக் கொள்ளுதலும், இவையல்லாது ஐந்திணைக் காதலும் இவை தவிர்த்து நிகழும் காமமுமாகிய இந்நிலைகள் யாவும் பெருந்திணையாகவே கருதப்படுகிறது.

தலைவன் தலைவி ஆகிய இருவருக்குள்ளும் ஒத்த அன்பு அமையாத ஏற்றத் தாழ்வான காதல் நிலையை பெருந்திணை என்பர். 'பெண்பாற் கூற்று பெருந்திணைப் பாலை' என்ற ஐயனாரிதனாரின் கருத்திற்கேற்ப இப்பெருந்திணையாவது பெண்பால் கூற்றாகவே அமைந்துள்ளது.

கைக்கிளையும் பெருந்திணையும் தொல்காப்பியரின் இலக்கணப்படி அகத்திணையுள் அடங்கும். இதனைப் புறப்பொருளில் அமைத்தும் கூறலாம். பன்னிரு படலம் என்ற புறப்பொருள் இலக்கண நூல் இன்று முழுமையாகக் கிடைக்காவிட்டாலும் அதன் வழிநூலாகிய புறப்பொருள் வெண்பாமாலையில் தனித்தனிப் புறத்திணைகளாகவே விளக்கப்படுகின்றன. சங்கப்பாடல்களைப் பயிலுமிடத்து கைக்கிளை, பெருந்திணைப் பாடல்கள் மிகுதியாக இல்லை. அதிலும் பத்துப்பாட்டின் அகநூல்களை நோக்கும்போது அறவே இல்லை என்பதை திட்டவட்டமாக இலக்கியங்கள் எடுத்துரைத்துள்ளன.

### 2.7.3 ஐந்திணைச் செயல்பாடுகள்

பழங்காலத்து மக்கள் மலையிலும், காட்டிலும், வயற்புறத்திலும் கடற்கரையிலும் வாழ்ந்து வந்தனர். அந்தந்த நிலத்திலே தங்கி,அங்கு கிடைக்கும் உணவுப் பொருள்களை உண்டு வாழ்ந்து வந்தனர். பின்பு ஆநிரை வளர்த்தல், வேட்டையாடுதல், உழவுத்தொழில் செய்தல், மீன் பிடித்தல் போன்ற செயல்களில் ஈடுபட்டனர்.

**“பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டோடு**
**உருபு நிறுத்த காம வாயில்**
**நிறையே அருளே உணர்வொடு திருவென**
**முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே”**[14]

என்ற தொல்காப்பிய கருத்திற்கு ஒத்த அன்புடைய தன்மைகளை கொண்ட ஆணும் பெண்ணும் காதல் கொண்டு திருமணம் செய்து இல்லற வாழ்வை சிறப்புடன் நடத்தினர். அத்தகைய காதலும் இல்லறமுமே பழங்கால மக்களின் சிறந்த வாழ்க்கையாக அமைந்தன. இம்முறையில்தான் பல்வேறு இயற்கைக் காட்சிகளும், பல்வேறு தொழில்களும் பழக்க வழக்கங்களும் இருந்தன. இம்முறை கொண்டு சங்ககாலத்தில் எழுந்த பாடல்கள் யாவும் நிலத்தை அடிப்படையாக வைத்தே பாடப்பட்டன. எனவே மலைப்பகுதியில் பாடப்படும் பாடல்கள் அங்குள்ள பூவின் பெயரைக் கொண்டு ‘குறிஞ்சி’ எனவும் காட்டுப்பகுதிகளில் பாடப்படும் பாடல்கள் அங்குள்ள பூவின் பெயரைக் கொண்டு முல்லை எனவும், வயல் பகுதிகளில் பாடப்படும் பாடல்கள் அங்குள்ள பூவின் பெயரைக் கொண்டு மருதம் எனவும், கடற்புறத்தில் பாடப்பட்ட பாடல்கள் அங்குள்ள பூவின் பெயரால் நெய்தல் எனவும், வழங்கப்பட்டன என்பதை இலக்கியங்கள் வழியாக நமக்கு புலப்படுகின்றன.

### 2.7.4 ஐந்திணைப் பெயர்கள்

சங்க இலக்கியத்தில் உள்ள ஒரு பாடல் எத்திணைக்கு உரியது என்பதனை அந்நிலத்திலுள்ள பொருட்களைக் கொண்டு கண்டறிய முடியும்.

**“குறிஞ்சி பாலை முல்லை மருதம்**

**நெய்தல் ஐந்திணைக்கும் எய்திய பெயரே”**[15]

என்ற நூற்பாவிலிருந்து ஐந்திணை என்பது குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்ற ஐந்து திணைகளுக்கும் பொருந்தி நிற்கும் என்று நம்பியகப்பொருள் குறிப்பிடுவதைக் காணலாம். இவ்வைந்து திணைகளிலும் எழுந்த ஒழுக்கங்களை ‘அன்பின் ஐந்திணை’ என்றும் குறிப்பிடுவர். இவ்வன்பின் ஐந்திணைகளை,

**“இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு**

**அன்பொடு புணர்ந்த ஐந்திணை”**[16]

என்று தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். இவ்வைந்திணைக்குரிய தலைவனும் தலைவியும் ஒத்த அன்புடையவராதலால் அன்பின் ஐந்திணை எனக்குறிப்பிட்டார். இவ்வடிகளுக்கு நச்சினார்க்கினியர் உரை எழுதும் போது இன்பமும் பொருளும் அறனும் என்று முற்கூறிய மூவகைப் பொருள்களுள், ஒருவன் ஒருத்தியிடைத் தோன்றும் அன்போடு கூடிய இன்பத்திற்கு புணர்தல் முதலான ஐவகை ஒழுக்கம் கூறப்பட்டது என்பார். சங்கப் பாடல்களில் காணப்படும் ஐந்திணைகளும் முதல், கரு, உரி என்ற முப்பொருளால் விளக்கப்படுகின்றன. இதனையே,

**“முதல் கரு உரிப்பொருள் என்ற மூன்றே**

**நுவலுங்காலை முறைசிறந் தனவே**

**பாடலுள் பயின்றவை நாடுங்காலை”**[17]

என்று தொல்காப்பியர் வரையறை செய்துள்ளார். முதல், கரு, உரிப்பொருள்கள் என்ற மூன்று பொருள்களும், இயற்கைப் பொருள்களும் தொழில் முதலியவைகளும் வாழ்வுக்காகவே அமைந்தவையாகையால் காதல் வாழ்வே சங்கப் பாடல்களின் உரிப்பொருள்கள் என்று போற்றப்பட்டன. அந்த வாழ்வை எடுத்துக்காட்டும் பொருள்களாக உள்ள மரம், விலங்கு,பறவை, தொழில் போன்றவை கருப்பொருள்கள் எனப்பட்டன.ஐந்திணைகளும் முப்பொருளால் விளக்கப்படும் என்ற தொல்காப்பிய கூற்றிற்கு ஏற்ப நம்பியகப்பொருளும்,

**"அவைதாம்**

**முதற்பொருள் கருப்பொருள் உரிப்பொருள் எனமுறை**

**முதற்பொருள் மூன்றிலும் நுவலப் படுமே"[18]**

என்ற நூற்பாவழி இயம்புகின்றது. அதாவது குறிஞ்சி முதலான ஐந்திணைகளும் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்ற மூன்று வகையால் விளக்கப்படும் என்று குறிப்பிடுகின்றது. இவ்முப்பொருளுமின்றி சங்கப் பாடல்களை விளக்க இயலாது என்பதை இவை உணர்த்துகின்றன.

## 2.8. முதற்பொருள்கள்

சங்க இலக்கியப் பாடல்கள் இன்னத் திணையைச் சாரும் என்பதை எடுத்துக்காட்டுகின்ற அளவிலே முதற்பொருள்கள் அமைந்துள்ளன.

**"நிலமும் பொழுதும் எனமுதல் இருவகைத்தே"[19]**

முதற்பொருளாவது நிலம், பொழுது என இருவகையுடையதாக கூறுவர். இலக்கியப் பாடல்களுக்கு நிலம், பொழுது இரண்டும் இன்றியமையாதனவாகும். இதேபோல் தொல்காப்பியரும் முதற்பொருளை ஆராய்ந்து இடம் (நிலம்), காலம் (பொழுது) என்னும் இரண்டின் தன்மையைச் சார்ந்தது என்பதை,

**"முதலெனப்படுவது நிலம் பொழுதிரண்டின்**

**இயல்பென மொழிப இயல்புணர்ந்தோரே"[20]**

என்ற நூற்பா மூலம் விளக்கியுள்ளார். இதன்வழியாக நிலம், பொழுது இரண்டின் அடிப்படையில் மட்டுமே முதற்பொருள் அமைந்துள்ளன என்பது தெளிவாகிறது.

### 2.8.1. நிலங்கள்

சங்க இலக்கியங்களில் நில அடிப்படையில் நிலங்களை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐந்து வகையாக பாகுபடுத்தியுள்ளனர். ஆனால் தொல்காப்பியமோ நான்கு வகை நிலங்களை மட்டுமே குறிப்பிட்டுள்ளது.

**"மாயோன் மேய காடுறை உலகமும்**

**சேயோன் மேய மைவரை உலகமும்**

**வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**

**வருணன் மேய பெருமணல் உலகமும்**

**முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்**

**சொல்லிய முறையான் சொல்லவும் படுமே''**[21]

காத்தல் தொழிலைக் கடமையாகக் கொண்ட திருமால் இருந்து வாழும் காட்டு நிலமும் (முல்லை), சிவந்த மேனி உடைய முருகவேள் விரும்பி வாழும் மலை நாடும் (குறிஞ்சி), இந்திரன் இருந்து வாழும் நீர்வளம் நிறைந்த வயல் சூழ்ந்த பகுதியும் (மருதம்), மழைக் கடவுள் வருணருக்கும் பெருமணல் கரையுடைய கடல் சூழ்ந்த இடமும் (நெய்தல்) ஆகிய இவையே சான்றோர்கள் கூறி வைத்த குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் என்னும் நிலப்பரப்புகளாகும். இவற்றிலிருந்து, நான்கு நிலத்திற்கும் நான்கு கடவுள்கள் இருந்ததை இலக்கியங்கள் புலப்படுத்துகின்றன. பாலை என்றோர் நிலத்தைத் தொல்காப்பியர் தனியே கூறவில்லை. பாலைக்கென நிலமில்லை எனினும் பாலைத்திணைக்குரிய பாடல்கள் சங்க இலக்கியங்களில் மிகுதியாக உள்ளன. குறிஞ்சியும், முல்லையும் வளம் குறைந்த காலத்தில் அங்கு வாழும் மக்களில் சிலா் ஆறலைக் கள்வராக மாறுகின்றனா். இங்கு வாழும் ஆடவா் எயினா் என்றும் மகளிா் எயிற்றியா் என்றும் குறிக்கப்படுவாா்கள்.

**''முல்லையும் குறிஞ்சியும் முறைமையின் திரிந்து**

**நல்லியல்பு இழந்து நடுங்குதுயா் உறுத்துப்**

**பாலை என்பதோா் படிவம் கொள்ளும்''**[22]

என்ற கருத்திற்கேற்பவும் முல்லை, குறிஞ்சியின் எல்லையோரப் பகுதிகள் மேட்டு நிலமும் பாறைகளுமாய் கோடைகாலத்தில் வறட்சியுற்று அவை பாலை வடிவைப் பெற்றிருக்கின்றன. இத்தகைய மாற்ற நிலையிலே பாடப்படுகின்ற பாடல்கள் யாவும் பாலைப் பாடல்களாகக் கொள்ளப்படுகின்றன. நிலம் என்று கூறப்படுகின்ற முதற்பொருளை பத்து வகைகளை உடையதாக நம்பியகப்பொருள் இயம்புகின்றது. அதனையே,

**''வரையே சுரமே புறமே பழனம்**

**திரையே அவையவை சோ்தரும் இடனே**

**எனஈா் ஐவகைத்து அனையியல் நிலமே''**[23]

என்ற நூற்பாவில் குறிப்பிடப்பட்டுள்ளது. அதாவது மலை மலை சாா்ந்த இடம், சுரம் சுரம்சாா்ந்த இடம், காடு காடுசாா்ந்த இடம், வயல்

வயல்சார்ந்த இடம், கடல் கடல்சார்ந்த இடம் என்னும் பத்துவகையாகக் குறிப்பிட்டுள்ளதை அறியமுடிகிறது.

### 2.8.2 பொழுதுகள்

சங்க இலக்கியத்தில் பொழுது மிகச் சிறந்த இடத்தைப் பெற்றுள்ளது. பொழுதை அறிந்து நேரத்தைக் கணக்கிடும் கணக்கர்களும் இருந்தனர். தலைவன் கார்காலத்தில் வருவதாகக் கூறி தலைவியை விட்டுப் பிரிந்து செல்கிறான். தலைவி தலைவனின் வரவை ஆவலோடு எதிர்பார்த்துக் காத்திருக்கின்றான். பூக்கள் பூக்க ஆரம்பித்தவுடன் கார்காலம் தொடங்கி விட்டதாக அறிகின்றாள் தலைவி. ஆகவே இலக்கியத்தில் பொழுது இன்றியமையாததாக அமைந்துள்ளன. இப்பொழுதை இரண்டு வகையாகப் பிரிக்கலாம்.

1. பெரும்பொழுது
2. சிறுபொழுது என்பனவாகும்.

ஓராண்டில் உள்ள பன்னிரண்டு மாதங்களை பருவ நிலைக்கு ஏற்ப ஆறுவகையாக பிரித்தனர்.

1. கார் காலம் - ஆவணி, புரட்டாசி
2. கூதிர் காலம் - ஐப்பசி, கார்த்திகை
3. முன்பனி காலம் - மார்கழி, தை
4. பின்பனி காலம் - மாசி, பங்குனி
5. இளவேனில் காலம் - சித்திரை, வைகாசி
6. முதுவேனில் காலம் - ஆனி, ஆடி

இந்த ஆறுவகையையும் நம்பியகப்பொருள்,

**“காரே கூதிர் முன்பனி பின்பனி**
**சீர்இள வேனில் வேனில் என்றாங்கு**
**இருமூன்று திறத்தது தெரிபெரும் பொழுதே”**[24]

என்று குறிப்பிடுகிறது. பெரும்பொழுதைக் கூறுவது போன்றே சிறுபொழுதையும் ஐந்து வகையாக நாற்கவிராசநம்பி குறிப்பிடுகின்றார். அவை,

**“மாலை யாமம் வைகறை எற்பாடு**
**காலை வெங்கதிர் காயும் நண்பகல்எனக்**

**கைவகைச் சிறுபொழுது ஐவகைத் தாகும்''**[25]

சிறுபொழுது எனப்படுவது மாலை, யாமம், வைகறை, எற்பாடு, காலை வெங்கதிர், காயும் நண்பகல் என்று ஐந்து வகையுடையதாக அமைந்துள்ளன. அவை,

1. மாலை - மாலை 6 மணி முதல் இரவு 10 மணி வரை
2. - இரவு 10 மணி முதல் பின்னிரவு 2 மணி வரை
3. வைகறை - விடியற்காலம் 2 மணி முதல் காலை 6 மணி வரை
4. எற்பாடு - சூரியன் விளங்குகின்ற பொழுது இதனைக் காலை 6 மணி முதல் மாலை 6 மணிவரை எனக்கொண்டு 'எற்படுகால வெங்கதிர்' என்பதற்கு காலை 6 மணி முதல் 12 மணி வரை
5. காயும் நண்பகல் - பகல் 12 மணி முதல் மாலை 6 மணி வரை

சங்க புலவர்கள் பொழுதை சிறுபொழுது, பெரும்பொழுது என இருவகையாகப் பிரித்து, பொழுதுகள் மக்கள் வாழ்வில் எவ்வாறு சிறப்பிடம் பெற்றுள்ளன என்பதைத் தெளிவாக சுட்டிக்காட்டியுள்ளனர்.

## 2.9 காலங்கள்

மக்கள் வாழ்க்கைக்கு மிகவும் இன்றியமையாத் தேவையாக காலங்கள் அமைந்திருந்தன. காலத்தைக் கணிப்பதற்கென்றே கணிகர்களும் அக்காலத்தில் இருந்தனர். அக்காலத்தை கணிப்பதற்கு நாழிகை வட்டில் என்னும் கருவித் தேவையாயிருந்தது. ஐந்துநில மக்களுக்கென்றே தனித்தனியாக காலத்தை கணித்து அமைத்தனர் சங்ககாலப் புலவர்கள் என்பதை உணர்த்துகின்றன.

### 2.9.1 குறிஞ்சி

மலையும் மலை சார்ந்த இடமும் குறிஞ்சி நிலமாகும். தொல்காப்பியர் குறிஞ்சித் திணைக்குரிய காலத்தை,

**"குறிஞ்சி**

**கூதிர் யாமம் என்மனார் புலவர்''**[26]

என்று குறிப்பிடுகின்றார். அதாவது ஐப்பசி தொடங்கி கார்த்திகை மாதம் முடிய உள்ள குளிர்காலமும் (கூதிர்), பின்னிரவுப் பொழுதும் (யாமம்) குறிஞ்சித் திணைக்குரிய பருவம் என்று குறிப்பிடுகிறார்.

**"பனிஎதிர் பருவமும் உரித்து எனமொழிப"**[27]

நாற்கவிராசநம்பியும் இதே கருத்தினை,

**"கூதிர் யாமம் முன்பனி என்றிவை**

**ஓதிய குறிஞ்சிக்கு உரியவாகும்"**[28]

என்ற நூற்பா மூலம் கூதிர், யாமம், முன்பனி போன்ற மூன்று பருவங்களும் குறிஞ்சித் திணைக்குரியது என்பதை,

**"குன்று குளிர்ப்பன்ன கூதிர்ப்பானாள்"**[29]

என நெடுநல்வாடை குறிப்பிடுகிறது. இக்குறிஞ்சித்திணை காதலின் நெருக்கத்தையும் களவொழுக்கத்தின் சிறப்பினையும் எடுத்து மொழிவதாக அமைந்துள்ளன.

### 2.9.2 முல்லை

தமிழில் முல்லைப்பாடல்கள் நிலப்புனைவு அடிப்படையில் மிக அழகாக இயற்கையைச் சித்தரிக்கின்றன. இதில் கார்காலமும் முல்லை நிலமும் இணைந்து நிலமகள் அழகாக பூத்துக் குலுங்குவதை எடுத்துக்காட்டுகின்றன.

"முல்லை நிலம், ஆயர், புல்லாங்குழல், மாலைப்பொழுது போல்வன இடம்பெறும் நில அடிப்படையிலான ஒருபாட்டு மேலைநாட்டிலக்கியங்களில் வழங்குகிறது."[30] என தமிழண்ணல் குறிப்பிடுகின்றார். ஆவணி, புரட்டாசி ஆகிய இரண்டு மாதங்களும் கார்காலப் பெரும் பொழுதும், மாலை நேரமும் (முன்னிரவு) முல்லைத் திணைக்குரிய பருவமாக தொல்காப்பியர் கூறுகின்றார்.

**"காரும் மாலையும் முல்லை"**[31]

என்ற தொல்காப்பிய நூற்பாவிற்கு ஏற்ப நாற்கவிராசநம்பியும், நமது நம்பியகப்பொருளில் அதே கருத்தினை வலியுறுத்தியுள்ளார். இதனையே,

**"மல்கு கார்மாலை முல்லைக்கு உரிய"**[32]

என்ற நூற்பா வாயிலாக அறியமுடிகின்றது. தலைவன் கார்காலத்தில் திரும்பி வருவதாகக் கூறிச் செல்கின்றான். ஆனால் கார்காலமும் வந்துவிட்டது. தலைவன் வரவில்லை. அதனால் கார்கால மாலைப்

பொழுதில் தலைவி தலைவனின் வரவை நோக்கி காத்திருப்பதாக முல்லைப்பாட்டு இயம்புகின்றது. இக்கருத்தினை,

**“பருவரல் எவ்வம் களைமாயோய்! எனக்**

**காட்டவும் காட்டவும் காணாள்”**[33]

என்ற பாடல்வரிகள் உணர்த்துகின்றன. இங்கு கார் காலத்தின் தன்மை முல்லைப்பாட்டு வாயிலாக சிறப்பாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

### 2.9.3 மருதம்

வயலும் வயல்சார்ந்த பகுதியும் மருதத்திணையாகும். பின்னிரவுப் பொழுதும் விடியற்காலையும் மருதத்திணைக்குரிய பருவமாக தொல்காப்பியம்,

**“வைகறை விடியல் மருதம்”**[34]

என்று குறிப்பிடுகிறது. இக்கருத்தினையே நாற்கவிராசநம்பி,

**“இருள்புலர் காலை மருதத்திற்கு உரித்தே”**[35]

என்ற நூற்பா வழியாக குறிப்பிட்டுள்ளார். அதாவது மருதத்திணைக்குரிய பொழுது வைகறை, விடியல் என்பது புலப்படுகிறது.

### 2.9.4 நெய்தல்

கடலும் கடல் சார்ந்த பகுதியும் நெய்தல் நிலமாகும். இந்நிலத்தில் வாழும் மக்களான பரதவர்கள் மீன்பிடித் தொழிலையே தன் தொழிலாகக் கொண்டவர்கள். இவர்கள் வாழ்க்கை புலர்காலைப் பொழுதுக்கு முன்னதாகவே தொடங்கிவிடுகின்றது. ஆதலால் இத்திணைக்குரிய காலத்தை தொல்காப்பியர்,

**“எற்பாடு**

**நெய்தல் ஆதல் மெய்ப் பெறத்தோன்றும்”**[36]

என்று கூறுகின்றார். இங்கு எற்பாடு என்பதற்கு பின்மாலைப் பொழுது என்ற பொருளில் கூறியிருப்பதை அறிய முடிகின்றது.

### 2.9.5 பாலை

பாலைத்திணைக்கு தனி நிலமில்லை எனினும் அதற்கு இலக்கியங்கள் பருவங்களையும் சுட்டுகின்றன. அவ்வகையில்,

**“நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு**

**முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே"**[37]

என்ற தொல்காப்பிய நூற்பா பாலைக்குரிய பருவம் நண்பகல், வேனில் என்பதை உணர்த்துகின்றது. இங்கு வேனில் என்பது இளவேனிலைக் குறிப்பதாக அமைந்துள்ளது. மேலும்,

**"பின்பனிதானும் உரித்தென மொழிப"**[38]

என்று தொல்காப்பியம் கூறுவதிலிருந்து பின்பனிக் காலமும் பாலைத்திணைக்குரியது என்பதை அறிய முடிகின்றது.

## 2.10 கருப்பொருள்கள்

பழங்காலத்தில் நில ஒழுக்கங்களைப் பற்றிப் பாடும்போது, ஒவ்வொரு நிலத்திற்கும் உரிய தெய்வம், உணவு, விலங்கு, பறவை, மரம் முதலிய பொருட்களைப் பற்றியும் பாடப்பட்டுள்ளன. இவையனைத்தும் 'கருப்பொருள்கள்' என்ற பெயரால் குறிப்பிடுவர்.இதற்குத் தொல்காப்பியர் இலக்கணம் கூறுமிடத்து,

**"தெய்வம் உணாவே மாமரம் புள்பறை**
**செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ**
**அவ்வகை பிறவும் கருவென மொழிப"**[39]

என்று கூறுகின்றார். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐந்து நிலத்திலும் வாழ்கின்ற மக்களின் உணர்வெழுச்சிக்குரிய பொருளே உரிப்பொருளாகும். தெய்வம், மரம், பூ, பறவை, விலங்கு போன்ற கருப்பொருள்கள் மனிதனின் வினை நிகழ்ச்சிக்குத் துணைப்போவதாலும், மேற்கூறிய நிலம் பொழுதிரண்டின் இயைபினால் தோன்றுவதனாலும் படைக்கப்பெறும் மானிடநிகழ்ச்சிகளை விளக்குவதற்குரிய வாயில்கலாதலானும் இவைகளை 'கருப்பொருள்கள்' என்கிறோம்.

ஐந்நிலங்களிலும் நிகழும் நிகழ்ச்சியில் பங்கு கொள்ளும் மனிதன் அவனது தொழில், அதனால் விளையும் பொருட்கள், அதற்குத் தொல்லை தரும் விலங்குகள், பறவைகள், பிற உயிரினங்கள் கால இயல்பிற்கேற்பச் செழித்து ஓங்கும் மரம், செடி, கொடி, மலர் போன்றவையும் கருப்பொருள்கள் என்று கூறலாம்.இயற்கை வளம் மிகுந்த மலைநிலத்தில் பல்வேறு விளை பொருள்கள் காணப்படுகின்ற தன்மையை,

**"நறுங்காழ் கொன்று கோட்டின் வித்திய**
**குறுங்கதிர்த் தோரை நெடுங்கால் ஐயவி**
**ஐவன வெண்ணெலொ டரில் கொள்பு நீடி**
**இஞ்சி மஞ்சட் பைங்கறி பிறவும்"**[40]

என்ற அடிகள் குறிப்பிடுகின்றன. அதாவது மணமிக்க அகில், சந்தனம் முதலிய மரங்களும் மேட்டு நிலத்தில் குறுகிய கதிர்களையுடைய தோரையும், சிறுவெண்கடுகும், ஐவனமென்னும் வெண்ணெல்லோடு இஞ்சியும், மஞ்சளும் பசிய மிளகு கொடி என பல்வேறு விளைப்பொருள்கள் நிலத்தில் குவிக்கப்பட்டிருந்ததை உணர்த்துகின்றன.

"இயற்கையில் பருவகால மாற்ற விளைவுகள், இயற்கையின் கூறுகள் என ஒரு பெரிய உலகமே காணப்படுகிறது. இவ்வகைப் பொருள்கள் மனிதனின் செயல்களுக்கு துணைபோவதால் இவற்றை கருப்பொருள்கள் என்பார்"[41] மணவாளன் குறிப்பிடுகிறார். இவ்வகையாக கருப்பொருள்கள் பற்றி,

**"ஆரணங்கு உயர்ந்தோர் அல்லோர் புள்விலங்கு**
**ஊர்நீர் பூமரம் உணாப் பறை யாழ்பண்**
**தொழில் எனக்கரு ஈரெழு வகைத்தாகும்"**[42]

என பதினான்கு வகை உடையதாக நம்பியகப்பொருள் குறிப்பிடுகின்றது. அவையே தெய்வம், உயர்ந்தோர், ஏனையோர், பறவை, விலங்கு, ஊர், நீர், பூ, மரம், உணவு, பறை, யாழ், பண், தொழில் என்பன பதினான்கு என்று நம்பியகப்பொருள் எடுத்துரைப்பதை உணர முடிகிறது.

### 2.10.1 குறிஞ்சி நிலத்திற்குரிய கருப்பொருள்கள்

தமிழ்ச் சான்றோர் தமிழக நிலத்தை நான்கு வகையாகப் பிரித்து 'நானிலம்' எனப் பெயரிட்டனர். அவை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் எனப்படும். குறிஞ்சி நிலத்தில் 'குறிஞ்சி' என்னும் பெயர் கொண்ட மலர்களே சிறப்பானவையாகக் கருதப்படுகிறது. அம்மலர்களை கானவர்கள் விரும்பி அணிந்தனர். இக்காரணங்களால் இப்பகுதி 'குறிஞ்சி' எனப்பெயர் பெற்றது. மலையிலும் மலை சார்ந்த இடத்திலும் காடுகள் இருத்தலே பெருவழக்காகும். அகில், சந்தனம், சிறுமூங்கில், பெருமூங்கில், பலா, சுரபுன்னை, வாழை, மா முதலிய பலவகை மரங்கள் செறிந்த காடுகள் இருக்கும். குரங்கினங்கள், யானை, புலி, கரடி, காட்டுப்பன்றி, காட்டுப்பசு, வரையாடு முதலிய விலங்குகள் அக்காடுகளில் இருத்தல் இயல்பாகும்.

மேற்குத் தொடர்ச்சி மலை போன்ற பெரிய மலைகளிலும் அவற்றின் சரிவுகளிலும் மிளகுக்கொடி மரங்களைச் சுற்றிப் படரும். பெரிய மலைகளில் நீரருவிகள் கீழ்நோக்கிப் பாய்ந்த படியிருக்கும். குற்றால நீரருவியே இதற்குச் சான்றாகக் கூறலாம். குறிஞ்சிநிலத் தலைவன் வெற்பன், பொருப்பன், சிலம்பன் என்னும் திணைப்பெயர் பெற்றான். தலைவி கொடிச்சி எனப்பட்டாள். குடிமக்கள் ஆடவர், கானவர், குன்றுவர், வேட்டுவர் எனப்பட்டனர். அவர்தம் பெண்டிர் குன்றுவித்தியர், வேட்டுவித்தியர், குறத்தியர் எனப்பெயர் பெற்றனர். குறிஞ்சி நிலக்கடவுள் முருகன். இந்நிலத்தவர் தொழில் தினை முதலிய பயிரிடுதல், தேன் எடுத்தல், கிழங்கு அகழ்தல், கிளியோட்டுதல், வேட்டையாடுதல் முதலியனவாகும். இவர்கள் தொண்டகப்பறை, குறிஞ்சியாழ் போன்ற இசைக் கருவிகளைப் பயன்படுத்தி பின்பு குறிஞ்சிப் பண்ணைப் பாடினார்கள். குறிஞ்சி நில விலங்குகளுள் சிறந்தவை புலி, கரடி, பன்றி, யானை முதலியனவாகும். பறவைகளுள் சிறந்தவை கிளியும் மயிலுமாகும். குறிஞ்சி காந்தள், வேங்கை, சுனைக்குவளை மலர்கள் இங்கு சிறந்த மலர்களாகும். குறிஞ்சி நில ஊர்கள் சிறுகுடி எனப் பெயர் பெற்றன. குறிஞ்சி நிலத்தின் தன்மைக்கேற்ப அங்குள்ள பூ, மரம், பறவை, விலங்கு, யாழ், மக்கள் போன்றோர் பெயர் பெற்றதை அறியமுடிகிறது.

### 2.10.1.1 சுனை நீரின் தன்மை

குறிஞ்சி நிலத்தில் உள்ள சுனைநீரின் தன்மையை குறிஞ்சிப்பாட்டு மிகவும் சிறப்பாக,

> **“பழுமிள குக்க பாறை நெடுஞ்சுனை**
> **முழுமுதற் கொக்கின் தீங்கனி உதிர்ந்தெனப்**
> **கயிறூர் பாணியில் தளருஞ் சாரல்”[43]**

என்ற பாடலடிகள் மூலம் உணர்த்துகின்றன. அதாவது குறிஞ்சி நிலம் கற்பாறைகள் மிகுந்த இடமாதலின் பழுத்த மிளகு அப்பாறைகளின் மீது சிந்திக் கிடத்தல் இயல்பாகும். நீண்ட பெரிய சுனைகளில் மாம்பழங்கள் முதலிய பழங்கள் உதிர்ந்து கிடக்கும். இங்ஙனமே சுனையின் அருகில் உள்ள பலாமரத்து முற்றிய பழம் வெடித்து சுனைநீரில் விழுவதும் இயல்பாகும். இப்பழங்களில் உள்ள தேன் சுனைநீரில் கலந்து, அந்த தேன் கலந்த நீரை மயிலானது பருகும். அவ்வாறு பருகவே மயக்கம் உண்டாகித் தள்ளாடும் என்பதை எடுத்துரைக்கின்றது.

### 2.10.1.2 மலைநாட்டு அழகிய காட்சிகள்

மலையில் நிகழும் பல்வேறு அழகிய காட்சிகளை,

**"எல்லை செல்ல ஏழ்ஊர்பு இறைஞ்சிப்**

**பல்கதிர் மண்டிலம் கல்சேர்பு மறைய**

**……………………………………**

**……………………………………**

**……………………………………**

**வான மாமலை வாய்சூழ் கறுப்பக் கானம்**

**கல்லென் விரட்டப் புள்ளினம் ஒலிப்ப"**[44]

என்ற குறிஞ்சிப்பாட்டு குறிப்பிடுகிறது. கதிரவன் மேற்றிசையில் மறைகிறான். மான்கள் மரத்தடியில் திரள்கின்றன. பசுக்கள் கன்றுகளை அழைத்தப்படி மன்றுகளில் நுழைகின்றன. ஊதுகின்ற கொம்பு போன்ற ஓசையுடையதும் வளைந்த வாயை பெற்றதுமாகிய அன்றில், பனையின் உள்மடலிலிருந்து தன் பெடையை அழைக்கின்றது. பாம்பு மேய்தற் பொருட்டுத் தன் மாணிக்கத்தை வெளியே உமிழ்கின்றது. கோவலர் பல இடங்களில் நின்று, ஆம்பற் குழலிற் பண் இசைக்கின்றனர். ஆம்பலின் அழகிய இதழ்கள் முறுக்கு அவிழ்கின்றன. செல்வ மனைகளில் பொலிவு பெற்ற தொடியணிந்த மகளிர் விளக்கை ஏற்றி அந்தி காலத்துத் தொழிலை நிகழ்த்துகின்றனர். பின்அவர்கள் காட்டில் வாழ்கின்ற விண்ணைத் தொடும் பரணின் மீது தீக்கடை கோலாலே நெருப்பைப் பிறப்பித்து எரிக்கின்றனர். மேகங்கள் பெரிய மலையிடத்தைச் சூழ்ந்து கறுக்கின்றன. காட்டிலுள்ள விலங்குகள் 'கல்' என்னும் ஓசையுடையனவாய் ஒற்றுக்கொன்று மாறி ஒலிக்கின்றன. இதில் சூரியன் மேற்திசையில் மறையும்போது மலையில் நிகழும் பல்வேறு காட்சிகளை சிறப்பாக கூறப்பட்டுள்ளன.

### 2.10.1.3 கானவர் உழைப்பு

கானவர் தோரை நெல் முதலியவற்றைப் பயிரிட நிலமில்லாத போது, நறிய அகில் மரங்களையும், சந்தன மரங்களையும் வெட்டி அவை இருந்த நிலத்தைப் பதப்படுத்தி விளைநிலமாக்குவர். தோரை நெல், வெண் சிறு கடுகு, ஐவன நெல், வெண்ணெய், இஞ்சி, மஞ்சள், மிளகு போன்றவற்றைப் பயிராக்குவர். பின் திணைப் புனங்களைக் காவல் காப்பர். கானவர் யானையாலோ, புலியாலோ தாக்கப்படாத பெரிய மரக்கிளைகளிடையில் பரணை அமைப்பர். அப்பரணில் இருந்து கொண்டு பயிர்களைத் தின்ன வரும் கிளி, கரடி, யானை, காட்டுப்பன்றி முதலியவற்றைக் கவன்கல் எறிந்தும்,

பறையடித்து ஓசையுண்டாக்கியும், எரிகொள்ளியைக் காட்டியும் விரட்டுவர். பின்பு கையாற் சுற்றின காலத்து தன்னிடத்துப் பிறக்கும் ஓசையால் கிளி முதலானவற்றை ஓட்டுங்கருவியைத் 'தழல்' என்றழைப்பர். அதனைக் 'கவண்' என்பாரும் உளர். மூங்கிலைக் கண்ணுக்குக் கண் ஒன்றிலே தட்டுவதோர் கருவி 'தட்டை' எனப்படும். இவை போன்றே கிளிகடி கருவி 'குளிர்' என்ற ஒன்றும் உண்டு. கானவர் இவற்றின் உதவியால் பறைகளையும், பிற விலங்குகளையும் விரட்டுவர். மலைவாணர் மகளிரே பெரும்பாலும் பகற்காலத்தில் தினைப்புனங்களைக் காவல் காப்பர் என்பதை இலக்கியங்கள் சுட்டுகின்றன. (குறிஞ்சி.பா. 35-44) யானை தினைப் பயிரைத் உண்பதனால் கானவர் வில்லில் நாண் ஏற்றி அம்மை யானை மீது எய்வர். காடெல்லாம் 'கல்' என்னும் ஓசை உண்டாகும் படி வாயை மடித்துவிடுகின்ற சீழ்க்கையால் மிக்க ஓசையை உண்டாக்கி, அக்களிற்றைத் தினைப்புனத்தினின்றும் ஓட்டும் தன்மையை,

**"கணைவிடு புடையூக் கானங் கல்லென**
**மடிவிடு வீளையர் வெடிபடுத் தெதிரக்"**[45]

என்ற அடிகள் வழியாக காண முடிகிறது. இவ்வாறு கானவரால் விரட்டப்பட்ட யானை சினம் விளங்குதற்குக் காரணமாகி மதத்தாலே மதநீர் பொழிந்துக் கார்கால இடியைப் போல முழக்கத்தை உண்டாக்கித் தன் துதிக்கையைச் சுருட்டி நிலத்தே எறிந்து கூற்றுவனைப் போல பாய்ந்தோடி காண்பனவற்றையெல்லாம் அழிக்கின்ற செயலை,

**"கார்ப்பெயல் உருமிற் பிளிறிச் சீர்த்தக**
**இரும்பிணர்த் தடக்கை இருநிலஞ் சேர்த்திச்**
**சினந்திகழ் கடாஅஞ் செருக்கிமரங் கொல்பு**
**மையல் வேழும் மடங்கலின் எதிர்தர**
**உய்விடம் அறியேம் ஆகி ஓய் யெனத்"**[46]

என்ற குறிஞ்சிப்பாட்டு அடிகள் எடுத்துரைக்கின்றன. இவற்றிலிருந்து கானவர் தினைப்புனம் காக்கும் போது அதை உண்ணவரும் விலங்குகளை விரட்ட பல்வேறு கருவிகளைப் பயன்படுத்தியதை உணர்த்தப்பட்டுள்ளன.

## 2.10.2 முல்லை நிலக் கருப்பொருள்கள்

காடும் காடு சார்ந்த இடமும் 'முல்லை' எனப்படும். இங்கு காடு என்பது குறிஞ்சி நிலக்காடு போன்ற மரச்செறிவு உடையதன்று. இளங்காடு

என்று சொல்லத்தகும் முறையில் அமைந்த நிலப்பகுதியாகும். இங்கு ஆடு மாடுகளின் மேய்ச்சலுக்குரிய புல்வெளிகளும், கொன்றை, காயா, குருந்தம் முதலிய மரங்களும், மல்லிகை, முல்லை, பிடவம், பீர்க்கம் முதலிய செடி கொடிகளும் இருந்தன. இவற்றுள் முல்லை மலரே சிறந்து விளங்கியது. இங்கு வாழ்ந்த ஆயரும் ஆய்ச்சியரும் முல்லை மலர்களை விரும்பிச் சூடிக் கொண்டனர். இம்மலர் கற்பின் மலராகப் போற்றப்பட்டது. ஆதலின் இந்நிலம் மலரின் பெயரைக் கொண்டே முல்லை நிலம் எனப்பெயர்ப் பெற்றது. தன்னைப் பிரிந்த தலைவன் தன்னிடம் வரும் வரையில் ஆற்றியிருக்கும் தலைவியின் ஒழுக்கத்தை 'முல்லை' என்று அகப்பொருள் இலக்கணம் கூறுகிறது.

முல்லை நிலத்தலைவன் அண்ணல், தோன்றல், குறும்பொறை நாடன் எனப்பெயர் பெற்றான். தலைவி மனை, கிழத்தி எனப்பெயர் பெற்றாள். குடிமக்களுள் ஆடவர், ஆயர், கோவலர், இடையர், பொதுவர் எனப் பெயர் பெற்றனர். அவர்தம் பெண்டிர் ஆய்ச்சியர், கோவிச்சியர், இடைச்சியர், பொதுவிச்சியர் எனப்பட்டனர். அவர்கள் தொழில் ஆடு மாடுகளை மேய்த்தலும், வரகு சாமை முதலியவற்றைப் பயிரிடுதலுமாகும். அவர்கள் ஏறுகோட்பறையை முழக்கினார்கள். முல்லையாழை இசைத்தனர். கானக் கோழி, சிவல் என்னும் பறவைகள் அங்கு சிறப்பானவையாக கருதப்பட்டன. இந்நிலத்திலுள்ள அழகான காட்சிகளை இலக்கியங்கள் வாயிலாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

### 2.10.2.1 முல்லை நிலக்காட்சிகள்

முல்லை நிலம் மிகவும் அழகாக காட்சியளிப்பதை,

**"சிறுதினை கொய்யக் கவ்வை கறுப்பக்**
**கருங்கால் வரகின் இருங்குரல் புலர**
**……………………………………**
**……………………………………**
**வல்லோன் தைஇய வெறிக்களங் கடுப்ப**
**முல்லை சான்ற புறவு அணிந்து"**[47]

என்ற பாடல்கள் உணர்த்துகின்றன. முல்லை நிலத்தில் சிறிய தினைக் கதிர்கள் கொய்யப்படவும், எள் இளங்காய்களானது முற்றிக் கருநிறங் கொள்ளவும், கரிய தாளையுடைய வரகின் கதிர்கள் முற்றவும், அங்கு மான்கள் தன் பிணைகளோடு துள்ளி விளையாடியும், அழகிய பூக்களான கொன்றை, முசுண்டை, முல்லை போன்ற மலர்கள் பாறைகளில் பரவி

கிடப்பதைப் பார்ப்பதற்கு வெறியாட்டுகளம் போன்று காட்சியளிப்பதாகக் குறிஞ்சிப்பாட்டு எடுத்துரைக்கின்றன.

### 2.10.2.2 ஆயர்மகள்

முல்லை நிலத்தில் வாழும் மக்களை ஆயர், ஆய்ச்சியர் என்று கூறுவர். அவர்களின் பெண்ணை ஆயர்மகள் என்றும், அவளின் தொழிலைப் பற்றியும் இலக்கியங்கள் சிறப்பாக எடுத்துரைக்கின்றன. "ஆயர்மகள் வைகறையில் எழுந்து, தயிரைக் கடைந்து வெண்ணெய் எடுத்தாள். பூக்களாற் செய்த சுமட்டைத் (சும்மாடு) தலையிலே வைத்தாள். அதன்மீது மோர்ப்பானையை வைத்துக் கொண்டு குறிஞ்சிநிலம் சென்று மோரை விற்றாள். அவள் மாமை நிறத்தினாள். மூங்கில் போன்ற தோள்களையுடையவள். கருமணல் போன்ற கூந்தலையுடையவள். தாளுருவி என்னும் அணிகலன் அசைகின்ற காதினை உடையவள். அவள் மோர் விற்ற வருவாயைக் கொண்டு தன் குடும்பத்துக்கு வேண்டிய நெல் முதலியவற்றை வாங்கினாள். நெய் விற்ற விலைக்கு பாலெருமையையும், நல்ல பசுவையும் வாங்கினாள். அவற்றோடு தன்மனைக்கு மீண்டாள். அவளும் அவளைச் சேர்ந்தவரும் தினைச்சோறும் பாலும் உண்டனர்"[48] என்று மா. இராசமாணிக்கனார் குறிப்பிடுகின்றார். இவை ஆய்மகள் சிறந்த பண்புடையவள் என்றும், அவள் இடையறாது தனக்கு உகந்த தொழிலைச் செய்பவள் என்றும் இலக்கியங்கள் வழியாக உணர்த்துகின்றன.

### 2.10.2.3 ஆயர் மகன்

ஆயன் வடுவழுந்தின வலிய அடியினையுடையவன், பசுக்களை ஓட்டும் தடியைக் கையிற் பிடித்தவன். மரங்களை வெட்டும் கோடாரி உடையவன். பசுக்கறந்த பாற்கையைத் தடவின தலைமயிரையுடையவன். மரங்களிலிருந்தும் கொடிகளிலிருந்தும் பறித்த மலர்களை மாலையாக அணிந்தவன். ஒற்றையாடையை உடையவன். பாற்சோற்றை உண்பவன். அவன் கன்றுகளையும் பசுக்களையும் காட்டி மேய்ப்பவன். தக்கபதத்தில் வெட்டி ஒழுங்கு செய்யப்பட்ட மூங்கிற்கழியில் தீக்கடை கோலின் உதவி கொண்டு செய்யப்பட்ட துளையில் வாயை வைத்துப் பலவகை இனிய ஓசைகளை எழுப்புபவன். பின்பு கொம்பிடத்தே வளைத்துக் கட்டிய விரலால் நகர்த்தி வாசிக்கும் மரக்கயிராகிய நரம்பினையுடைய வில்யாழில் குறிஞ்சிப்பண்ணை பாடும் தன்மை உடையவன் என்பதை முல்லைப்பாட்டு சுட்டுகின்றன.

### 2.10.2.4 முல்லைநில சிற்றூர்கள்

முல்லை நிலத்தில் பயிரிட்டு வாழ்ந்த குடிமக்கள் இருந்த சிற்றூர் சிலவே. அவர்களின் வீட்டுமுற்றத்தில் பிடிகள் நின்றாற் போல வரகினைக் கொண்ட குதிர்கள் நின்றன. வீட்டுப் பந்தரில் யானையின் காலை ஒத்த வரகு திரிகை நடப்பட்டிருந்தது. வீட்டையடுத்த கொட்டிலில் குறியவண்டி உருளைகளும் கலப்பைகளும் சுவற்றில் சார்த்தி வைக்கப்பட்டிருந்தன. வீடு வரகு வைக்கோலால் வேயப்பட்டிருந்தது. இச்சிற்றூர் மக்கள் உழவுத்தொழிலிற் பயின்ற பெரிய எருதுகளைக் கலப்பையில் சேர்த்து, உடும்பின் முகத்தை ஒத்த பெருங்கொழு நிலத்தில் மறையுமாறு அழுத்தி உழுதனர். பின்பு விதை விதைத்து களை எடுத்தனர். பின்பு பயிர் விளைந்ததும் அறுவடை செய்தனர். இவ்வாறாக முல்லை நில மக்கள் இச்சிற்றூர்களில் வாழ்ந்து வந்தனர் என்பதை இலக்கியங்களால் அறிய முடிகிறது.

### 2.10.2.5 முல்லை நிலத்தின் தன்மை

கார்காலத்தில் நுண்மணற்பாங்கான நிலத்தில் இருந்த நெருங்கிய இலைகளையுடைய காயா அஞ்சனம் போல மலர்ந்தன. தளிரையும் கொத்தினையுடைய கொன்றை அழகிய பொன்னிறப் பூக்களைச் சொறிந்தன. கோடல் மரத்தின் குவிந்த முகைகள் அங்கை போல விரிந்தன. முல்லை நிலத்துப் பெருவழியில் முன்பனி தொடங்கும் காலத்தில் போதிய மழையைப் பெற்ற வரகு கதிரை ஈன்றது. அந்நிலத்தில் முறுக்குண்ட கொம்பினையுடைய கலைமானும் அதன் பெண்மானும் துள்ளி விளையாடியதை,

**“செறியிலைக் காயா அஞ்சன மலர**
**முறியிணர்க் கொன்றை நன்பொன் காலக்**
**கோடற் குவிமுகை யங்கை யவிழக்**
**தோடர் தோன்றி குருதி பூப்பக்**
**கான நந்திய செந்நிலப் பெருவழி**
**வானம் வாய்த்த வாங்குகதிர் வரகின்**
**திரிமருப் பிரலையொடு மடமானுகள**
**எதிர்செல் வெண்மழை பொழியுந் திங்கள்”**[49]

என்ற முல்லைப்பாட்டு வரிகள் உணர்த்துகின்றன. இங்கு கருப்பொருள்களான மக்கள்,மலர், விலங்கு போன்றவை பயின்று வருவதை அறிய முடிகின்றது.

மேலும் முல்லை நிலக்கருப்பொருள்களைக் கூறுமிடத்து, "மணம் கமழ்வதில் பெருமை பெற்றது முல்லை மலரேயாகும். இம்மணம் ஒரு இன்பக் கிளர்ச்சியை எழுப்ப வல்லது; காதல் உணர்வைத் தூண்டுவது; காமனது கணைகளில் ஒன்று முல்லை; முல்லை அரும்பும் மங்கையும் காதல் அரும்பப்பெறுவாள். முல்லை பூப்பதுப் போல அவளும் பூப்படைவாள். பின் அவளும் மணப்பாள். மணத்தல் என்றால் கூடுதல் என்று பொருள். இருவரையும் கூட வைத்தது முல்லை மலர்தானே. இத்தொடர்பில் தான் அவர்களது வாழ்க்கை இணைப்பு நிகழ்ச்சி மணம் என்று பெயர் பெற்றது. அதுவே வதுவை மணம் ஆயிற்று. எனவே முல்லைமணம் ஈந்த சொல்லே திருமணம்"[50] என்று கவிஞர் இளஞ்சேகரன் குறிப்பிட்டுள்ளார். இதன் மூலம் மலர்களில் முல்லை மலரே சிறந்தது என்பதை உணரமுடிகிறது.

### 2.10.3 மருதநிலக் கருப்பொருள்கள்

வயலும் வயல் சார்ந்த பகுதியும் மருதம் எனப்படும். ஆற்றுப் பாய்ச்சல் ஏரிப்பாய்ச்சல் உள்ள நிலப்பகுதியே மருத நிலமாகும். இந்நிலத்தில் மருத மரங்கள் மிகுதியாதலின் இது மருதம் எனப் பெயர் பெற்றது. இந்த நிலம் நீர் வளம் மிக்கது. இது நெல், கரும்பு,புகையிலை முதலிய உயரிய பயிர்கள் நன்கு பயிராகும் நிலமாகும். உணவுக் குறைபாடு இல்லாத நிலம் ஆதலின் ஐவகை நிலங்களிலும் மருதமே உயர்வாகக் கருதப்படுகிறது. உலகத்தில் புகழ்பெற்ற பழைய நாகரிகங்கள் அனைத்தும் ஆற்றுப் பாய்ச்சல் நிறைந்த மருத நிலத்திலே தான் தோன்றின. இந்நிலத்துத் தலைமகனை மகிழ்நன் ஊரன் என்றும், தலைமகள் மனைவி எனப்பட்டாள். குடிமக்கள் உழவர், களமர், கடையர் எனப்பட்டனர். அவர்தம் பெண்டிர் உழத்தியர், கடைசியர் எனப்பட்டனர். இந்நிலக்கடவுள் இந்திரன். இவர்கள் நிலத்தை உழுதல், விதை விதைத்தல், களை எடுத்தல், நீர் பாய்ச்சுதல், அறுவடைசெய்தல், கிடாவிடல், ஆறுகளிலும் பொய்கைகளிலும் நீராடல் முதலிய தொழில்களில் ஈடுபட்டார்கள். இந்நிலத்திற்குரிய யாழ் மருதயாழாகும். இங்கு சிறந்திருந்த மலர்கள் குவளையும், தாமரையும் கழுநீருமாகும். இந்நிலத்தில் விளையும் பயிர் செந்நெல்லாகும். இம்மருத நிலத்தில் வளர்ந்துள்ள மரம் காஞ்சி, வஞ்சி மற்றும் மருத மரங்களாகும். இங்கு வாழும் பறவைகள் நாரை, நீர்க்கோழி, குருகு போன்றவைகளாகும். இந்நிலத்திலுள்ள மக்கள் வாழ்கின்ற பகுதிகளை பேரூர், மூதூர் போன்ற பெயர்களால் அழைத்தனர். இம்மக்கள் மருத யாழைக் கொண்டு மருதப் பண்ணைக் இசைத்து மகிழ்ந்தனர். இம்மருதப்

பண் காலை நேரத்திற்குரியது யாழோ மருதப்பண்ணைப் பாட பொழுது விடிந்தது என்பர். இந்நிலத்தைப் பற்றி மா.இராசமாணிக்கனார் கூறுகையில், "வட வெள்ளாற்றுக்கும் தென்வெள்ளாற்றுக்கும் இடைப்பட்ட நிலப்பகுதியே சோழநாடாகும். இந்நாட்டைக் காவிரி தன் நன்னீரால் பல நூற்றாண்டுகளாகக் காத்து வருகின்றது. கஞ்சங்குல்லை தீயவும், மரக்கொம்புகளை நெருப்பத் தின்னவும் மேகம் கடல்நீரை முகத்தலை மறப்பவும் நேரும் பொழுது நாட்டில் வற்கடம் தோன்றும். அக்கொடிய காலத்திலும் காவிரியில் நீர் பெருகி வரும் அந்நீரானது மருத நிலத்தைச் செழிப்பாக மாற்றும்"[51] என்று கூறுகிறார். இதில் மருதநிலம் நீர்வளம் நிறைந்த நிலம் என்பதையும் அங்கு பலவகையான மரங்கள் மற்றும் மலர்கள், பயிர்கள் போன்றவை செழிப்பாக வளரும் என்பதையும் சுட்டுவதைக் காணமுடிகிறது.

### 2.10.3.1 மருத நிலத்தின் சிறப்பு

கருப்பொருள்களைக் கொண்டு மருதநிலத்தின் சிறப்பை மிகச் சிறப்பாக பட்டினப்பாலை எடுத்துக்கூறுகின்றது. இம்மருதநிலத்தில் வெள்ளிய பூக்களையுடைய கரும்புகளும், செந்நெல்லும் வளர்ந்துள்ளன. குவளை மலர்களும், அழகிய இதழ்களையுடைய நெய்தல் மலரும் மலர்ந்துள்ளன. அவ்விடம் முதலைகள் திரிந்த இடமகன்ற பொய்கைகளையுடைய மருதநிலம் என்று கருப்பொருள்களைக் கொண்டு மருதநிலத்தை பட்டினப்பாலை சிறப்பித்துள்ளன. இதனையே,

**"வெண்பூக் கரும்பொடு செந்நெல் நீடி**
**மாயிதழ்க் குவளையொடு நெய்தலும் மயங்கிக்**
**கராஅங் கலித்த கண்ணகன் பொய்கை"**[52]

என்ற பாடலடிகள் சுட்டுகின்றன. இவற்றிலிருந்து மருதநிலம் வளம் நிறைந்த செழிப்பான நிலம் என்பது புலனாகிறது.

### 2.10.4 நெய்தல் நிலக்கருப்பொருள்கள்

கடலும் கடல் சார்ந்த பகுதியும் நெய்தல் எனப்பெயர் பெறும். "கடற்கரையில் வாழும் பரதவரே இந்நிலத்துக்குரிய குடிமக்களாவர். அவர்கள் பட்டினம் என்ற பேரூர்களிலும், பாக்கம் என்ற சிற்றூர்களிலும் வாழ்ந்தனர். அவருள் தலைவராக கூறப்படுபவர் சேர்ப்பன், புலம்பன் எனப்பட்டனர். அவர்தம் பெண்டிர் பரத்தியர், நுளைச்சியர் எனவும் அழைக்கப்பட்டனர். அவர்தம் குடிமக்களுள் ஆடவர் பரதர், நுளையர்,

அளவர், வலையர் எனவும், அவர்தம் பெண்டிர் பரத்தியர், நுளைச்சியர், அளத்தியர், வலைச்சியர் எனவும் அழைக்கப்பட்டனர்"[53] என பத்துப்பாட்டு ஆராய்ச்சி என்னும் நூலில் மா. இராசமாணிக்கனார் கூறியுள்ளார்.

நெய்தல் நில மக்கள் மழைக் கடவுளான வருணனைத் தெய்வமாக வழிப்பட்டனர். சேர்ப்பன், பரதர், பரத்தியர் போன்ற மக்கள் வாழ்ந்தனர். இங்கு வாழும் மக்கள் கடலுக்குச் சென்று வலை வீசி மீன் பிடித்தனர்.

பின்பு உப்பை விளைவித்தனர். தாம் பிடித்த மீனையும் உப்பையும் வேறு நிலங்களுக்கு கொண்டு சென்று விற்று, தமக்குத் தேவையான பொருள்களை வாங்கி வந்தனர். அங்குள்ள கடலில் முதலை, சுறா போன்ற உயிரினங்களும், நெய்தல், தாழை போன்ற மலர்களும் இருந்தன. கடற்கரை ஓரங்களில் புன்னைமரம், ஞாழல் மரம் போன்றவை உயர்ந்து வளர்ந்திருந்தன. "நெய்நில மக்கள் வாழ்ந்த பகுதியை 'பட்டினம்,பாக்கம், மணற்கிணறு, உவர்க்கழி என்று அழைப்பதாக கா. கோ. வேங்கடராமன் குறிப்பிடுகின்றார்"[54]

இந்நில மக்கள் விளரியாழ், மீன்கோட்பறை, பம்பை முதலானவற்றையும், செவ்வழி என்னும் பண்ணையும் பயன்படுத்தினார்கள். இவற்றில் "செவ்வழிப் பண் மாலை நேரத்திற்குரியது"[55] என்று அ. தட்சிணா மூர்த்தி குறிப்பிடுகின்றார். இதன் மூலம் காலை மாலை என நேரத்திற்கேற்ப பண் வாசிக்கப்பட்டதை அறியமுடிகிறது.

### 2.10.4.1 வருணன் வழிபாடும் பரதவர் செயலும்

தாழையின் அடியிலே நின்ற வெண்டாளியின் குளிர்ந்த மலரால் புனைந்த மாலையினை அணிந்து, சினையுடைய சுறாமீனின் கொம்பை நட்டு, தன் மனையிடத்தே உள்ள வலிய தெய்வமாகிய வருணனுக்கு வழிபாடு செய்தனர். பின் அத்தெய்வத்திற்கு இட்ட தாழை மலரை சூடியும், படைத்த பனங்கல்லினைப் பருகியும், பரந்த குளிர்ந்த கடலிடத்தே மீன் பிடிப்பதை தவிர்த்து உவா நாளில் தாம் விரும்பிய உணவை உண்டு மகிழ்ச்சியாக இருந்ததாகப் பட்டினப்பாலை இயம்புகின்றது. இச்செய்தியினை,

**"வீழ்த்தாழைத் தாட்டாழ்ந்த**

**வெண்கூ தாளத்துத் தண்பூங் கோதையர்**

**சினைச்சுறவின் கோடுநட்டி**

**மனைச்சேர்த்திய வல்லணங்கினால்**

**மடற்றாழை மலர்மலைந்தும்**

**பிணர்ப்பெண்ணைப் பிழிமாந்தியும்**

**புன்றலை இரும்பரதவர்**

**பைந்தழைமா மகளிரொடு**

**பாயிரும் பனிக்கடல் வேட்டஞ் செல்லாது"**[56]

என்ற வரிகள் மூலம் உணர முடிகின்றது. நிலம் கால் பகுதியாகவும், நீர் முக்காற் பகுதியாகிய கடலுக்குத் தெய்வமாகலின் வருணனை 'வல்லணங்கு' எனக் குறிப்பிட்டனர் என்பது தெளிவாகிறது.

### 2.10.5. பாலைநிலக் கருப்பொருள்கள்

சுரமும் சுரம் சார்ந்த பகுதியையும் பாலை நிலம் எனக் குறிப்பிடுவர். பாலைக்கெனத் தனி நிலம் குறிப்பிடப்படவில்லை. ஆனால் குறிஞ்சியும் முல்லையும் தன்னியல்பு திரிந்து வளம் குன்றிய நிலையில் வறட்சி தோன்றும் நிலமே பாலை நிலம் எனப்பட்டது.

"வறட்சி காலத்தில் அந்நிலப் பகுதியில் வாழும் குடிகளைக் காத்தோம்பும் கடமையுடைய அரசனானவன், அப்பொறுப்பினைப் புறக்கணித்துக் குடி ஓம்பாத அமைச்சரோடு கூடித் தன் கொடுங்கோலாட்சியால் நாட்டை அரசியலற்ற நாடாக்கினாற்போல கதிரவன் முதிர்ந்த வேனில் என்னும் அமைச்சனோடு கூடி குறிஞ்சியையும் முல்லையையும் பொசுக்குவதால் இரு நிலங்களும் தங்கள் இயற்கை முறைமையிலிருந்து மாறித் தங்களைச் சேர்ந்தாரை வெம்மையால் துன்புறுத்தி'பாலை' என்னும் வடிவைப்பெறும் என்று சிலப்பதிகாரம் குறிப்பிடுகின்றது."[57]

குறிஞ்சி, முல்லை என்னும் இரண்டு நிலங்களும் தனித்தனியாகப் பாலையாகத் திரிதலும் உண்டு. இங்ஙனம் பாலையாகத் திரிந்த நிலத்தையும் சேர்த்து நிலம் ஐவகையாகக் குறிப்பிடுகின்றனர். எனவே, பாலை என்பது புன்செய் விளைவு அற்றது என்றும், நீர்வளம் மிக்க குறைந்த பகுதி என்றும், வெப்பம் மிகுந்த கடுமையான பாதை உடையது

என்றும் அதனால் மக்கள் நேர்மையாக வாழ வசதி அற்றது என்பதையும் இதன்மூலம் அறிய முடிகின்றது.

இப்பாலை நிலத்தில் வேட்டுவர் வாழ்ந்தனர். மேலும் வழிப்பறி செய்வதையே தொழிலாகக் கொண்ட ஆறலைக் கள்வர்களும் வாழ்ந்தனர். பாலை நிலத்தலைவன் விடலை, காளை, மீளி என்றழைக்கப்பட்டான். தலைவி 'எயிற்றி' எனவும் அழைக்கப்பட்டாள். அந்நிலத்தில் வாழும் குடிமக்களுள் ஆடவரை எயினர், மறவர் எனவும், அவர்தம் பெண்டிரை 'எயிற்றியர், மறத்தியர் எனவும் அழைத்தனர். இவர்கள் வாழ்ந்த ஊர்கள் பறத்தலை, குறும்பு எனப் பெயர் பெற்றன. இவர்கள் தொழில் வழிப்பறி செய்வதும், பகைவருடைய கால்நடைகளை கவர்வதும், பிற ஊர்களுக்குச் சென்று கொள்ளையடிப்பதுமாகும். இவர்கள் பறை நிரைகோட் பறையும், துடியுமாகும். இந்நிலத்திற்குரிய யாழ் பாலையாழாகும். பண் பஞ்சுரம் என்பதாகும். இங்கு (குறவம்) குரா, பாதிரி மலர்கள் சிறந்தவையாகக் கருதப்படுகிறது. மேலும் இங்குள்ள மரங்களில் இருப்பை, ஓமை, உழிஞை, நெமை, பாலை போன்ற மரங்கள் சிறப்பானவையாக கூறப்படுவதை இலக்கியங்கள் நமக்கு உணர்த்துகின்றன.

### 2.10.5.1 பாலை நில இயல்பு

மக்கள் வாழ இயலாத நிலம் கொடிய வெப்பம் மிகுந்த பாலை நிலம். அந்நிலத்தின் இயல்பை,

**"இருவெதிர்ப் பைந்தூறு கூர்எரி நைப்ப**
**நிழத்த யானை மேய்புலம் படரக்**
**கலித்த இயவர் இயம்தொட் டன்ன**
**கண்விடுப்பு உடையூஉத் தட்டை கவின்அழிந்து**
**அருவி யான்ற அணியில் மாமலை"**[58]

என்ற வரிகள் சுட்டுகின்றன. அதாவது மூங்கில் புதரில் தோன்றிய நெருப்பு அப்புதரை சுட்டெரித்ததால் யானைகள் மேய்ச்சல் கிடைக்கும் இடங்களை நோக்கி அம் மூங்கிற்காடுகள் அழியும் படி ஒடித்துக்கொண்டு செல்கின்றன. மேலும் அங்கு அருவிகள் இல்லாமையால் அழகு இழந்து வாழ்வதற்கு பயனற்ற பாலை நிலமாக காணப்படுவதை இவை உணர்த்துகின்றன.

### 2.10.5.2 பாலைப் பண்ணின் சிறப்பு

ஆறலைக் கள்வர்கள் பாலை நில வழியே செல்லும் பாணரையோ, கூத்தரையோ தாக்க முனைதல் வழக்கமாகும். அப்பொழுது அவர்கள் பாலை யாழை இசைத்து உருக்கமாகப் பாடுவார்கள். யாழோசையும், மிடற்றோசையும் வன்னெஞ்சராகிய ஆறலைக் கள்வர் மனதையும் கவருமாம். அதைக்கேட்ட கள்வர்கள் தங்கள் கொலைக் கருவிகளை நெகிழவிட்டுத் தங்களை மறந்து நிற்பார்கள். அந்த அளவுக்கு இனிமையுடையது பாலை யாழாகும். மேலும் பாலை என்பதை ஒருவகை மரம் என்றும் கூறுவர். மலைநாட்டு மகளிர் அதன் மலரைப் பிற மலர்களோடு விரவி மாலையாக அமைத்து அணிந்து மகிழ்ந்ததாக குறிஞ்சிப்பாட்டு குறிப்பிடுகின்றது.

**"தில்லை பாலை கல்லிவா முல்லை"**[59]

என்னும் அடிகளிலிருந்து பாலை என்பது கருப்பொருளில் ஒன்றான மலர் என்பதும் புலப்படுகின்றன.

## 2.11. உரிப்பொருள்கள்

அகப்பாடல்களில் அமையும் பொருள் முதல், கரு, உரி என முத்திறப்படும். இவை மூன்றிலும் உரிப்பொருளேபாடலின் அடிக்கருத்தாக அமைந்து பாடலுக்கு சிறப்பூட்டுகின்றன. உரிப்பொருள் பற்றி,

"சங்க இலக்கியத்தில் முதல், கரு, உரி என மூன்று பொருளும் அமையும் அகப்பாடல்களும் உண்டு. முதற்பொருளின்றிக் கருப்பொருளும் உரிப்பொருளும் மட்டுமே அமையும் பாடல்கள் சங்க இலக்கியத்தில் பெரும்பான்மை உள்ளன. கருப்பொருளும் இல்லாமல் உரிப்பொருள் மட்டுமே அமையும் பாடல்களும் பல உள்ளன. முதலும் கருவும் இன்றியும் பாடல் அமையலாம். ஆனால் உரிப்பொருள் இன்றி பாடல்கள் அமையாது"[60] என தமிழண்ணல் குறிப்பிடுகின்றார்.

மேலும், "ஒரு பாடல் இன்ன திணைப் பாடல் என்று வகைப்படுத்தும் பொழுது முதல், கரு, உரி என்ற மூன்றும் இருந்தால் முதற்பொருளால் திணை பிரிக்கப்படும் என்றும், கருவும் உரியும் இருந்தால் கருப்பொருளால் திணை வகுக்கப்படும் என்றும், உரிப்பொருள் ஒன்று மட்டும் இருந்தால் அதனாலேயே திணை உணரப்படும் என்றும் இளம்பூரணார் விளக்குகின்றார்."[61] ஆனால் தொல்காப்பியர் உரிப்பொருளுக்கு இலக்கணம் கூறுமிடத்து,

**"புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்**

**ஊடல் அவற்றின் நிமித்தம் என்றிவை**

**தேரும் காலை திணைக்கு உரிப்பொருளே”[62]**

என்று கூறியுள்ளமையை காணமுடிகிறது. குறிஞ்சி நிலத்தில் மக்கள் வளத்துடன் எவ்வித குறையுமின்றி மகிழ்ச்சியாக இருப்பின் அந்நில உரிப்பொருள் புணர்தல் என்றும், தலைவன் தலைவியைவிட்டு வினைமேற் செல்ல பிரிகிறான். தலைவி அவன் வரும்வரை ஆற்றியிருப்பதால் முல்லை நிலத்து உரிப்பொருள் ‘இருத்தல்’ எனவும், பெயர் பெற்றன. மருத நிலத்தில் மக்கள் செல்வ செழிப்புடன் இருப்பதால் தலைவன் தலைவியை விட்டு, பரத்தையிற் செல்கிறான். பின் வீடு திரும்பும்போது தலைவியானவள் ஊடல் கொள்கிறாள். ஆதலால் இந்நில உரிப்பொருள் ‘ஊடல்’ எனப்பட்டது. நெய்தல் நிலத்தில் தலைவன் கடலில் மீன்பிடிக்கச் செல்கிறான். அவன் மீண்டு வீடு திரும்பும் வரை தலைவி தன் இல்லில் விளக்கேற்றி தலைவன் வரவை எதிர்பார்த்து இரக்கத்தோடு காத்திருக்கும் தன்மையால் இதன் உரிப்பொருள் ‘இரங்கல்’ என்று அழைக்கப்பட்டன. பாலை நிலத்தில் வளம் குன்றி நிலையில் தலைவன் வேற்றூர்க்கு பிரிந்து செல்வதனால் இந்நிலத்தின் உரிப்பொருள் ‘பிரிதல்’ என்று கூறப்பட்டுள்ளது. இவ்வாறு ஒவ்வொரு நிலத்திலும் வாழும் மக்களின் நிலையைப் பொறுத்தே உரிப்பொருள்கள் அமைக்கப்பட்டுள்ளன.

## 2.12 பிரிவு ஆற்றாமை

பிரிவு அவலம் முல்லைப் பாடல்களில் மிக அழகாக அழுத்தமாகவே புனைந்து காட்டப்பட்டுள்ளது. மாலை நேரமும் ஆனிரைகளின் மணியோசையும், குழலோசையும் தலைவியின் உயிரை வாட்டுகின்றன. கார்காலம் வரை ஆற்றியிருப்பதாகக் கூறிய தலைவி அக்காலம் தொடங்கியதை அறிந்ததுமே ஆற்றாமையுடையவளாகிறாள். இருப்பினும் தலைவனின் வரவை எதிர்நோக்கி ஆற்றியிருப்பதாக முல்லைப்பாட்டில்,

**“பருவரல் எவ்வம் களை மாயோய்! எனக்**

**காட்டவும் காட்டவும் காணாள் கலுழ்சிறந்து**

**பூப்போல் உண்கண் புலம்பு முத்து உறைப்ப”[63]**

என்ற பாடலடிகள் குறிப்பிடுகின்றன. முதற் பொருளும் கருப்பொருளும் அகப்பொருளேயன்றி அவைபாடற் பொருள்கள் அல்ல. ஏனெனில் மானிடரின் வினை நிகழ்ச்சி தான் பொதுவாக் கவிதைக்கும், சிறப்பாக

அகப்பொருட்களுக்கும் உயிராக அமைந்துள்ளன. எனவே மனிதனின் பல்வேறு நிகழ்ச்சிக்கு அடிப்படையாக அமைந்த மன நெகிழ்ச்சிதான் அகப்பொருளின் உயிர்நாடியாகும். இம்முப்பொருள்களைப் பற்றி கூறும்போது, ‘‘முதற்பொருள் இலக்கியம் என்னும் சொல்லோவியத்திற்கு சட்டகமாகவும், கருப்பொருள்கள் இதன் உடலுறுப்புகளாகவும், உரிப்பொருளானது உயிர்நாடியாகவும் அமைந்துள்ளதாக அ.அ.மணவாளன் குறிப்பிடுகின்றாார்.’’[64]

அகப்பாடல்களில் புணர்தல், இருத்தல், ஊடல், இரங்கல், பிரிதல் என்னும் பண்புகள் மிகவும் அழகாக புனைந்து காட்டப்பட்டுள்ளன. உரிப்பொருளே இலக்கியத்திற்கு அழகு சேர்க்கின்றன. இவற்றையெல்லாம் நோக்கும் பொழுது உரிப்பொருள் இன்றி எவ்வித பாடலும் அமையாது என்பது நமக்கு தெளிவாக புலப்படுகிறது. முப்பொருளிலும் உரிப்பொருளே சிறந்தது என்பதை இலக்கியங்கள் சுட்டுகின்றன.

## 2.13 புறத்திணை

அகத்துள் அடங்காத பொருண்மைகள் அனைத்தும் ‘புறம்’ என்று கூறப்படும். ஒத்த அன்புடையார் தாமேயன்றி எல்லோராலும் அனுபவித்து உணரப்பட்டு இது இவ்வாறு இருந்ததெனக் கூறப்படுவதாய், அறம் பொருள் என்னும் இயல்புடையதாய்ப் புறத்தே நிகழும் ஒழுக்கமாதலின் இதை புறப்பொருள் என்று கூறப்பட்டது. தொல்காப்பியர் அகத்திணைகளைப் போலவே புறத்திணைகளும் ஏழு என்றார். அவை வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் என்பனவாகும். ‘‘இவற்றுள் வெட்சி குறிஞ்சிக்கும், வஞ்சிமுல்லைக்கும், உழிஞை மருதத்திற்கும், தும்பை நெய்தலுக்கும், வாகை பாலைக்கும் புறனாம’’[65] என்கிறார்.

தொல்காப்பியர் ஒவ்வொரு அகப்பொருள் திணைக்கும் ஒவ்வொரு புறப்பொருள் திணை பொருந்தும் என்பதற்காக இரண்டையும் ஏழேழு திணைகளாக்கினார். ஆனால் பின்னர் வந்த புறப்பொருள் வெண்பாமாலை ஆசிரியராகிய ஐயனாரிதனார் பன்னிரு படலம் என்ற நூலைத் தழுவி புறத்திற்கு பன்னிரண்டு திணைகளை வகுத்துள்ளார். அவை, வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பை, வாகை, பாடாண், பொதுவியல், கைக்கிளை, பெருந்திணை என்பனவாகும். பகைவருடைய ஆநிரைகளை கவர்தலாகிய ஒழுக்கத்தைக் கூறுவது வெட்சி என்றும், அங்ஙனம் கவர்ந்து சென்ற ஆநிரைகளை உரியவர் மீட்பது

கரந்தையென்றும், பகைவரது நாட்டைக் கவர்தலை நினைந்து போர் செய்தற்கு மேற்செல்லலாகிய ஒழுக்கத்தைக் கூறுவது வஞ்சியென்றும், அங்ஙனம் வந்தவர்க்கு எதிர்சென்று அவரது முயற்சியைத் தடுத்தலை உணர்த்துவது காஞ்சியென்றும், பகைவருக்கு எதிராகத் தம்முடைய கோட்டை மதிலைக் காத்து நிற்றலைக் கூறுவது நொச்சியென்றும், மதிலைச் சுற்றி வளைத்துக் காத்து நிற்கும் நொச்சியாரை வெற்றிக் கொள்ளலை உணர்த்துவது உழிஞையென்றும், தம்முடைய பேராண்மையின் மிகுதிப்பாடு தோன்றப் பகைவரோடு போரிடுதலைக் கூறுவது தும்பையென்றும், போரின்கண் வெற்றி பெற்றுச் சிறத்தலை உணர்த்துவது வாகையென்றும், ஒருவனுடைய கீர்த்தி, கொடை, வலிமை ஆகியவற்றைப் பாடுதலைக் குறிப்பது பாடாண்னென்றும், ‘‘முற்கூறியவற்றிற்குக்கெல்லாம் பொதுவாகவும் அவற்றுள் கூறப்படா தொழிந்தவற்றைக் கூறுவது பொதுவியல் என்றும்ஒரு மருங்கு கேண்மையினை விளக்குவது கைக்கிளையென்றும், பொருந்தாகாமத்தினைக் கூறுவது பெருந்திணை என்றும், புறத்திணைக்கு விளக்கம் அளிக்கிறார்’’.[66] இங்கு தொல்காப்பியர் புறத்திணை ஏழாகவும், ஐயனாரிதனார் பன்னிரண்டாகவும் குறிப்பிட்டுள்ளதை அறிய முடிகிறது.

### 2.13.1. போர்

பகை அரசனைப் போர்த்தொடுத்து வெற்றி பெற வேண்டும் என்ற எண்ணத்துடன் அரசன் போர்த்தொடுப்பதற்கு முன்பாக தன் நாட்டு வீரர்களை அனுப்பிப் பசுக்கூட்டங்களைக் கவர்ந்து வரச் செய்வான். இவ்வாறு போர் வீரர்கள் புறப்படும் போது மிகுந்த ஆரவாரத்துடனும் களிப்புடனும் பகை நாட்டை நோக்கிப் புறப்படுவர். வெட்சியரவம் எனத் தொடங்கி பசுக்கூட்டங்களைக் கவர்ந்து வருவது வரை வெட்சித் திணையின் நிகழ்ச்சிகளாக அமைந்துள்ளன. புறத்திணைகளுக்கும் அகத்திணைகளுக்கும் இயைபு கூறும்போது உரையாசிரியர்கள் ஒவ்வொருவரும் வெவ்வேறு காரணம் கூறுகின்றனர். காதற்களவும், ஆநிரைக் களவும் நிகழும் ஒப்புமை பற்றி வெட்சி குறிஞ்சிக்குப் புறனாயிற்று. கருதிய பொருளை இரவின் கண் முடித்து மீளல் காரணமாக வெட்சி குறிஞ்சிக்குப் புறனாக அமைந்துள்ளதாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது. வெட்சித் திணையின் துறையானது படையியங்கு அரவம் முதலாக கொடை ஈறாக சொல்லப்பட்ட பதினான்கு துறைகளை உடையது என்பர் தொல்காப்பியர் இதனை,

**‘‘படையியங்கு அரவம் பாக்கத்து விரிச்சி**

**புகைகெட போகிய செலவே புடைகெட**

**ஒற்றின் ஆகிய வேயே வேய்ப்புறம்**

**…………………………..**

**………………………….**

**தந்துநிறை பாதீடு உண்டாட்டுக் கொடையென**

**வந்த ஈரேழ் வகையிற்று ஆகும்”[67]**

என்ற நூற்பா வழியாக காண முடிகிறது.

### 2.13.1.1. போரின் தன்மை

செழியன் காற்று விரைந்து செல்லுமாறு விரைந்து சென்று பகைவர் நாடு கெடும்படியாக நெருப்பைப் பரப்பினான். பின் போரில் ஏழு மன்னர்களையும் கொன்று, ஏனைய பகைவருக்கு அச்சத்தைத் தோற்றுவித்து அவரின் முரசத்தைக் கைக்கொண்ட பேராற்றல் மிக்கவன் என்பதை (125–130) வரிகளில் மதுரைக்காஞ்சி குறிப்பிடுகிறது. பண்டைநாளில் போர்மேற் செல்லும் மன்னர்கள் பகைவர் நாட்டிற் தீ கொளுத்திப் பாழ்படுத்தும் வழக்கம் இருந்தமையை,

**“வினைமாட்சிய விரைபுரவியொடு**

**மழையுருவின் தோல்பரப்பி**

**முனை முருங்கத் தலைச் சென்றவர்**

**விளைவயல் கவர்பூட்டி**

**மனைமறம் விறகாகக்**

**கடிதுறைநீர் களிறுபடீஇ**

**எல்லுப்பட விட்ட சுடுதி விளக்கம்**

**செல்சுடர் ஞாயிற்றுச் செக்கரிற் றோன்றப்**

**புலங்கெட விறுக்கும் வரம்பில் தானை”[68]**

என்றும்,

**“ஊரெரி கவர உருத்தெழுந் துரைஇப்**

**போர்சுடு கமழ் மாதிர மறைப்ப”[69]**

என்று கூறுவதாலும் பாண்டிய நெடுஞ்செழியன் போர்த்திறம் மிக்கவன் என்பதனையும் நன்கு புலனாகிறது.

### 2.13.1.2. திருமாவளவன் செய்த உழிஞைப்போர்

திருமாவளவன் போர் செய்வதில் வல்லவன். பகைமறவர்களை வீழ்த்தும் திறமையுடையவன். அவன் பெற்ற அரசுரிமையளவில் அமைதியுறாதவனாய், பகைவருடைய அரண்களை இடித்தும், அவர்தம் கோபுரவாயிற் கதவுகளை முறித்தும், முடித்தலையை உதைத்துருட்டும் முன்கால் நகங்களையுடையனவும், உயர்ந்த அழகினையுடையனவுமாகிய யானைகளோடும், மணியையுடைய குதிரைகளோடும் சென்று பகைமறவர் வீழவும் பெரிய வானத்தில் பருந்துகள் உலாவித் திரியவும் தான் விரும்பிப் போருக்கு அடையாளமாகப் பனைப்பூவையும், உழிஞைப் பூவையும் சூடிக்கொண்டு, பெரிய கண்களையுடைய முரசம் முழங்க பகைவர் ஓடுமாறு தன்முதற்போரிலேயே பகைவரை வென்றான் என்பதை (பட்டினப் 228 – 239) அடிகள் வலியுறுத்துகின்றன. இப்போர் பகை மன்னருடைய அரனை முற்றிலும் கோடலும் ஆதலின் உழிஞைப் பூவைச் சூடிச் சென்றதை அறிய முடிகின்றது. உழிஞைப் போராவது,

**"முழுமுதல் அரணம் முற்றலும் கோடலும்**

**அனைநெறி மரபிற் றாருமென்ப"**[70]

என்று தொல்காப்பியம் குறிப்பிடுவதிலிருந்து போருக்கு அடையாளமாக பூச்சூடிச் செல்லும் மரபினை உணர்த்தப்படுகின்றது.

### 2.13.1.3. நெடுஞ்செழியன் பகைவர் நாடு பாழ்படுத்தியமை

நெடுஞ்செழியன் தொன்று தொட்டு வந்த பகைவர் நிலத்தில் புகுந்து அவரின் காவலுடைய பொழில்களை வெட்டி அழித்தான். பின் வளம் குன்றாத மருத நிலங்களை நெருப்பிட்டான். நாடெல்லாம் காடாகவும் பசுக்கூட்டங்கள் தங்கிய இடங்களில் புலி முதலிய கொடிய விலங்குகள் தங்கும்படி செய்தும் ஊரிருந்த இடமெல்லாம் பாழாய்க் கிடக்குமாறு செய்தும், வளையலணிந்த மகளிர்கள் துணங்கைக் கூத்தையும் குரவைக் கூத்தையும் மறக்கச் செய்தான். பின் சான்றோர்கள் இருந்த அம்பலங்களில் கடிய பார்வையுடைய பேய்கள் உலவின என்பதை (152-176) மதுரைக்காஞ்சி குறிப்பிடுகிறது. இவ்வாறு போர்மேற் சென்ற மன்னன் பகைவருடைய பொழில்களை அழித்தல் பண்டைகால மரபாக இருந்ததென்பதை,

**"பழையன் காக்கும் குழைபயில் நெடுங்கோட்டு**

**வேம்பு முதல் தடிந்த ....... பொறைய!"**[71]

என்றும்,

**“வடிநல் நவியம் பாய்தலின் ஊர்தொறும்**

**கடிமரந் துளங்கிய காவும்”**[72]

என்ற புறநானூற்று அடிகளும் குறிப்பிடுவதன் வாயிலாக இருநாடுகளுக்கிடையே போர் நடைபெற்றால் ஏதேனும் ஒரு நாடு பாழாகும் என்பதை உணர்த்துகின்றன. மேலும் பகைவர் நகரம் பாழ்பட்டதை பட்டினப்பாலை,

**“கொடுங்கால் மாடத்து நெடுங்கடைத் துவன்றி**

**விருந்துண் டானாப் பெருஞ்சோற்றட்டில்**

**ஒண்சுவர் நல்லில் உயர்திணை யிருந்து**

**பைங்கிளி மிழற்றும் பாலார் செழுநகர்த்**

**தொடுதோ லடியர் துடிபடக் குழ்இக்**

**கொடுவி லெயினர் கொள்ளை யுண்ட**

**உணவில் வறுங்கூட் டுள்ளகத் திருந்து**

**வளைவாய்க் கூகை நண்பகற் குழறவும்”**[73]

என்ற அடிகளில் குறிப்பிட்டுள்ளன. திருமாவளவன் செய்த போரினால் பகைவரின் நகரம் முழுவதும் பாழ்பட்டு கிடந்தன. அதாவது உருண்ட தூண்களையுடைய மாடத்தின் வாயிலில் நெருங்கியிருந்து விருந்தினர்கள் இடையறாது உண்டும், குறைதலில்லாத மிக்க சோற்றையுடைய அடுக்களைக் கொண்டும் சுதையால் இருந்து, பசிய கிளிகள் மழலை பேசுதற்குக் காரணமான பால் வளமிக்க நகரங்கள் காணப்பட்டன. இந்நகரங்களிலே கொடிய வில்லையுடைய வேடர்கள் கொள்ளை கொண்டு விட்டமையால் உணவின்றி வறிதே கிடக்கும் வளைந்த வாயுடைய கூகைகள் நண்பகலிலும் குழறுகின்றன என்பதைப் புலப்படுத்துகின்றன. கூகையானது பசியால் நண்பகலிலும் குழறும் தன்மையுடையது என்பதை,

**“நெடுநகர் வீழ்ந்த கரிகுதிர்ப் பள்ளி**

**குடுமிக் கூகை குராலொடு முரல்”**[74]

என்ற மதுரைக்காஞ்சியடிகள் குறிப்பிடுகின்றன. இதில் பகைவர் நகரமானது மிகவும் செழிப்புடன் காணப்பட்டதையும், திருமாவளவன் செய்தபோர்

காரணமாக பாழ்பட்டு அங்குள்ள பறவைகளும் பசியால் வருந்தும் நிலை ஏற்பட்டதையும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

### 2.13.2. கொடை

மன்னன் புலவருக்கும் ஏனையோருக்கும் பரிசில் வழங்குதல் மரபு. அவ்வகையில் பாணருக்கும் பாடினிக்கும் மன்னன் பரிசில் வழங்கியதாக மதுரைக்காஞ்சி குறிப்பிடுகிறது.

**"பாணர் வருக பாட்டியர் வருக**
**யாணர்ப் புலவரொடு வயிரியர் வருகென**
**இருங்கிளை புரக்கும் இரவலர்க்கு எல்லாம்**
**கொடுஞ்சி நெடுந்தேர் களிற்றொடும் வீசி"**[75]

என்ற பாடலடிகள் பாணரையும், பாடினியரையும், புலவரையும், கூத்தரையும், பரிசில் வாழ்க்கையுடையோரையும் அழைத்து அவர்கள் வியக்கும்படி மன்னன் தேர், யானை முதலான பரிசுகளை வழங்கினான் என்பதை எடுத்துரைக்கின்றது.

#### 2.13.2.1. கொடைச்சிறப்பு

நெடுஞ்செழியன் பிறருக்கு கொடை வழங்குவதில் வல்லவன். இவன் மத்தளம் போன்ற தோளினை உடையவராய் கல்வியால் மாறுப்பட்ட தடாரிப் பொருநர்க்கு திரளோடு விளங்குகின்ற மருப்பினையுடைய யானைகளைக் கொடுத்தும் பொற்றாமரைப் பூவினையும், அணிகலன்கள் பலவும் கொடுத்தும் மகிழ்ந்தான் என்பதை,

**"இலங்கு மருப்பிற் களிறு கொடுத்தும்**
**பொலந் தாமரைப் பூச்சூட்டியும்**
**நலஞ்சான்ற கலஞ்சிதறும்"**[76]

என்ற வரிகள் மூலம் உணரமுடிகிறது. பொருநர் முதலியோர்க்கு பொற்றாமரை மலர் வழங்கும் வழக்கம் இருந்தமையை,

**"மறம்பாடிய பாடினியும்மே**
**யேருடைய விழுக்கழஞ்சிற்**
\- - - - - - - - - - - - - - -
\- - - - - - - - - - - - - - -
**வெள்ளி நாராற் பூப்பொற் றிசினே"**[77]

என்ற புறப்பாடலாலும்,

**"எரியகைஞ் தன்ன வேடில் தாமரை**

**சுரியிரும் பித்தை பொலியச்சூட்டி"[78]**

என்ற வரிகளாலும் அறியலாம். இவை நெடுஞ்செழியன் புரவலர்களுக்கு யானை, பொற்றாமரை மற்றும் அணிகலன்கள் பலவும் கொடுத்து சிறந்து விளங்கினான் என்பதை உணர்த்துகின்றன.

### 2.13.3. படை வலிமை

மன்னனது படைகள் வலிமையுடையதாய் காணப்படுகின்ற தன்மையை இலக்கியங்கள் அழகாக சித்தரித்துள்ளன.

**"விழுச்சூழிய விளங்கு ஓடைய**

**கடுஞ்சினத்த கமழ்கடா அத்து**

**அளறுபட்ட நறுஞ் சென்னிய**

**………………………………..**

**……………………………….**

**……………………………….**

**வாள்மிகு மறைமைந்தர்**

**தோள்முறையான் வீறுமுற்றவும்"[79]**

என்ற அடிகளிலிருந்து போர்ப்பயிற்சியுடைய யானைகள் கண்டோர் மலையென்று மருளும் உயர்ந்த உருவம் உடையனவாய் சினம் மிகுந்து போரில் பகைமறவரைக் கொல்லும் வலிமையுடையதாகவும், குதிரைகள் விரைந்து செல்லும் இயல்புடையதாகவும், திண்ணிய தேர்கள் சூறாவளி போல் விரைந்து சுழலும் வலிமையுடையதாகவும் மிகுந்த வன்மையுடைய காலாட்படை வெற்றி முழக்கம் செய்யும் தன்மை உடையதாகவும் காணப்பட்டதை உணர முடிகிறது. மேலும் கிடுகுப்படை என்னும் ஒருவகைப் படையையும் இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

**"பூந்தலைக் குந்தம் குத்திக் கிடுகு நிரைத்து"[80]**

என்று முல்லைப்பாட்டும்,

**"கிடுகு நிரைத் தெல்கூன்றி**

**நடுகல்லின் அரண்போல"[81]**

என்று பட்டினப்பாலையும் கிடுகுப்படைக் குறித்துக் குறிப்பிடுகின்றன.

### 2.13.3.1 நால்வகைப் படையின் சிறப்புகள்

போர்ப்பயிற்சி நன்குடைய யானைகள் சிறந்த முகபடாம் விளங்குகின்ற பட்டத்தையும் அணிந்து மணங்கமழும் மதச்சேறு உண்டான தலையினை உடையனவாய் கண்டோர் மலையென்று மருளும் உயர்ந்த உருவமுடையவனாய் சினம் மிகுந்து போரில் பகை மறவரைக் கொன்று குவிக்கும் தன்மையுடைய யானைப்படைகள் செழியனிடம் இருந்ததை,

**"வினைநவின்ற பேர்யானை**
**சினஞ்சிறந்து களனுழக்கவும்"**[82]

என்ற வரிகள் புலப்படுத்துகின்றன. மேலும் யானைப்படை மட்டுமல்லாது, பிற படைகளும் சிறந்திருந்ததை,

**"மரவெடுத்த மலிகுருஉத்துகள்**
**அகல்வானத்து வெயில்கரப்பவும்**
**வாம்பரிய கடுந்திண்டேர்**
**காற்றென்னக் கடிது கொட்பவும்**
**வான்மிகு மறமைந்தர்**
**தோள்முறையான் வீறுமுற்றவம்"**[83]

என்ற வரிகள் குறிப்பிடுகின்றன. அதாவது குதிரைக் கூட்டங்கள் பகைவர்மேல் செல்லும் போது எழுந்த மிக்க நிறத்தையுடைய துகள் எங்கும் பரவுவதால் கதிரவனின் வெயில் ஆகாயத்தில் மறைக்கப்படுவதாலும் இக்குதிரைகள் பூட்டப்பட்ட விரைந்து செல்லும் தேர்கள் காற்றுக் சுழன்று வீசுவதுபோல, விரைவாகப் போர்க்களத்தில் சுற்றி வருவதாகவும், வீரர்கள் வாட்போர் ஏந்தி பகைவருடன் போரிட்டு வீரத்தை நிலை நிறுத்தி அரசனுக்கு வெற்றியைத் தரும் நால்வகைப் படைகளும் மன்னனிடம் இருப்பதைப் புலப்படுத்துகிறது.

### 2.13.4. போர் முரசு

போர்முரசு வேந்தனுக்குரிய மதிப்பினைப் புலப்படுத்தும். போர் தொடங்கும் முன்பு முரசானது அறிவிக்கப்படும். அம்முரசை இறைத்தன்மை உடையதாகக் கருதுவர். முரசு அழிக்கப்படுமானால் அம்முரசுக்குரிய வேந்தன் தோற்றவனாகக் கருதப்படுவான். பகைவரை வென்றதற்கு அறிகுறியாக வெற்றிப் பெற்ற வேந்தனின் பாசறையில் வெற்றிக் களிப்புத் தோன்ற முரசு முழங்கும் என முல்லைப்பாட்டு (79) குறிப்பிடுகிறது. மேலும், போரில் சங்கு முழங்கியதாக முல்லைப்பாட்டு (92) கூறுவதைக் காணலாம். இதிலிருந்து முரசு, சங்கு இரண்டும் போரின் போது பயன்படுத்தும் கருவிகள் என்பது தெளிவாகின்றது.

### 2.13.5. மாலை சூடிப் புறப்படுதல்

போருக்கெழும் வேந்தரும் வீரரும் தத்தமக்குரிய மாலையினைச் சூடுதல் மரபாகும். சேர, சோழ, பாண்டியருக்கு முறையே பனை, ஆத்தி, வேம்பு மாலைகள் உரியன என்பர் தொல்காப்பியர். இவ்வாறு மாலை சூடி போருக்குச் சென்ற வீரர்கள் உயிர்த் துறத்தலும் உண்டு.

**"சோறுவாய்த் தொழிந்தோர்"**[84]

என்ற வரிகளிலிருந்து தாம் உண்ட செஞ்சோற்றுக் கடனுக்காக வீரர் பலர் போர்க்களஞ் சென்று உயிர் துறந்தனர் என்பதை உணர முடிகிறது.

### 2.13.6. மன்னன் வெற்றி பெறல்

மன்னன் பகை மன்னன் மீது போர்த் தொடுத்து வெற்றி பெறுகின்ற தன்மையை மதுரைக்காஞ்சி குறிப்பிடுகிறது.

**"தெண்கடற் குண்டகழிச்**
**சீர்சான்ற உயர்நெல்லின்**
**ஊர்கொண்ட உயர்கொற்றவ"**[85]

என்ற வரிகள் நெடிய கொடி உயர்த்தப்பட்டு, இனிய முரசம் முழங்க பண்டங்களை ஏற்றிக் கொண்டு வரும் பெரிய மரக்கலங்கள் நிற்கும் துறைமுகத்தோடு ஆழ்ந்த கடலாகிய அகழியையும் உடைய நெல்லூரை வெற்றி கொண்டவன் என்று குறிப்பிடுவதை உணர்த்துகிறது.

### 2.13.6.1. திருமாவளவனின் வெற்றியும் சிறப்பும்

பகைவரின் ஊர்களைப் பெரிதும் பாழ்படுத்தியும் பகைவர் மேல் கொண்ட சினம் தணியப் பெறாதவனாய் திருமாவளவன் இருந்தான். இவன் இம்மலைகளையெல்லாம் அகழ்தலைச் செய்வான். கடல்களைத் தூர்ப்பான். வானத்தை வீழ்த்துவான். காற்றினை இயங்காதபடி மாற்றுவான் என்று உலகத்தோர் இவன் ஆற்றலை வியந்து கூறும்படியாகத் தான் கருதியதை கருதியவாறே செய்து முடிக்கும் வன்மை உடையவனாகத் திகழ்ந்தான் என்பதை (269 – 273) பட்டினப்பாலை குறிப்பிடுகிறது. மேலும் நினைத்ததை முடிக்கும் வேந்தனது இயல்பினை முன்னிறுத்தி புறநானூறும்,

**"நீ உடன்று நோக்கும்வாய் எரிதவழ**
**நீ நயந்து நோக்கும்வாய் பொன்பூப்பச்**
**செஞ்ஞாயிற்று நிலவு வேண்டினும்**
**வெண்டிங்களுள் வெயில் வேண்டினும்**

**வேண்டியது விளைக்கும் ஆற்றலை”[86]**

என்ற வரிகள் மூலம் திருமாவளவன் தான் எண்ணியதை முடிக்கும் சிறந்த வன்மையுடையவன் என்பதை உணர்த்தப்படுகின்றது. இவன் ஒளிநாட்டரசர், அருவாளநாட்டரசர், வடநாட்டரசர், குடநாட்டரசர், பாண்டியர் போன்றோர்களின் மீது சீறிப் பகை மன்னர்களின் மதில்களைக் கைப்பற்றும் யானைப்படையையும், மறவன்மையுடைய முல்லைநில வேந்தர்களின் மரபினை முறியடித்தான். பின் தன் நாட்டிலுள்ள காடுகளை வெட்டியழித்து நாடாகச் செய்தான். குளங்களை அகழ்ந்து பல்வேறு வளம் பெருகவும் உயர்ந்த மாடங்களையுடைய உறையூரை விரிவுறச்செய்து அங்கு திருக்கோயில்களையும், குடில்களையும் நிலையுறச் செய்தான். எப்பகைவராயினும் போர்த்தொடுத்து வெற்றி கொள்வோம் என சூளுரை செய்து பகைவரோடு போரிட்டு அவர்களைப் புறங்கெடச் செய்து வெற்றி கொண்டான் என்பதை எடுத்துரைக்கின்றன.

## 2.14. தொகுப்புரை

- ❖ இலக்கிய நயமும் கற்பனைத் திறனும் கவிதை உணர்வும் ஒன்றித் தொடுக்கப்பட்ட பாடல்களே சங்கப்பாடல்களாகும். இவ்விலக்கியங்கள் வாழ்க்கை நெறிகளை அறிந்து கொள்வதோடு மட்டுமின்றி நல்வழியில் நடந்து கொள்வதற்கும் உதவுகின்றன.
- ❖ சங்கப் பாடல்கள் பாடுபொருளின் தன்மையை நோக்கியே அகப்பாடல், புறப்பாடல் என பிரிக்கப்பட்டுள்ளன.
- ❖ நிலம், காலம், தாவரங்கள், பறவைகள், விலங்குகள் முதலியவற்றை சார்ந்ததாக இயங்கும் மனித வாழ்வின் அனைத்து செயல்பாடுகளையும் திணை என்ற சொல்லால் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுவதை சுட்டிக்காட்டியுள்ளன.
- ❖ அகப்பாடல்களில் தொல்காப்பியர் கூறும் ‘சுட்டி ஒருவர் பெயர் கொளப்பெறார்’ என்ற மரபு கடைப்பிடிக்கப்பட்டுள்ளன. மேலும் அகப்பாடல்களின் உவமைகள் வாயிலாக வேந்தர்கள் குறுநில மன்னர்கள், புலவர்கள், ஊர்கள் போன்றவை இடம்பெற்றுள்ளன.
- ❖ கைக்கிளை பெருந்திணைப் பாடல்கள் பத்துப்பாட்டு அகநூல்களில் முற்றிலும் இடம்பெறவில்லை. ஆனால் பாடல்கள் முழுவதும் அன்பின் ஐந்திணையைச் சார்ந்தே அமைந்துள்ளதை எடுத்துரைக்கின்றன.
- ❖ குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் போன்றவை அந்தந்த நிலத்தில் பூக்கும் பூக்களை அடிப்படையாகக் கொண்டே பெயரிடப்பட்டுள்ளன.

ஆனால் பாலை என்ற பெயர் நிலத்தின் தன்மை அடிப்படையில் பெயர் வைக்கப்பட்டுள்ளமையைச் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.

- பொழுதை அறிந்து நேரத்தைக் கணக்கிடுவதற்கு நாழிகை கணக்கர்களும் சங்ககாலத்தில் இருந்தனர். அவ்வகையில் காணும்போது பொழுதும் காலமும் மக்கள் வாழ்க்கையில் இன்றியமையாத் தேவையாக இருந்ததை தெளிவாக விளக்கப்பட்டுள்ளன.
- தலைவன் கார்காலத்தில் திரும்பி வருவதாகக் கூறிச் சென்ற கார் பருவம் வந்தும் தலைவன் வரவில்லையே என வருந்தி தலைவி காத்திருப்பதாக முல்லைப்பாட்டு கார்காலத்தின் தன்மையை மிக அழகாக சித்தரிப்பதை சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.
- கானவர்கள் தினைப்புனம் காக்கும் போது அதை உண்ணவரும் விலங்குகளை விரட்ட பல்வேறு கருவிகளைப் பயன்படுத்தியதையும், பெரிய பள்ளங்களைத் தோண்டி யானைகளை பிடித்ததையும் குறிஞ்சிப்பாட்டு எடுத்துரைக்கின்றது.
- முல்லைநில ஆயர்மகள் மோர், வெண்ணெய் முதலானவற்றை பிற நிலங்களுக்கு எடுத்துச் சென்று விற்று அங்குள்ள நெல், பசு போன்றவற்றை வாங்கி வந்ததையும் தெளிவாக கூறப்பட்டுள்ளன.
- மருதநிலம் செழிப்பான சிறந்த நிலமாகவும், ஏனைய நிலங்களைக் காட்டிலும் உயர்ந்த நிலமாகவும் காணப்படுகின்றன. இம்மருத நிலத்தில் பலவகை பூக்களும், அங்குள்ள நீர்நிலைகளில் முதலைகள் திரியும் சிறந்த வளமிகுந்த நிலம் என்பதைப் பட்டினப்பாலை புலப்படுத்துகிறது.
- மூங்கில் புதரில் தோன்றிய நெருப்பால் யானை மிரண்டு மேய்ச்சல் கிடைக்கும் இடங்களை நோக்கி மூங்கிற்காடுகள் அழியும்படி சென்றன என்பதையும், அங்கு அருவிகள் இல்லாமையால் வளம் இழந்து வாழ்வதோடு பயனற்ற நிலமாக காணப்படுவதை உணர்த்தப்பட்டுள்ளன.
- பிரிவு அவலம் ஐந்து திணைகளிலும் குறிப்பிடப்பட்டிருந்தாலும் முல்லைப்பாடல்களில் மிக அழுத்தமாகவே புனையப்பட்டுள்ளன.
- மன்னன் புலவருக்கும் பாணருக்கும், பாடினிக்கும் தேர், யானை முதலான பல பரிசுகளை அளித்ததை மதுரைக்காஞ்சி வாயிலாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன.
- பகைவரை வென்றதற்கு அறிகுறியாக வெற்றிப் பெற்ற வேந்தனின் பாசறையில் வெற்றிக் களிப்புத் தோன்ற முரசு முழங்கியதை முல்லைப்பாட்டில் கூறப்பட்டுள்ளது.

❖ போரில் ஈடுபட்டு வீரர் பலர் இறந்ததையும் மன்னன் பகைமன்னன் மீது போர் தொடுத்து வெற்றி பெற்ற தன்மையையும் மதுரைக்காஞ்சியில் திணையின் தன்மையினை இவ்வியலில் தெளிவாக கூறப்பட்டுள்ளன.

# பின்குறிப்புகள்

1. மாணிக்கவாசகன், தொல்காப்பியம், பொருள், நூ. 1256.
2. குருநாதன். இராம, குறிஞ்சிவளம், ப. 7.
3. ஜவகர். க, திணைவெளி திணைக் கோட்பாட்டுக் கட்டுரைகள், ப. 15.
4. மாதையன். பெ, தமிழ்ச் செவ்வியல் படைப்புகள், ப. 95.
5. நச்சினார்க்கினியர் உரை, தொல்காப்பியம், பொருள், நூ. 1.
6. தமிழண்ணல் - சங்க இலக்கிய ஒப்பீடு, ப. 34.
7. வையாபுரிப்பிள்ளை. எஸ், தமிழ் அகராதி (தொகுதி. 3), ப. 1874.
8. பாலசுப்பிரமணியன். கு. வெ, சங்க இலக்கிய கொள்கைகள், ப. 248.
9. மணவாளன். அ. அ, இலக்கிய ஒப்பாய்வு: சங்க இலக்கியம், ப. 48.
10. இளம்பூரணார் (உ.ஆ), தொல்காப்பியம். பொருள். அகத், நூ. 1.
11. மாணிக்கம். வ. சுப, தமிழ்க்காதல். ப. 21.
12. இளம்பூரணார் (உ.ஆ), தொல்காப்பியம். பொருள், நூ. 33.
13. மேலது, நூ. 54.
14. மேலது, நூ. 269.
15. இராமசுப்பிரமணியன். வ. த, நம்பியகப்பொருள், நூ. 6.
16. இளம்பூரணார் (உ.ஆ), தொல்காப்பியம், பொருள், நூ. 89.
17. மேலது, நூ. 3.
18. இராமசுப்பிரமணியன். வ. த, நம்பியகப்பொருள், நூ. 7.
19. மேலது, நூ. 8.
20. மாணிக்கவாசகன். ஞா, தொல்காப்பியம், பொருள். நூ. 950.
21. மாணிக்கவாசகன். ஞா. தொல்காப்பியம், பொருள். நூ. 9519.
22. புலியூர்கேசிகன் (உ.ஆ), சிலம்பு, காடுகாண் காதை, ப. 160.
23. இராமசுப்பிரமணியன். வ. த, (உ.ஆ) நம்பியகப்பொருள், நூ. 9.
24. மேலது, நூ. 11.
25. மேலது, நூ. 12.
26. மாணிக்கவாசகன். ஞா, தொல்காப்பியம். பொருள். நூ. 953.
27. மேலது, நூ. 954.
28. இராமசுப்பிரமணியன், வ. த, (உ.ஆ) நம்பியகப்பொருள், நூ. 13.
29. சோமசுந்தரனார். பொ. வே, நெடுநல்வாடை, பா.அ. 12.
30. தமிழண்ணல், சங்க இலக்கிய ஒப்பீடு இலக்கிய வகைகள், ப. 165.
31. மாணிக்கவாசகன். ஞா, தொல்காப்பியம். பொருள். நூ. 952.
32. இராமசுப்பிரமணியன். வ.த, (உ.ஆ) நம்பியகப்பொருள், நூ. 15.

33. சோமசுந்தரனார், பொ. வே, முல்லைப்பாட்டு, பா.அ. 21 – 22.
34. மாணிக்கவாசகன். ஞா, தொல்காப்பியம் பொருள், நூ. 955.
35. இராமசுப்பிரமணியன். வ. த, நம்பியகப்பொருள், நூ. 16.
36. மாணிக்கவாசகன். ஞா, தொல்காப்பியம். பொருள். நூ. 956.
37. மேலது, நூ. 957.
38. மேலது, நூ. 958.
39. மேலது, நூ. 966.
40. நாராயணவேலுப்பிள்ளை. எம், பத்துப்பாட்டு (2), மதுரைக்காஞ்சி, பா.அ. 286-289.
41. மணவாளன்.அ.அ, இலக்கிய ஒப்பாய்வு: சங்க இலக்கியம், ப. 48.
42. இராமசுப்பிரமணியன். வ. த, நம்பியகப்பொருள். நூ. 19.
43. சோமசுந்தரனார். பொ. வே. குறிஞ்சிப்பாட்டு, பா.அ. 187-194.
44. நாராயணவேலுப்பிள்ளை. எம், பத்துப்பாட்டு (2), குறிஞ்சிப்பாட்டு, பா.அ. 218-228.
45. சோமசுந்தரனார்.பொ.வே, குறிஞ்சிப்பாட்டு,பா.அ. 160-161.
46. மேலது, 161-166.
47. நாராயணவேலுப்பிள்ளை, பத்துப்பாட்டு (2), மதுரைக், பா.அ. 271-285.
48. இராசமாணிக்கனார்.மா, பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப. 252.
49. சோமசுந்தரனார். பொ. வே, முல்லைப்பாட்டு, பா.அ. 93-100.
50. இளஞ்சேகரன் கோவை, இலக்கியம் ஒரு பூக்காடு, ப. 16.
51. இராசமாணிக்கனார். மா, பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப. 97.
52. சோமசுந்தரானார். பொ. வே, பத்துப்பாட்டு, பட்டினப்பாலை, பா.அ. 140-142.
53. இராசமாணிக்கனார். மா, பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப. 100.
54. வேங்கடராமன். கா. கோ, தமிழ் இலக்கிய வரலாறு, ப. 81.
55. தட்சிணாமூர்த்தி. அ, தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப. 262.
56. நடராசன். பி. ரா, பத்துப்பாட்டு, பட்டினப்பாலை, பா.அ. 84-93.
57. புலியூர்கேசிகன், சிலம்பு, காடுகாண்காதை, பா. 64-66.
58. சோமசுந்தரனார். பொ. வே, மதுரைக்காஞ்சி, 302-306.
59. சோமசுந்தரனார். பொ. வே, குறிஞ்சிப்பாட்டு, பா.அ. 77.
60. தமிழண்ணல், சங்க இலக்கிய ஒப்பீடு, ப. 38.
61. இளம்பூரணார் உரை, தொல்காப்பியம், பொருள். நூ. 3.
62. மாணிக்கவாசகன். ஞா, தொல்காப்பியம், பொருள். நூ. 962.
63. நடராசன். பி. ரா, பத்துப்பாட்டு, முல்லைப்பாட்டு, பா.அ. 21-23.
64. மணவாளன். அ. அ, இலக்கிய ஒப்பாய்வு: சங்க இலக்கியம், ப. 49.

65. வேங்கடராமன். கா. கோ, தமிழ் இலக்கிய வரலாறு, ப. 82.

66. புலியூர்கேசிகன் (உ.ஆ), புறப்பொருள் வெண்பாமாலை, ப. 8.

67. இளம்பூரணார் உரை, தொல்காப்பியம். பொருள். நூ. 61.
68. மாணிக்கவாசகன். ஞா, புறநானூறு, பா. 16.
69. துரைசாமிப்பிள்ளை ஔவை. பதிற்றுப்பத்து, பா. 71: 9-10.
70. இளம்பூரணார் உரை, தொல்காப்பியம். பொருள். நூ. 10.
71. புலியூர்கேசிகன் (உ.ஆ), சிலம்பு, பா. 27: 124-6.
72. மாணிக்கவாசகன். ஞா, புறநானூறு, பா. 23:8-9.
73. சோமசுந்தரனார். பொ. வே, பட்டினப்பாலை, பா.அடி. 261-63.
74. மேலது, மதுரைக்காஞ்சி, பா.அடி, 169-70.
75. மேலது, பா.அடி 749-752.
76. மேலது, பா.அடி 102 – 104.
77. மாணிக்கவாசகன்.ஞா, புறநானூறு, பா.11.
78. சோமசுந்தரனார். பொ. வே, பொருந, பா.அடி. 159-160.
79. நாராயணவேலுப்பிள்ளை, பத்துப்பாட்டு (2), மதுரைக்காஞ்சி, பா.அடி. 143-154.
80. மேலது, முல்லைப்பாட்டு, பா.அ. 41.
81. மேலது, பட்டினப்பாலை, பா.அடி. 78-79.
82. சோமசுந்தரனார். பொ. வே, மதுரைக்காஞ்சி, பா.அடி. 47-48.
83. மேலது, பா.அடி. 49-54.
84. மேலது, முல்லைப்பாட்டு, பா.அடி. 72.
85. மேலது, மதுரைக்காஞ்சி, பா.அடி.86-88.
86. மாணிக்கவாசகன். ஞா, புறநானூறு, பா. 38.

# இயல் – 3

## இயற்கையும் வருணனை அமைப்பும்

**தலைப்பு** **பக்க எண்**

# இயல் – 3

## இயற்கையும் வருணனை அமைப்பும்

பழங்கால மக்கள் இயற்கையோடு இணைந்து வாழ்க்கை நடத்தினர். இயற்கையே இறைவன் எனக்கண்டு இயற்கை எழிலில் திளைத்து மகிழ்ந்தனர். மக்கள் வாழ்வில் இடம் பெற்ற இயற்கை இலக்கியத்திலும் இடம் பெற்றது. சங்ககால மக்கள் இயற்கையோடு வாழ்வு நடத்தினாலும் இயற்கையை மட்டுமின்றி தலைவன் தலைவியின் அழகு, பறவை, விலங்கு, பாசறை அமைப்பு, தலைவியின் துன்ப நிலை, தலைவி துயிலும் கட்டில் அலங்காரம், பாசறைக் காட்சி, கார் காலத்தின் வருகை, தலைவனின் பெருமை போன்ற பல்வேறு செயல்பாடுகளை இயற்கையோடு ஒப்ப வைத்து வருணிக்கின்றனர். இவ்வருணனைகளில் மிகவும் இன்றியமையாதது இயற்கை வருணனைகளே. சங்க இலக்கியத்தில் பெரும்பான்மையாக இயற்கை வருணனைகளே அமைந்துள்ளன. மனிதனும் இயற்கையும் வேறல்ல என்னும் உணர்வை அளிப்பதுதான் இயற்கையின் நெறியாகும்.

இயற்கையியல், புனைவியல் (Naturalism and Romanticism) ஆகிய இரண்டும் சங்க இலக்கியத்தின் பண்புகளாக உள்ளன. வோர்ட்ஸ் வொர்த்தைப் போல வானோங்கு மலை, பொங்கிவீழ் அருவி, நிறைந்தொளிர் நீர்நிலை, தெளிந்தோடும் ஆறு ஆகியவற்றை எழில் ததும்பும் ஓவியங்களாக தீட்டிக்காட்டும் புலவர்கள் சங்க காலத்தில் வாழ்ந்தனர். அவர்கள் மனித நெஞ்சத்தின் உணர்வுகளையும் இயற்கையின் கவர்ச்சி நிறைந்த எழிலையும், நெருங்கிய பிணைப்புடையனவாக இனிமையுடையனவாக இணைத்தனர்.

“இயற்கையும் மனிதனும் மணம் செய்து கொள்ளும் காட்சியைக் காணுகின்றனர். பரந்து விரிந்தொளிரும் இயற்கைக் காட்சிகளையும், நுணித்துணரும் பிறகாட்சிகளையும் பண்டையத் தமிழ்ப்புலவர்கள் ஒருங்கு இணைத்துப் பாடியுள்ளனர்”[1] என்று மு.வரதராசனார் குறிப்பிடுகின்றார்.

இயற்கையோடு இணைந்துவிட்ட புலவர்களின் பட்டறிவு உணர்ச்சியானது கவிதையோடு இணைந்து பல பாடல்களில் பரந்துகிடப்பதைக் காண முடிகிறது. அவ்வியற்கையைப் பற்றிப் பாடுவதில் சங்கப்புலவர்கள் புலமை பெற்றிருந்தனர். இயற்கையை வருணிப்பதில்

முதன்மை பெற்றவர் கபிலர். அவ்வகையில் வருணனைகளை இரண்டு வகைகளாகப் பாகுபாடு செய்யலாம். அவை,

1. இயற்கை வருணனை
2. ஏனைய வருணனை என்பனவாகும்.

## 3.1 இயற்கையோடு இயந்த வாழ்வு

மானிடரின் காதல் ஓவியங்களுக்கு மிகச் சிறந்த பின்னணியாக அமைவது இயற்கைக் காட்சியாகும். இவ்வகையில் ஐந்நிலத்துக் காட்சிகளையும் புலவர்கள் அழகுபடத் தீட்டியுள்ளனர். ஆயினும் அவர்கள் அவற்றைக் காதல் நாடகத்துக்கு ஏற்ற அரங்கு என்ற அளவோடு நிறுத்திவிடவில்லை. தலைவன் தலைவியர் தம் உள்ளத்தே தோன்றும் திளைப்பையும் களைப்பையும் இயற்கைக் காட்சிகளிலே கண்டார்கள். சூழ்ந்துள்ள இயற்கையெல்லாம் அவர்களோடு ஒன்றிவிட்டதாக உணர்ந்தார்கள். அவர்கள் மகிழ்ந்தபோது இயற்கையும் மகிழ்ந்ததாகவும், துயருற்றபோது இயற்கையும் துயரால் துவண்டதாகவும் கருதினர். சில வேளைகளில் தலைவி முதலானவர்களின் உணர்ச்சிகளை இயற்கையோடு இயைந்து விடுவதற்காக, இயற்கைப் பொருள்களுக்கு உயிரும் உணர்வும் கொடுத்துப் பாடுவதும் உண்டு. இதுபோன்ற பாடல்களில் உள்ளத்து உணர்வின் ஆழமும் அதனோடு பிணைந்த நம்பிக்கையின் உறுதிப்பாடும் புலப்படுகிறது. இவ்வகையான சங்கப்பாடல்களில் வருணனை மிகவும் சிறப்பாக கூறப்பட்டுள்ளதைக் காணமுடிகிறது.

## 3.2 இயற்கை வருணனை

இயற்கையை வருணிப்பதில் வல்லவர்கள் சங்கச் சான்றோர்கள். இயற்கையின் எழிலைக் கண்டு மயங்கிய அவர்கள் தாம் பாட எண்ணிய பொருள்களுக்கு இயற்கையை உவமையாக அமைத்துப் பாடினர். மலையின் எழிலான தோற்றங்கள், வானத்திலிருந்து இடியோசையோடு கூடிய மழை பொழிகின்ற காட்சி, காடுகளிலுள்ள மரம், செடி, கொடிகள், ஓடியாடும் விலங்குகள், கூடுகட்டி வாழும் பறவைகள், கிளிகளை ஓட்டும் காட்சிகள் வயலில் நெற்கதிர் முற்றும் காட்சி, குளங்களில் தாமரை முதலிய பூக்கள்

மலரும் அழகிய காட்சி, பருவக்காற்றின் தன்மைகள் முதலிய யாவும் தமது உள்ளம் கவர்ந்து விருந்து அளிக்கின்ற காட்சியைப் பிறரும் நுகருமாறு சொல்லோவியங்களாகத் தீட்டியுள்ளனர். இயற்கை புலவர்களுக்குத் தலையாய துணைப் பொருளாகும். மனிதனின் வினை நிகழ்ச்சியும் மன நெகிழ்ச்சியும் பாடலுக்கு உயிர்ப்பொருளாகக் கொண்ட சங்க இலக்கிய புலவர்களுக்கும் இயற்கைதான் தலையாய துணைப்பொருளாக உதவியுள்ளது என்பது தெளிவாகிறது. இவ்வாறு உள்ளம் கவர்ந்த இயற்கை வருணனையை,

- ❖ சூரியன்
- ❖ மலை
- ❖ மேகம்
- ❖ மழை
- ❖ அருவி
- ❖ மாலைகாலம்
- ❖ பூக்கள்
- ❖ பறவைகள், விலங்குகள்
- ❖ கூதிர்காலம்
- ❖ காவிரியின் வளம்

போன்றவற்றை இயற்கை வருணனைகள் எனவும்,

- ❖ பாசறைக்காட்சி
- ❖ அரண்மனைக் காட்சி
- ❖ அந்தபுர வருணனை
- ❖ தலைவியின் துன்ப நிலை
- ❖ கட்டில் ஒப்பனைத்திறம்
- ❖ அட்டில் சாலை வருணனை
- ❖ கொடிகள் நாட்டப்பட்டிருக்கும் காட்சி
- ❖ தலைவன் வழியிற் காணும் காட்சிகள் போன்றவற்றை ஏனைய வருணனைகள்

எனப் பாகுபாடு செய்யப்பட்டு கூறப்பட்டுள்ளன.

### 3.2.1 சூரியனின் வருணனைத்திறம்

நெடுநல்வாடையில் நக்கீரர் சூரியனின் நிகழ்வுகளை மிகவும் அழகாக வருணித்துள்ளார். சூரியன் எல்லாத் திசைகளிலும் எவ்விதப் பாகுபாடும்

இன்றித் தன் கதிர்களைப் பரப்பக் கூடியவன். அவன் உலகத்தையே ஆட்சி செய்யக் கூடியவனாகவும் உள்ளான். ‘சூரியன் இன்றேல் உலகம் இல்லை’ என்று கூறுமளவிற்கு சூரியனின் பங்கு இன்றியமையாததாகும்.

**“விரிகதிர் பரப்பிய வியல்வாய் மண்டிலம்**

**இருகோல் குறிநிலை வழுக்காது குடக்கு ஏர்ப”**[2]

என்ற பாடல் வரிகளில் சூரியன் எல்லாத் திசைகளிலும் தன்னுடைய விரிந்த கதிர்களைப் பரப்புவதாகவும் அகன்ற இடத்தையுடைய கதிரவன் விண்ணில் மேற்குத் திசைநோக்கி பயணம் செய்வதாகவும் வருணித்துள்ளமையைக் காண முடிகிறது.

### 3.2.2 மலை வருணனை

மலையில் காணும் ஓர் அழகான காட்சியைக் கபிலர் குறிஞ்சிப்பாட்டில் வருணிக்கின்றார். பழுத்து முதிர்ந்த மிளகுகள் சிந்திக்கிடக்கின்ற பாறை. அதில் ஒரு சுனை, அருகில் பழுத்த மாமரம்: அதன் இனிய கனி தேனோடு சேர்ந்து சுனை நீரில் உதிர்கின்றது. அதில் பலாமரத்தினது முற்றக் கனிந்த பழங்களும், சுளைகளும் நெகிழ்ந்து உதிர்கின்றன. அதிலிருந்து சொரிந்த தேனும் அச்சுனை நீரில் கலக்கின்றது. சுனை நீருடன் பழச்சாறும் தேனும் கலந்து நிரப்பி இருக்கிறது. அந்த நீரினை இனிய நீராகக் கருதி மயில் பருகுகிறது. பருகிய மயக்கத்தால் அம்மயில் தடுமாறி நடக்கின்றது. அக்காட்சியானது தன் ஆடலை மறந்து, கழைக் கூத்தாடும் பெண் கழைக் கயிற்றிலே தளர்வது போல் இருக்கின்ற தன்மையை,

**“பழுமிளகு உக்கபாறை நெடுஞ்சுனை**

**பழுமுதற் கொக்கின் தீம்கனி உதிர்ந்தெனப்**

**புள்ளறி பிரசமொடு ஈண்டிப் பலவின்**

**நெகிழ்ந்து உகு நறும்பழம் விளைந்த தேறல்**

**நீர்செத்து அயின்ற தோகை வியலூர்ச்**

**சாறுகொள் ஆங்கண் விழவுக்களம் நந்தி**

**அரிக்கூட்டு இன்னியம் கறங்க, ஆடுமகள்**

**கயிறுஊர் பாணியின் தளரும் சாரல்”**[3]

என்ற பாடலில் குறிப்பிடுகின்றார். தலைவனின் மலையில் இத்தகைய சிறப்பு பெற்ற சுனை நீரினை மயில் பருகித் தடுமாறியதைப் போன்று,

அகநானூற்றுப் பாடல் (அகம். 1-7) ஒன்றிலும் ஆண்குரங்கு ஒன்று கள்ளைப் பருகித் தன்னை மறந்து உறங்குகின்ற காட்சியை கபிலர் காட்டுகிறார். வளம் பொருந்திய மலை, அதன் பாறை ஒன்றின் மீது வாழைக் கனிகளும் பலாச் சுளைகளும் உதிர்கின்றன. அப்பாறையின் கண் அமைந்த சுனைநீரில் அவை கலந்து அந்நீர் தேன்போல் இனிக்கிறது. அவ்விடத்து வரும் ஆண் குரங்கு அந்நீரின் தன்மை அறியாது உண்ணீர் என்று கருதிப் பருகுகிறது. பின் அச்சுனை அருகில் நிற்கும் மிளகுக்கொடி படர்ந்த சந்தன மரத்தில் ஏற முயல்கின்றது. பின் முடியாமல் கீழே தவறி விழுகின்றது. விழும் இடமோ மலர்கள் உதிர்ந்து மெத்தென இருக்கின்றது. அம்மலரின் மெத்தை மீது கடுவன் மதிமயக்கத்தால் தன்னை மறந்து உறங்குகின்றது. அது எதிர்ப்பாராத இன்பத்தை அடைந்து மகிழ்கின்றது என்பதை,

**“கோழிலை வாழைக்கோள் முதிர்பெருங்குலை**
**ஊழுறு தீங்கனி உண்ணுநுர்த் தடுத்த**
**சாரல் பலவின் சுளையொடு ஊழ்படு**
**பாறை நெடுஞ்சுனை விளைந்த தேறல்**
**அறியாது உண்ட கடுவன் அயலாது**
**கறிவளர் சாந்தம் ஏறல் செல்லாது**
**நறுவீ அடுக்கத்து கண்படுக்கும்”[4]**

என்ற வரிகளில் சிறப்பாக கவினுற வருணித்துள்ளமையைக் காணமுடிகிறது. இவற்றிலிருந்து மலை வளம் செழித்திருந்தமையும், அவ்வளத்தின் தன்மையை புலவர்கள் அழகாக பாடியுள்ளமையையும் அறிய முடிகின்றது.

### 3.2.3 மழை வருணனை

மழையை நம்பியே மக்களின் வாழ்வு அமைந்துள்ளது. நாட்டில் மழை மாதம் மும்மாரி பொழிய வேண்டும் அங்ஙனம் பொழியாவிடில் மன்னனது ஆட்சியில் குறை உள்ளது என்று மக்கள் நம்பினர். மழை பெய்யின் மன்னனும் மக்களும் மிகவும் மகிழ்வர். அத்தகைய சிறப்பு பெற்ற மழையை மிகவும் அழகாக சங்கப் புலவர்கள் வருணித்துள்ளனர். மிகுதியாக மழைப் பெய்தமையால் நீர் உலர்ந்து உயர்ந்து எழுந்த வெண்மேகங்கள் சிறுசிறு துளிகளை மெல்லத் தூவுகின்ற காட்சியானது, வானைப் பிளந்து கொண்டு வெண்மையான முத்துக்கள் உதிர்வதைப் போன்று மழைப் பெய்வதாக காட்சிப்படுத்துகின்றார்.

**“பெயல் உலந்து எழுந்த பொங்கல் வெண்மழை**

**அகல்இரு விசும்பில் துவலை கற்ப”[5]**

இதில் பெருமழை பொழிந்து பின் சிறு திவலைகளைத் தூவியதாக சிறப்பித்துள்ளமையைக் காண முடிகிறது. மலைகளில் பல்வேறு நிற மலர்கள் கொண்ட சோலைகளின் கிளைகளில் விழுந்த மழைத்துளிகள் பல்வேறு நிறத்துடன் காட்சியளிப்பதாக குறிப்பிட்டுள்ளார். தலைவியும் தோழியும் தினைப்புனம் காக்கச் செல்கின்றனர். அது உச்சி பொழுதாக இருக்கின்றது. அந்த உச்சிப் பொழுதிலும் எதிர்ப்பாராமல் மின்னலோடு கூடிய மழை பொழிவதாக கபிலர் வருணிக்கின்றார். மழையானது நீர் நிறைந்து காணப்படுகின்ற கரிய கடலுக்குச் சிறுமை உண்டாகும்படி நீரினை அள்ளிக்கொண்டு அகன்ற பெரிய வானிடத்தே செல்கிறது. வரிசை வரிசையாகச் செல்கின்ற அம்மேகக் கூட்டம் காற்றுடன் வேகமாகச் சென்று கலக்கத்தை உண்டு பண்ணுகிறது. அதன் தாக்குதலால் போரில் முரசு முழங்கினாற் போன்று இடி உண்டாகிறது. முரசின் ஒலியை ஒத்துக் காணப்படுகின்ற வீரக்கழல் அணிந்த முருகன், பகைவருக்கு அழிவு ஏற்படும் படியாக எடுத்த வேலினைப் போன்று மின்னல் மின்னி மலையின் மீது மழைப் பொழிகின்றது என்பதை,

**“நிறைஇரும் பௌவம் குறைபட முகர்ந்து கொண்டு**
**அகல்இரு வானத்து வீசுவளி கலாவலின்**
**முரசு அதிர்ந்து அன்ன இன்குரல் ஏற்றொடு**
**நிரைசெலல் நிவப்பின் கொண்மூ மயங்கி**
**இன்னிசை முரசின் சுடர்ப்பூண் சேஎய்**
**ஒன்னார்க்கு ஏந்திய இலங்குஇலை எஃகின்**
**மின்மயங்கு கருவிய கல்மிசைப் பொழிந்தென”[6]**

என்ற குறிஞ்சிப்பாட்டடிகள் குறிப்பிடுகின்றன. எதிர்ப்பாராமல் பெய்த மழை போன்று, தலைவனும் தலைவியும் எதிர்பாராமல் சந்தித்தனர் என்பதை தோழி செவிலித்தாயிடம் கூறுவதாக இப்பாடல் வரிகள் அமைந்துள்ளதைக் காணமுடிகிறது.

### 3.2.4 அருவி வருணனை

மலையிலிருந்து விழுகின்ற அருவி காண்பதற்கு மிகவும் இனிய காட்சியாக அமைந்துள்ளது. அவ்வினிய அருவியை குறிஞ்சிப்பாட்டில் கவினுற சித்தரிக்கப்பட்டுள்ளது.

**"அவிர்துகில் புரையும் அவ்வெள் அருவித்**
**தவிர்வுஇல் வேட்கையேம் தண்டாது ஆடிப்**
**பளிங்குசொரிவு அன்ன பாய்சுனை குடைவுழி**
**நளிபடு சிலம்பில் பாயம் பாடிப்**
**பொன்எறி மணியின் சிறுபுறம் தாழ்ந்தஎம்**
**பின்னிருங் கூந்தல் பிழிவனம் துவரி**
**உள்ளகம் சிவந்த கண்ணேம்"[7]**

தலைவனது மலையில் மழைபெய்து முடிந்தவுடன் அம்மலையில் உள்ள அருவியானது பார்ப்பதற்கு மிகவும் அழகாகத் தோற்றமளிப்பதாக குறிப்பிடுகின்றார். அருவியிலிருந்து ஓடிவருகின்ற நீரானது ஒளிவீசுகின்ற வெண்மையான துணியைப் பரப்பியதனைப் போன்றும் அது பார்ப்பதற்கு பளிங்கைச் சொரிந்து வைத்திருப்பதைப் போன்றும் தோன்றுவதாக வருணிக்கின்றார். அத்தகைய தூய்மையான அருவி நீரில் தலைவியும் தோழியும் நீராடியும் ஆடிப்பாடியும் மகிழ்கின்றனர். அங்ஙனம் மிகுதியான நேரம் அருவியில் நீராடியதால் தலைவியின் கண்கள் சிவந்து காணப்படுவதாக வருணிப்பதைக் காண முடிகிறது. மேலும்,

**மலைப் பெண்ணின்**
**நரைநெடுங் கூந்தல்**
**அருவி![8]**

என்று குறிப்பிடுவதிலிருந்து ஒரு பெண்ணின் கூந்தலை அருவிக்கு ஒப்பிடுவதைக் காண முடிகிறது. ஆகவே அக்கால புலவர்கள் முதற்கொண்டு தற்கால கவிஞர்கள் வரை அருவியை பலவகையாக உவமைபடுத்தியுள்ளதைச் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.

### 3.2.5 குளிர்கால வருணனை

**"ஆர்கலி முனைஇய கொடுங்கோல் கோவலர்**
**ஏறுடை இனநிரை வேறுபுலம் பரப்பி"[9]**

இவ்வரிகளில் பருவம் தவறாது, விடாது மழைப் பெய்ததால் பெருகிய வெள்ளத்தை வெறுத்த கொடிய கோலினையுடைய கோவலர்கள் தங்களுடைய மாடுகளை வேறு நிலங்களில் மேயவிட்டனர். அங்குள்ள இடையர்கள் மிக்க குளிரால் நடுங்கினர். பின்பு குளிர் தாங்காது இடையர்களின் பற்கள் பறை கொட்டியதையும், உடல்கள் நடுங்கியதையும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

### 3.2.5.1. பறவை, விலங்குகளின் நிலை

குளிர்காலத்தில் விடாது பெய்த மழையால் மனிதர்கள் மட்டுமன்றி விலங்குகளும் குளிரால் நடுங்கின. விலங்குகள் மேயும் தொழிலை மறந்தன. குரங்குகள் மிக்க குளிரால் நடுங்கின. பறவைகள் குளிர் தாங்காது மரத்தினின்று கீழே விழுந்தன. பால் குடிக்க வரும் கன்றுகளைப் பசுக்கள் உதைத்துத் தள்ளின என்பதை மிகவும் திறம்பட நக்கீரர்,

**“மாமேயல் மறப்ப மந்தி கூரப்**
**பறவை படிவன வீழக் கறவை**
**கன்றுகோள் ஒழியக் கடிய வீசிக்”**[10]

என்றும்,

**“மந்திதுயில் வுற்றமுழை வன்கடுவன் அங்கத்**
**திந்திய மவித்ததனி யோகரின் இருந்தத”**[11]

என்ற அடிகள் குரங்குகள் குளிருக்கு மிகவும் வருந்தும் இயல்புடையது என்பதை உணர்த்துகின்றன. மழை பெய்து கொண்டே இருந்ததால் பறவைகள் வெளியே சென்று இரைத்தேடி செல்ல முடியாமலும் உண்ணாமல் இரவும் பகலும் மயங்கி கால்களை மாற்றி மாற்றி நின்று கொண்டிருக்கின்ற நிலையை,

**“மனையுறை புறவின் செங்கால் சேவல்**
**இன்புறு பெடையொடு மன்றுதேர்ந்து உண்ணாது**
**இரவும் பகலும் மயங்கி கையற்று**
**மதலைப்பள்ளி மாறுவன இருப்பக்”**[12]

என்ற அடிகளில் கவினுற வருணித்துள்ளமையைக் காணமுடிகிறது. குளிரின் தாக்கமானது, பறவை, விலங்கு மனிதன் என்ற பாகுபாடின்றி அனைவரையும் நடுங்க செய்ததையும், அதனால் அவர்தம் தொழிலையே மறந்து இருந்ததையும் இவ்வடிகள் புலப்படுத்துகின்றன.

### 3.2.5.2. கூதிர் காலத்தில் மகளிரின் நிலை

குறிஞ்சித்திணைக்குரிய காலம் கூதிர்காலம். இதை குறிஞ்சி கூதிர் யாமம் என்மனார் புலவர் என்ற நூற்பாவழி தொல்காப்பியர் கூறுகின்றார். அதாவது குறிஞ்சித்திணைக்கு கூதிர் காலமும், யாமப் பொழுதும் உரியது என்கிறார். ஐப்பசியும், கார்த்திகையும் கூதிர்காலமாகும்.

கூதிர் காலத்தில் மக்கள் குளிரால் நடுங்கினர். அவர்கள் தத்தம் தொழிலைச் செய்ய இயலாமல் தவித்தனர். தொடர்ந்து பெய்த மழையானது சிறிது ஓய்வெடுப்பது போல் நின்றது. படுக்கையிடத்தில் இளவேனிற் காலத்துக் குளிர்ந்த தென்றற் காற்றை வீசுகின்ற சாளரங்களில் உலவுவாரின்மையால் அவற்றின் இரண்டு கதவுகளும் சேரும்படி தாழிட்டு அடைக்கப்பட்டிருந்தன. வாடைக்காற்றானது கல்லென்னும் ஓசையுடைய சிறுதிவலைகளை எல்லா திசைகளிலும் பரப்பியது. இளையோரும் முதியோரும் குளிர் மிகுதியால் குவிந்த வாயுடைய கரத்தில் நீருண்ணாது, தீச்சட்டியிலுள்ள நெருப்பில் குளிர் காய்ந்தனர். ஆடல் மகளிர் தாம் பாடுகின்ற பாடல்களைக் கரியத் தண்டினையுடைய யாழில் வாசிப்பதற்கு நரம்புகளைத் தமது தனங்களிடத்தே தடவி, அதன் வெப்பத்தால் பண்ணை முறைப்பட நிறுத்திய தன்மையை,

> **“ஆடல் மகளிர் பாடல்கொளப் புணர்மார்**
> **தண்மையின் திரிந்த இன்குரல் தீம்தொடை**
> **கொம்பை வருமுலை வெம்மையில் தடைஇக்**
> **கருங்கோட்டு சீறியாழ் பண்ணுமுறை நிறுப்ப”**[13]

என்ற நெடுநல்வாடை பாடலில் காணமுடிகிறது. இவ்வாறு குளிர்காலத்தில் மகளிர்கள் அடைந்த துன்பத்தை கபிலர் சிறப்பாக வருணித்துள்ளார். செல்வக்குடி மகளிர்கள் காலத்தின் தட்பவெப்ப நிலையை நன்குணர்ந்து அதற்கேற்ப தன் உடல் நலன்களைப் பேணும் இயல்புடையவர்களாக இருந்தனர். குளிர் அதிகமாக இருந்தமையால் இவர்கள் வடநாட்டுச் சந்தனக் கட்டையையும் தென்னாட்டுக் கட்டையையும் பயன்படுத்தாமலும் மகளிர்தம்

கூந்தலில் மாலைகளை அணியாமலும் சில மலா்களை மட்டுமே அணிந்து கொண்டும் தம் கூந்தலுக்கு அகிற்புகையூட்டியதை,

**“வடவா் தந்த வான்கேழ் வட்டம்**

**தென்புல மருங்கில் சாந்தொடு துறப்பக்**

**கூந்தல் மகளிா் கோதை புனையாா்**

**பல்இருங் கூந்தல் சில்மலா் பெய்ம்மாா்”[14]**

என்ற பாடலில் சிறப்பாக அமைந்துள்ளமையைக் காணமுடிகிறது. மேலும் இவா்கள் தம் உடலுக்கு கஸ்தூரி போன்ற பசுங்கூட்டுக் கலவைகளைப் பயன்படுத்தியதாகக் குறிப்பிடுகின்றாா். இக்கூட்டுக்கலவை உடல் வெப்பத்தைக் தணித்து குளிா்ச்சி தரக்கூடியது. சங்ககால மகளிா் குளிா்காலத்தில் மலா்களை நிறையக்சூடாமல் மங்கலம் எனக்கருதிய ஒருசில மலா்களை மட்டுமே சூடிக்கொண்டதாகச் சங்கப்பாடல்கள் குறிப்பிடுகின்றன.

### 3.2.5.3. கூதிா் காலத்தில் பயன்படாதப் பொருட்கள்

மழைக்காலத்தில் குளிா் மிகுதியால் மற்ற காலங்களில் பயன்படுத்தும் பல்வேறு பொருட்கள் பயன்படவில்லை. மக்கள் தென்றல் காற்றானது வருவதால் அதன் குளிா் தாங்க முடியாமல் அங்குள்ள சாளரங்களை அடைத்தனா். இக்குளிா் காலத்தில் கைதோ்ந்த கம்மியரால் அழகுபெறச் செய்யப்பட்ட செந்நிற ‘ஆலவட்டங்கள்’ சிறந்த உறைகளில் இடப்பட்டதாகவும் அதில் சிலந்தி கூடுகட்டியதாகவும் குறிப்பிடுவதை,

**“கைவல் கம்மியன் கவின்பெறப் புனைந்த**

**செங்கேழ் வட்டம் சுருக்கிக் கொடுந்தறி**

**சிலம்பி வால்நூல் வலந்தன தூங்க”[15]**

என்ற நக்கீரா் வரிகளினின்று காணலாம். இங்கு ‘ஆலவட்டம்’ என்பது விசிரியைக் குறிக்கும். மேலும் சிலந்தியின் நூல் மிகப்பெரியது என்பதை ‘சிலம்பி வால்நூல்’ என்று குறிப்பிட்டுள்ளமையை உணர முடிகிறது.

### 3.2.6. மாலை பொழுதை வருணித்தல்

மாலைப் பொழுதை முல்லைப்பாட்டு தம் கண்முன்னே படம் பிடித்துக் காட்டுகின்றது. மாலை காலத்தில் மழையானது ஆரவாரம் செய்கின்ற கடலின்கண் நீரைக்குடித்து வலமாக எழுந்து, மலைகளிடத்தே தங்கிப் பின்னா் உலகத்தையே வளைத்து எழுந்த முகிலானது பெரிய மழையைப்

பெய்கின்ற சிறுபொழுதாகிய மாலை காலம் வந்தது என வருணித்துள்ளமையை,

**"பெரும்பெயல் பொழிந்த சிறுபுன் மாலை"[16]**

என்ற வரிகள் மூலமாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது. இதில் மாலை பொழுதை பெரிய மழையைக் கொடுக்கின்ற மாலைப்பொழுது என வருணித்துள்ளார். மேலும், முகிலானது கடலின் நீரைக்குடித்து பின்பு ஓரிடத்தில் தங்கி பெருமழைப் பெய்வதாக ஆசிரியர் வருணனை செய்துள்ளதைக் காணமுடிகிறது.

### 3.2.7. பூக்கள்

தமிழர் வாழ்வியல் மரபுகள் மலர்களால் மலர்ந்துள்ளன. எனவே தான் மலர்கள் தமிழர் வாழ்வில் சிறப்பிடம் பெற்றுள்ளன. தமிழர் வாழ்வியலில் கற்பின் மலர் முல்லை மலராகும். இதனை வாழ்வியலின் 'தலைமை மலர்' என்று கூறப்படுகிறது. வாழ்வியல் மரபுகளை வகுக்கத் துணை நின்ற மலர்கள் தமிழர் வாழ்வின் மங்கலப் பொருளாகவும் அமைகின்றன. மலர் என்பது ஒரு மங்கலப் பொருளாகும். மங்கலப் பொருள்கள் பலவுண்டு. அவற்றில் முதன்மையும் முக்கியமும் பெற்று விளங்குவது மலராகும். மங்கலப் பொருள்களுள் மலர் இல்லையென்றால் மங்கலம் நிறைவுறுவதன்று. எனவேதான் மலர் இன்றியமையாத பொருளாகக் கருதப்படுகிறது.

மங்கலம் என்பது நன்மையைக்குறிக்கும் ஒரு சொல்லாகும். மங்கலப் பொருள்கள் என்பவை வாழ்வின் நன்மைகளை விளைவிக்கும் பொருள்களாக உள்ளன. வாழ்வின் நன்மையைப் பூக்கச்செய்வது பூ. வாழ்வின் நன்மையை மலரச் செய்வது மலர். பூ, மலர் என்னும் இருசொற்களும் ஒரு பொருள் குறிக்கும் ஒரு பொதுப்பெயராகும். இவை பல்வகை மலர்களுக்கும் பொதுவாக வழங்கப்பெற்று வரும் பொதுப்பெயர்ச் சொற்களாகும்.

#### 3.2.7.1. மலரின் வேறுபெயர்கள்

பூ, மலர் என்று இரு பெயர்கள் பொதுவாக வழங்கப்பட்டாலும் பல பெயர்கள் இருப்பதாக ஆசிரியர்கள் குறிப்பிடுகின்றனர்.

"பூவிற்கு மலர், போது, அலர், தார், தாமம், வீ, இணர், துணர், சமனசம், குசுமம் எனப்பல பெயர்கள் உண்டு"[17] என வெற்றிச்செல்வன்

கூறுகின்றார். இவற்றிலிருந்து மலர், பூ என்பதே பெரும்பாலும் வழங்கப்பட்டு வருவதை உணர்த்துகின்றன.

### 3.2.7.2. மலர்களின் வகைகள்

மலர்கின்ற பல்வகை மலர்களும் அவை மலர்கின்ற இடவகையால்,

1. கோட்டுப்பூ
2. கொடிப்பூ
3. நிலப்பூ
4. நீர்ப்பூ

என நான்கு வகையாகப் பாகுபடுத்தலாம். இதனை இளங்கோவடிகள்,

**“கோட்டினும் கொடியினும் நீரினும் நிலத்தினும்**
**காட்டிய பூ”**[18]

எனக்குறிப்பிட்டுள்ளார். இந்நால்வகை மலர்களைப் பற்றி,

**“கோட்டு மலரும் நில மலரும்**
**குளிர்ந்த மலரும் கொடுங் கொடியின்**
**தோட்டு மலரும்”**[19]

என்று சேக்கிழாரும்,

**“கோட்டுப்பூ கொடிப்பூ நீர்ப்பூ வோடு**
**புதர்ப்பூ என்றிவை நால்வகைக் பூவே”**[20]

எனப் பிங்கல நிகண்டும் வகைப்படுத்திக் கூறுகின்றது. இந்நால்வகைப் பூக்களும் சிறப்பாக நால்வகை நிலங்களின் அடிப்படையில் வகைப்படுத்தப்பட்டவையாகும். மலை- குறிஞ்சி, காடு-முல்லை, வளநிலம்-மருதம்- நீர்- நெய்தல் என்னும் நால்வகை நில அடிப்படையில் நால்வகைப் பூக்கள் சிறப்பு வகையால் வகைப்படுத்தப்பட்டன. ஆயினும் பொதுவாக ஒவ்வொரு வகை நிலத்திலும் நால்வகைப் பூக்களும் மலர்தலும் உண்டு. குறிஞ்சி நிலத்தில் மலரும் மலர்களைத் தொகுத்துக் கூறும் குறிஞ்சிப்பாட்டில்,

**“மலையவும் நிலத்தவும் சினையவும் சுனையவும்**
**வண்ண வண்ணத்த மலர்”**[21]

எனக்குறிப்பிடுகின்றார் கபிலர். இதில் மலைப்பூ, நிலப்பூ, சினைப்பூ சுனைப்பூ என நான்கு வகைப்பூக்களை குறிப்பிட்டுள்ளமையைக் காணமுடிகின்றது.

மேலும் பூக்களின் தனிச்சிறப்புக் காரணமாகத் தேன்மலர், ஒண்பூ, சுவைப்பூ என்றெல்லாம் சிலவகை மலர்களை வழங்குவதை அறியமுடிகிறது.

### 3.2.7.3. கோட்டுப்பூ

நால்வகைப் பூக்களிலே முதலிடம் பெற்று விளங்குவது கோட்டுப்பூவாகும். இது முதலிடம் பெற்றதன் காரணம் மலர் வகைகளிலே கோட்டுப்பூ வகையில் தான் அதிக அளவில் மலர்கள் காணப்படுகின்றன. குறிஞ்சி நிலத்து மலர்களைத் தொகுத்துக் கூறும் குறிஞ்சிப்பாட்டில் கோட்டுப்பூக்கள் 45, கொடிப்பூக்கள் 26, நிலப்பூக்கள் 19, நீர்ப்பூக்கள் 5 எனக்கூறப்பட்டுள்ளன. ஒவ்வொரு மலர்வகையும் இவ்வெண்ணிக்கைகளோடு முடிவனவல்ல. ஒவ்வொரு வகையிலும் மேலும் பல வகைகளுண்டு.

கோட்டுப்பூ மலை நிலத்தின் அதாவது குறிஞ்சி நிலத்தின் சிறப்பு பூவாகும். கோடு என்பது கிளை, சினை எனப்பொருள்படும். மரங்களிலும் செடிகளிலும் கிளைகள் உண்டு. இக்கிளைகளில் பூக்கும் பூவே கோட்டுப்பூவாகும். எனவே இதனை மரப்பூ என்றும், செடிப்பூ என்றும், கிளைப்பூ வென்றும், சினைப்பூவென்றும் வழங்குவதுண்டு.

### 3.2.7.4. கோட்டுப்பூக்களின் வகைகள்

பாதிரி, மகிழம், போங்கம், சண்பகம், புன்னை, சுரபுன்னை, குருக்கத்தி, செருத்தி, மரவம், கமுகு, மா, அசோகு, கொன்றை, வேம்பு, மருதம், வேங்கை, குருந்தம், கடம்பு, இருப்பை, இலவம் முதலியன மரங்களில் பூக்கும் பூக்களே கோட்டுப்பூக்களாகும்.

கோட்டுப்பூக்களில் தலைமை பெற்று விளங்குவது வேங்கைப்பூவாகும். மலைக்கு ஓங்கல் என்ற ஒரு பெயருண்டு. ஓங்கல் என்றால் உயர்ந்து தோன்றுவது என்பது பொருளாகும். மலை மீது வளர்ந்து விளங்கும் வேங்கை மரத்தின் கிளைகளில் புது மலர்கள் பூத்து விளங்கும் இக்காட்சி சிறப்பானதாக காணப்படுகிறது.

### 3.2.7.5. கொடிப்பூ

நால்வகைப் பூக்களில் இரண்டாவது இடம்பெற்று விளங்குவது கொடிப்பூவாகும். இந்த கொடி மலர் காட்டுப்பகுதியாகிய முல்லை நிலத்தின் சிறப்பு மலராகும். கொடி வகைகளில் முல்லை, பித்திகம், பீரம், தளவம் போன்றவற்றைச் சிறப்பாகக் குறிப்பிடலாம். கொடிப்பூ வகைகளில் தனிப்பெருஞ்சிறப்பினைப் பெற்று விளங்குவது முல்லைப் பூவேயாகும்.

முல்லைப்பூ தலைவன் தலைவி இருவரையும் இணைக்கும் வாழ்வியல் சின்னமாக அமைந்துள்ளது.

இதழ், வடிவம், வண்ணம் ஆகியவற்றின் ஒப்புமைக்கொண்டு முல்லை இனமாக மல்லிகையைக் கூறுவர். அதனால் முல்லை வேறு, மல்லிகை வேறு என அறியலாம். முல்லை கொடிப்பூ என்றும், மல்லிகை செடிப்பூ என்றும் கூறுவர். இவற்றை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். அவை,

1. மல்லிகை
2. வனமல்லிகை என்பனவாகும்.

### 3.2.7.6. நிலப்பூ

மலர்களில் மூன்றாவதாக இடம்பெற்று விளங்குவது நிலப்பூவாகும். நிலத்தில் தரையில் படரும் புல், பூண்டுகள் குற்றாய் வளரும். புதர்களில் வளரும் சிறு செடிகளின் கொம்பே காம்பாக அமையும். இவ்வாறு பூக்கும் பூக்களெல்லாம் 'நிலப்பூக்கள்' என்று பெயர் பெறும். புதர்களில் வளர்வதால் இதனைப் புதர்ப்பூ என்றும் அழைப்பர். இப்புதர்ப்பூ உள்ளீரம் கொண்டது. நீர்வற்றிய பருவங்களிலும் வயல்களில் நிறைந்து காணப்படும். இந்நிலப்பூ வகையில் எருக்கு, எருவை, எள், கரும்பு, கள்ளி, பூளை, குல்லை, குறிஞ்சி, செம்பருத்தி, செவ்வந்தி, தாழை, தும்பை, துழாய், நெருஞ்சி, பருத்தி, அனிச்சம், முள்ளி, வேரல் முதலியவற்றின் பூக்கள் அடங்கும்.

### 3.2.7.7. நீர்ப்பூ

நான்காம் இடத்தில் வகிக்கும் பூ நீர்ப்பூவாகும். குளம், பொய்கை, வயல், சுனை, ஆற்றோரம், ஓடையோரம், கடலோரம், அருவியோரம் முதலிய நீர் நிலைகள் எல்லாவற்றிலும் பூக்கள் மலர்தலுண்டு. இவ்வகைப்பூக்களே நீர்ப்பூக்களாகும். பொதுவாக நீர்ப்பூக்கள் குவிந்து மலர்ந்து சில நாட்கள் மட்டுமே இருந்து பின் உதிர்ந்துவிடும் தன்மையை உடையனவாக அமைந்துள்ளன.

### 3.2.7.8. வேறு பெயர்கள்

நீர்நிலைகளில் தோன்றும் பூக்கள் தோன்றும் வகையால்,

- பொய்கைப்பூ
- வயற்பூ
- ஓடைப்பூ

❖ கயப்பூ

❖ கேணிப்பூ

❖ சுனைப்பூ

என்றெல்லாம் அழைக்கப்படுகிறது. இயற்கையில் சிறப்பிடம் பெறுவது பூத்துக்குலுங்கும் மலர்களாகும். குறிஞ்சித்திணையைப் பாடுவதில் புகழ்பெற்ற கபிலர் குறிஞ்சிப்பாட்டில் மலர்களைப் பற்றி மிக அழகாக குறிப்பிட்டுள்ளார்.

**"……….. வள்இதழ்**

**ஒன்செங் காந்தள் ஆம்பல் அனிச்சம்**

**தன்கயக் குவளை குறிஞ்சி வெட்சி**

**……………………………………**

**……………………………………**

**……………………………………**

**நரந்தம் நாகம் நள்ளிருள் நாறி**

**மாஇருங் குருந்தும் வேங்கையும் பிறவு"**[22]

செங்காந்தள் மலர் முதல் மலையெருக்கம் பூ வரையிலான 99 வகையான பூக்களின் பெயரை ஒரே இடத்தில் 35 அடிகளில் தொகுத்துக் கூறியிருப்பதை இன்றைய தாவரவியல் அறிஞரும் வியந்து போற்றுவர். தினைப்புனம் காக்கச் சென்ற தலைவியும் தோழியும் பலவகையான மலர்களைத் தொகுத்து அதனை மழைபெய்து தூயதாக்கின பாறையின் மீது குவித்து பல இதழ்களையுடைய பூக்களையெல்லாம் மாலைகளாக புனைந்து அணிந்து மகிழ்கின்ற காட்சியானது குறிஞ்சிப்பாட்டில் சிறப்பாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

### 3.2.7.9. அடும்பு

அடும்பு என்ற மலர் இதே பெயரால் இன்றும் வழங்கப்படுகிறது. இம்மலர் கடற்கரையோரங்களிலும், கழிகளின் கரையோரங்களிலும், படர்ந்து கிடக்கும். அடும்பின் மலர் பெரியதாக இருக்கும். இம்மலர் குதிரையின் கழுத்தில் கட்டப்பட்டிருக்கும் மணியைப் போன்ற வடிவினதாக இருக்கும். இது இளஞ்சிவப்பு வண்ணத்தில் காணப்படும். இந்த அடும்பினைப் பட்டினப்பாலை,

**"வறள் அடும்பின் மலர் மலைந்தும்"**[23]

என்று குறிப்பிடுகின்றது. இவ்வடிகளிலிருந்து இவ்வடும்பின் இதழானது வன்மையாக இருக்கும் என்பதையும் இம்மலரை குதிரையின் கழுத்தில் கட்டப்பட்டிருக்கும் மணிக்கு உவமையாக கூறியிருப்பதையும் காணமுடிகிறது.

### 3.2.7.10. அதிரல்

இது பலப்பூக்களையுடைய ஒரு கொடியாகும். அதிரல் என்பதனை 'மோசி மல்லிகை' என்றும், புனலிப்பூ என்றும் உரையாசிரியர்கள் கூறியுள்ளனர். இவற்றில் புனலிப்பூ என்பதே சரியான பெயராக உள்ளது. இப்பூ வெண்மை நிறமாக இருக்கும். இதன் மொட்டுக்களின் மீது மெல்லிய வரிகள் காணப்படும். இதன் மொட்டுக்களை குயிலின் மூக்கிற்கும் காட்டுப்பூனையின் கூரியப் பல்லிற்கும் ஒப்பிடுவர். இம்மலர் இரவில் வைகரைப் பொழுதில் மலரும். இம்மலரை,

**"அதிரல் பூத்த ஆடுகொடிப் படாஅர்"[24]**

என்று முல்லைப்பாட்டு அடி எடுத்துரைக்கிறது. இவ்வடி அதிரல் என்பது கொடி வகையைச் சார்ந்தது என்பதை சுட்டிக்காட்டுகிறது.

### 3.2.7.11. ஆம்பல்

ஆம்பல் மலர் பொய்கைகளிலும், கழனிகளிலும் மிகுதியாக மலர்ந்திருக்கும். சுனைகளிலும் சில இடங்களில் இம்மலர் காணப்படுகிறது. இதனை நீரில் வளரும் கொடி என்றும் கூறுவர். கொடியில் முள் போன்ற அமைப்பு இருக்கும். கார் காலத்தில் மழை பெய்து நீர் நிலைகள் நிறைந்திருக்கும் போது இது மிகுதியாக மலரும். இம்மலர் குளிர்ச்சி பொருந்தியது. இரண்டு வண்ணங்களில் இம்மலர் காணப்படுகிறது. அவை, 1. வெள்ளாம்பல், 2. செவ்வாம்பல் என்பனவாகும். இவ்வாம்பல் மலரை ஆடவர்கள் சூடியதாக,

**"புனல் ஆம்பல் சூடியும்"[25]**

என்ற பட்டினப்பாலை அடியும்,

**"ஆம்பல் ஆய்இதழ் கூம்புவிட"[26]**

என்ற குறிஞ்சிப்பாட்டடியில் ஆம்பலானது மாலைக்காலத்தில் மிகவும் அழகாக மலர்ந்துள்ளதாக குறிப்பிட்டுள்ளார்.

### 3.2.7.12. காந்தள்

இலக்கியத்தில் போற்றப்படும் அழகிய பூ காந்தள் பூவாகும். இப்பூ தமிழ்க்கடவுளான முருகனுக்குரிய பூவாகக் கருதப்படுகிறது. மழைக்காலத்தில் வேலியோரங்களில் பூத்துக்குலுங்கும் இக்காந்தள் பூவை சிற்றூர்களிலும், வயற் புறங்களிலும் வாழும் மக்கள் பல பெயர்களில் வழங்குகின்றனர். இப்பூவை கார்த்திகைப்பூ என்றும், கலப்பைக் கிழங்கு என்றும், காக்கை மூக்குச்செடி என்றும் கூறுவர்.

**“காந்தள்அம் துடுப்பின் கவிகுலை அன்ன”**[27]

இதில் காந்தள் மலர்போன்று பெண்கள் தன் கைகளை குவித்து வணங்குவதாக வருணித்துள்ளமையைக் காணமுடிகிறது. மேலும்,

**“...... மலர் கவிழ்ந்து**

**மாமடல் அவிழ்ந்த காந்தளம்”**[28]

என்ற பாடலடிகள் பெரிய மடல்களையுடைய விரிந்த காந்தள் மலரானது தலை கவிழ்ந்து காணப்படுவதாக எடுத்துரைக்கின்றன.

### 3.2.7.13. காயா

காயாமலர் பல கொத்துக்களை உடையது. இதனை இக்காலத்தில் ‘காசர்’ என்று வழங்குவர். காட்டுப்பகுதிகளிலும், செந்நிலப் பகுதிகளிலும் இப்பூ வளர்ந்திருக்கும். முதுவேனிற் காலத்தில் பொலிவிழந்த மரத்தின் கிளைகள் மழை பெய்தவுடன் தழைத்துக் கருமையுடன் பளபளப்பாகத் தோற்றமளிக்கும். இதனை ‘பல்லிணர்க்காயா’ என்றும் குறிப்பிடுவர். இது மொட்டாக இருக்கும் போது கரிய நிறத்துடனும், விரிந்த நிலையில் நீலமணி நிறத்துடனும் காணப்படும். இது பார்ப்பதற்கு மயிலின் கழுத்தைப் போன்று தோற்றமளிப்பதை,

**“கருநனைக் காயா கணமயில் அவிழவும்”**[29]

என்று குறிப்பிட்டுள்ளார். மேலும்,

**“செறியிலைக் காயா அஞ்சனம் மலர”**[30]

என்று செறிந்த இலையினையுடைய ‘காயாம்பூ’ என்று வருணித்துள்ளமை புலப்படுகிறது.

### 3.2.7.14. குவளை

குவளை மலர் மலையில் உள்ள சுனைகளில் மிகுதியாகப் பூத்திருக்கும். இது பொய்கையிலும் வளரும் தன்மை உடையது. இது சிவப்பு மற்றும் நீலம் என்ற இரண்டு வண்ணங்களில் காணப்படும். பெண்களின் அழகு பெற்றமையுண்ட கண்களுக்குக் குவளை மலரை ஒப்பிட்டுக்கூறுவர். இம்மலர் மிகவும் மென்மைத்தன்மை வாய்ந்தது. மிகுதியான இதழ்களை உடையதால் இதனைப் 'பல்லிதழ்' என்றும் கூறுவர். பெரிய இதழ்களை உடையது என்பதை,

**"மாஇதழ்க் குவளை"**[31]

என்ற அடியும், இம்மலர் மிகவும் அழகாக மலரும் என்பதை,

**"போது அவிழ் குவளை"**[32]

என்ற அடியும் சுட்டிக்காட்டுகின்றன. இதில் குவளை மலரானது பெரிய இதழ்களால் அழகாக மலரும் தன்மையுடையதாக வருணிக்கப்பட்டுள்ளதை உணர முடிகின்றது.

### 3.2.7.15. கொன்றை

கார்காலத்தில் பூக்கத்தொடங்கும் கொன்றை மலர்கள் பொன்நிற வண்ணத்தில் காணப்படும். கொத்துக் கொத்தாக மாலை போல் பூத்துக்குலுங்கும் இம்மலர் பார்பதற்கு மிகவும் அழகாகத் தோற்றமளிக்கும். கொன்றை மலருக்கு 'பொன்மலர்' என்ற பெயருண்டு.

**"முறியிணர்க் கொன்றை நன்பொன் காலக்"**[33]

என்ற முல்லைப்பாட்டு அடி கொன்றை மலர் பொன் போன்றது எனவும், அதன் ஒளி பொன்னின் ஒளிக்கு ஒப்பாக விளங்குகின்றது எனவும் வருணிக்கின்றது.

### 3.2.7.16. தாழை

குறிஞ்சிப்பாட்டில் தாழைமலர் 'தென்னை பாளைப்பூ' என்று கூறப்படுகிறது. இது மஞ்சள் நிறமாகக் காணப்படும். காயாக இருக்கும் போது சிவப்பு நிறத்தில் காணப்படும். யானையின் கொம்புக்கு இதன் வடிவத்தை ஒப்பிடுவர். இது கடற்கரைப் பகுதிகளிலும் கழனிகளின் ஓரங்களிலும் வளர்ந்திருக்கும். இப்பூ வேனிற்காலத்தில் மிகுதியாக மலரும் தன்மையை,

**"மடல்தாழை மலர்"**[34]

என்று பட்டினப்பாலை இயம்புகிறது. இதில் தாழை மலர் மடல்போன்று பெரியதாக மலர்ந்துள்ளதாக வருணனை செய்துள்ளதைக் காணமுடிகிறது.

### 3.2.7.17. தோன்றி

விளக்குப்போல் ஒளியுடையது தோன்றிப்பூ. இது மஞ்சளும் சிவப்பும் கலந்து மிகுந்த ஒளியுடன் காணப்படும். தோன்றியின் இதழ் மிகவும் பெரியதாக இருக்கும். இவை பார்ப்பதற்கு இரத்தம் போல் காணப்படுவதை,

**“தோடு ஆர் தோன்றி குருதி பூப்பக்”**[35]

என்ற வரிகள் குறிப்பிடுகின்றன. இப்பூவின் நிறத்தை இரத்தத்திற்கு உவமையாகக் கூறி வருணித்துள்ளதை புலப்படுத்துகின்றது.

### 3.2.7.18 பித்திகம்

கொடிப்பூ வகைகளில் பித்திகப்பூவும் ஒன்று. பித்திகப்பூவே இக்காலத்தில் ‘பிச்சிப்பூ’ என வழங்கப்படுகின்றது. பெரும்பாலும் இப்பூ மழைகாலத்தில் பூப்பதால் இப்பூவினை ‘மாரிப்பித்தகம்’ என்ற அடைமொழியுடன் இணைத்து மொழிந்தனர். மாரிக்காலத்திலும் அந்திப் பொழுதில் மலரும் தன்மை உடையது. ஆகையால் சங்ககால மகளிர் இப்பூவினைக் கண்டு அந்திப் பொழுதை அறிந்து விளக்கேற்றினர் என நெடுநல்வாடை கூறுகிறது.

**“செவ்வி அரும்பின் பைங்கால் பித்திகத்து**
**அவ்விதழ் அவிழ்பதங் கமழப் பொழுதறிந்து**
**இரும்புசெய் விளக்கின் ஈர்ந்திரிக் கொள்இ”**[36]

இவ்வடிகளில் இப்பூ பசிய கால்களை (காம்புகளை) உடையது என்பதையும், இப்பூ மிகுந்த மணமும் வெள்ளிய நிறமும் கொண்டது என்பதையும் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

### 3.2.7.19 பீரம்

பித்திகத்தைப் போன்றே கார்காலத்தில் மலரும் மற்றொரு கொடிப்பூ பீரம். பீரம் என்பதை பீர்க்கம் என்று இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

**“பொன் போல் பீர்க்கம்”**[37]

என்ற வரிகள் பித்திகம் பொன்போல் தோற்றமளிக்கும் என்பதை உணர்த்துகின்றது.

### 3.2.7.20 பூளைப்பூ

நிலவகைப் பூக்களுள் ஒன்று பூளைப்பூ. பாழ்பட்ட இடங்களிளெல்லாம் எருக்கஞ்செடி முளைத்தல் போன்று, பாழ்பட்ட நிலங்களிலும் வேலிப்புதர்களிலும் பூளைச் செடித்தோன்றும். எனவே இப்பூவை ‘புதர்ப்பூ’ என்றும் அழைப்பார்கள்.

**“வேறுபல் பூளையொடு உழிஞை சூடி”**[38]

என்பதிலிருந்து இப்பூ சிவபெருமானுக்கு உகந்த மலர்களுள் பூளைப்பூவும் ஒன்று எனத் தெளிவாகிறது. இப்பூளைப்பூ வேனிற் பருவத்தில் பூக்கும். வெண்மை நிறமுடையது. ஆனால் மணமற்றது. வரகு அரிசி சோற்றின் வடிவ முடையது. இதழாக விரியாதது. பஞ்சுபோன்ற அமைப்பினை உடையது. நீண்ட கொத்தாகப் பூக்கும் இப்பூ பிறவிப் பிணிக்கு உவமையாக அமைந்துள்ளன என இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன.

### 3.2.7.21. போங்கம்

போங்கத்தை ‘மஞ்சாடி மரம்’ என்று அழைப்பர். மாஞ்சாடி என்பது ‘மலை மஞ்சாடி’ என்றும் கூறுவர். இது மேற்குத் தொடர்ச்சி மலையில் காணப்படும் நெடிய மரமாகும். இதனுடைய விதை இளஞ்சிவப்பாக இருக்கும். இப்போங்கம் வெண்மையாக காட்சியளிப்பதை,

**“தண்ணுறுந் தொடையல் வெண்போழ்க் கண்ணி”**[39]

என்ற அடிகளில் கபிலா் குறிப்பிட்டுள்ளமையை காணலாம். இதிலிருந்து குளிர்ச்சி பொருந்திய வெண்மையான இப்போங்கம் மாலையாக தொடுத்து மகளிர் அணிந்து கொள்வா் என்பதை எடுத்துரைக்கின்றது.

### 3.2.7.22. முல்லை

கொடி வகைகளில் ஒன்று முல்லைப்பூ. கொடிப்பூவாகிய முல்லை அகத்திணை இலக்கியங்களில் அதிக அளவில் இடம் பெறுகின்றது. முல்லை மலா் தமிழரின் குடும்ப வாழ்வில் தனியிடம் பெற்று விளங்குகின்றது. ஒரு பெண் பெதும்பைப் பருவம் கடந்து மங்கைப் பருவம் அடைவதுதான் அவளது எதிர்கால இல்வாழ்வின் அடித்தளமாகும். இந்த அடித்தளத்தில் அவள் தன் வீட்டு முற்றத்தில் முல்லையை நட்டு வளர்ப்பது முல்லை நிலத்தார் மரபாகும். இம்முல்லைக்கொடி கார் காலத்தில் தளிர்ந்து ஏராளமான அரும்புகளை விடும் தன்மையுடையது. இதன் முகை

வெண்மையாக நீண்டு இருக்கும். இக்கொடியின் மலா்கள் மிகுந்த மணமுடையது. இதனை ‘முல்லைவீ’ எனச் சிறப்பித்து சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

**“முல்லை முகைவாய் திறப்பப்”[40]**

என்ற பாடல் முல்லை அரும்புகளானது மாலை வேளையில் இதழ் அவிழ்ந்து (விரித்து) வாய் போன்று மலா்ந்ததாக கூறியுள்ளமையை உணா்த்துகின்றது.

### 3.2.7.23. முசுண்டையும் பீா்க்கமும்

மென்மையான கொடிகளைக் கொண்ட முசுண்டையில் வெண்ணிறப் பூக்களும், பீா்க்கங்கொடிகளில் மஞ்சள் நிறப்பூக்களும் பூத்துக் குலுங்குகின்ற காட்சியை நக்கீரா் அழகாக படம்பிடித்துக் காட்டியுள்ளாா். இக்கொடிகள் புதா்களில் ஒன்றுடன் ஒன்று பின்னிப் பிணைந்து வளா்ந்திருந்ததால் வெள்ளைநிற முசுண்டையும், மஞ்சள் நிற பீா்க்க மலா்களும் ஒரே கொடியில் மலா்ந்திருப்பதை போல் காட்சியளிப்பதாக,

**“புன்கொடி முசுண்டைப் பொறிப்புற வான்பூப்**
**பொன்போல் பீரமொடு புதல்புதல் மலர”[41]**

வருணிப்பதைக் காணலாம். குளிரானது மனிதா்கள், பறவைகள், விலங்குகள் மட்டுமின்றி பூக்களையும் குளிரவைப்பதை இவ்வரிகள் எடுத்துரைக்கின்றன.

### 3.2.7.24. நெல் முற்றும் காட்சி

வளமான நெல் வயலில் இயற்கையாக நெல் முற்றும் காட்சியை கண்ட நக்கீரா் அழகாக வருணிக்கின்றாா்.

**“வண்தோட்டு நெல்லின் வருகதிா் வணங்க”[42]**

இதில் நீா் நிரம்பிய அகன்ற வயல்களில் நெற்பயிா்களிலிருந்து வெளிப்பட்டு மேலே எழுந்தன. அதிலுள்ள நெல்மணிகள் முற்றி நெல்மணிகள் தலை சாய்வது பாா்ப்பதற்கு தலை வணங்குவதாக சுவைபடக் கூறியுள்ளாா்.

## 3.3. ஏனைய வருணனை

சங்கப்புலவா்கள் இயற்கை நிகழ்ச்சியை வருணிப்பதோடு நின்றுவிடாமல், தலைவன் தலைவியின் தோற்றம், பறவைகள், விலங்குகள் போன்றவற்றின் செயல்கள் காவிரியின் வளம், கரிகால்வளவனின் பெருமை, அட்டில் சாலைகளின் தன்மை, அந்தபுரம், கட்டிலின் ஒப்பனைத்திறம்,

பாசறைக்காட்சி, தலைவியின் துன்ப நிலை போன்றவற்றை மிகவும் இனிமையாக கவினுற வருணித்துள்ளனர்.

### 3.3.1. தலைவனின் அழகை வருணித்தல்

எண்ணெய் தடவப்பெற்றதும் கடை குழன்று வளர்ந்ததுமாகிய மணமுள்ள கரிய மயிரிலே குளிர்ச்சியும் மணமும் கொண்ட மயிர் சந்தனத்தைப் பூசியும்,ஈரம் புலரும்படி விரலால் உலர்த்துவதற்கு அவிழ்த்தும், வயிரம் பொருந்திய அகிற்கட்டையின் புகையினையூட்டியும் யாழ் ஓசையை ஒத்து ஒலிக்கும் அழகிய கீற்றுகளையுடைய வண்டுகள் ஒலிக்கும்படி, மணமுள்ள எண்ணெயைச் சேர்த்து நீலமணியின் நிறத்தினைக் கொண்டதும் மாட்சிமையுடைய கரிய தலைமயிரினை உடையவனாகத் தலைவன் காணப்பட்டான் என்பதை,

**“எண்ணெய் நீவிய சுரிவளர் நறும்காழ்த்**
**தண்ணுறுந் தகரம் கமழ மண்ணி**
**ஈரம் புலர விரல்உளர்ப்பு அவிழாக்**
**காழகில் அம்புகை கொளீஇ யாழிசை**
**அணிமிகு வரிமிஞிறு ஆர்ப்பத் தேங்கலந்து**
**மணிநிறம் கொண்ட மாஇருங் குஞ்சியின்”[43]**

என்ற அடிகளில் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. இங்கு தலைவனின் கரிய கூந்தலினை அழகாக வருணிக்கப்பட்டுள்ளதைக் காணலாம். மேலும் அவன் மலர்களை அணிந்துவரும் அழகிய காட்சியைக் கூறும்பொழுது,

**“பைங்கால் பித்திகத்து ஆய்இதழ் அலரி**
**......................................................**
**.........................................................**
**தொன்றுபடு நறுந்தார் பூணொடு பொலிய”[44]**

பிச்சிப்பூவினை ஒரு காதில் சொருகியும், நெருப்பினைப் போன்று ஒளிவிடும் மென்மையான அசோகந் தளிரை மற்றொரு காதினில் சொருகியும், தன்மார்பிடத்தே சந்தனத்தைப் பூசியும் தலைவன் மிக அழகாக நடந்து வருகின்றான் என்று கபிலர் கூறுவதைக் காணமுடிகிறது. மேலும் தலைவனின் தோற்றத்தைக் கூறும்போது,

**“செம்பொறிக்கு ஏற்ற வீங்குஇறைத் தடக்கையின்**

**வண்ண வரிவில் ஏந்தி அம்பு தெரிந்து**
**நுண்வினைக் கச்சைத் தயக்குஅறக் கட்டி**
**இயல்அணிப் பொலிந்த ஈகை வான்கழல்**
**துயல்வருந் தோறும் திருந்தடிக் கலாவ”**[45]

தலைவன் அழகிய வில்லைக் கையில் ஏந்திக் கொண்டும், அழகிய வேலைபாடுகள் அமைந்த ஆடையினைத் தம் இடுப்பில் கட்டியும், அழகிய வீரக்கழல்களை அணிந்து கொண்டு வருவது காண்பதற்கு முருகனோ? என்று வியக்கும் அவனது தோற்றம் காணப்படுவதாக வருணிக்கின்றார்.

### 3.3.2. தலைவியின் அழகை வருணித்தல்

தலைவன் தலைவியின் அழகைப் பாராட்டுகின்ற தன்மையைப் பற்றிக் கபிலர் கூறும் பொழுது மென்மையும் இனிமையும் பொருந்திய சொல்லை உடையவளே! ஐவகைப்பட்ட கூந்தலை உடையவளே! ஒளியுடைய வளையல்களை அணிந்தவளே! அசைந்த மெல்லிய சாயலினையும் குளிர்ந்த கண்களை உடையவளே! என்று வருணிப்பதை,

**“மெல்லிய இனிய மேவரக் கிளந்துளம்**
**ஐம்பால் ஆய்கவின் ஏத்தி ஒண்கொடி**
**அசைமென் சாயல் அவ்வாங்கு உந்தி**
**மடமதர் மழைக்கண் இளையீர்”**[46]

என்ற குறிஞ்சிப்பாட்டு வரிகள் புலப்படுத்துகின்றன. தலைவியின் கண்கள் மானின் கண்ணுக்கு உவமையாகவும், கண்களின் குளிர்ச்சியை குவளை மலருக்கு ஒப்பாகவும் கபிலர் கூறுவதைக் காணமுடிகின்றது.

### 3.3.3. கிளிகளை ஓட்டும் காட்சி

சங்கப்புலவர்கள் பறவையின் வாழ்க்கை நிகழ்வுகளை அழகாக இலக்கியங்களில் எடுத்துரைத்துள்ளனர். கபிலர் குறிஞ்சிப்பாட்டில் கிளிகளை ஓட்டும் காட்சியினை மிகவும் சிறப்பாக வருணித்துள்ளார்.

**“கலிகெழு மரமிசைச் சேணோன் இழைத்த**
**புலியஞ் சிதணம் ஏறி அவண**
**சாரற் சூரல் தகைபெற வலந்த**
**தழலுந் தட்டையுங் குளிரும் பிறவும்**

**கிளிகடி மரபின ஊழூழ் வாங்கி**

**உரவுக்கதிர் தெறூஉம் உருப்பவிர் அயத்து"**[47]

தினைக் கதிர்களைக் காக்க தலைவியும் தோழியும் செல்கின்றனர். அங்கு மரத்தின் உச்சியில் கானவர் அமைத்த பரணின் மீது ஏறி நின்று மலைச்சாரலின் கண் வளர்ந்த பிரம்பினால் அழகுபெறப் பின்னப்பெற்ற தழல், தட்டை, குளிர் போன்ற பல கருவிகளைக் கொண்டு கிளிகளை ஓட்டியதாக குறிஞ்சிப்பாட்டடிகள் எடுத்துரைக்கின்றன.

### 3.3.4. விலங்குகள்: யானை

விலங்குகள் விரும்பி வாழும் இடம் மலைகள். இம்மலைகளின் அடர்ந்த காடுகளில் பல விலங்குகள் வாழ்கின்றன. மான், நாய், யானை போன்ற விலங்குகள் பற்றியும் அவைகள் வேட்டையாடுகின்ற தன்மையையும் குறிஞ்சிப்பாட்டானது நன்கு விளக்குகின்றது. மதம் பிடித்த யானை ஒன்று தினைக் கதிர்களைத் தின்பதற்குக் காட்டுக்குள் நுழைகின்றது. அவ்யானையை கானவர்கள் விரட்டுகின்றனர். விரட்டியமையால் யானை வருகின்ற காட்சியானது, கார்காலத்தில் மழை பொழிகின்ற போது இடிக்கும் இடியோசை போல முழங்கிக் கொண்டு வருவதாகவும், பின் மரங்களை எல்லாம் ஒடித்து எறிந்து பித்தேறிய யானை கூற்றத்தூதனைப் போன்று எதிர்த்து வருவதாகவும் வருணித்துள்ளார்.

**"மடிவிடு வீளையர் வெடிபடுத்து எதிரக்**

**கார்பெயல் உருமிற் பிளிறிச் சீர்த்தக**

**இரும்பிணர்த் தடக்கை இருநிலஞ் சேர்த்திச்**

**சினந்திகழ் கடாஅம் செருக்கி மரம் கொல்பு**

**மையல் வேழம் மடங்கலின் எதிர்தர"**[48]

மேலும், யானையின் தன்மையை கபிலர் குறிப்பிடுகையில்,

**"உய்விடம் அறியேம் ஆகி, ஒய்யென**

**திருந்து கோல் எல்வளை தெழப்ப நாணுமறந்து**

**……………………………………………**

**……………………………………………**

**அயர்ந்து புறங் கொடுத்த பின்னர்"**[49]

என்று கூறுகின்றார். மதம்பிடித்த யானையானது தலைவியும் தோழியும் இருக்கும் இடம் நோக்கி ஓடிவருகிறது. அவர்கள் உயிர்த்தப்ப வேறு வழியின்றி நாணத்தையும் மறந்து தலைவன் அருகே சென்று நிற்கின்றனர். தலைவன் வில்லை வளைத்து அம்பினால் யானையின் நெற்றியைப் பிளக்கிறான். பின் யானை அவ்விடத்தில் நிற்காமல் புறபுதுகு காட்டி ஓடியதாக கபிலர் காட்சிபடுத்துவதை குறிஞ்சிப்பாட்டு வாயிலாக எடுத்துரைக்கின்றார்.

### 3.3.5. நாய்

பழங்காலத்தில் வேட்டைக்குச் செல்ல வேட்டை நாய்கள் பயன்பட்டன. வேட்டை நாய்கள் பாய்ந்து வருகின்ற காட்சியினைக் கூறும் பொழுது, பகைவர்கள் நாட்டைப் பாழ்படுத்தி அழிக்கின்ற நெருங்கற்கரிய வலிமையினையுடையது பகை. அப்பகையையும் புறமுதுகுக் காட்டி ஓடச்செய்த பல் வேற்படையுடைய இளைஞர்கள் துரத்திக்கொண்டு வருவது போல சில வேட்டை நாய்கள் ஓடி வந்ததாக குறிப்பிடுகின்றார்.

**“முனைபாழ் படுக்கும் துன்னருந் துப்பின்**
**பகைபுறங் கண்ட பல்வேல் இளைஞரின்**
**உரவுச்சினம் செருக்கித் துன்னிதொறும் வெகுளும்**
**முளைவாள் எயிற்ற உள்உகிர் ஞமலி**
**திளையாக் கண்ண வளைகுபு நெரிதர”**[50]

இவ்வேட்டை நாய்கள் வலிமை மிக்கவை. அவற்றை நெருங்கும்தோறும் குரைக்கும் இயல்புடையன. கூரிய நகத்தையுடையன. இத்தன்மையுடைய வேட்டை நாய்கள் தலைவியையும் தோழியையும் வளைத்துக் கொண்டு இமையாத கண்களை உடையனவாக நெருங்கிப் பாய்ந்து வந்ததாகவும், அவர்களை நாயிடமிருந்து தலைவன் காப்பாற்றியதாகவும் இவ்வடிகளில் வருணித்துள்ளார். இதில் வேட்டை நாய்கள் மிகுந்த வலிமை கொண்டு பிறரைத் தாக்கும் இயல்புடையவை என்பதும் புலப்படுகிறது.

### 3.3.6. காவிரியின் வளத்தை வருணித்தல்

குற்றமில்லாத புகழையுடைய காவிரியாறு மேற்குத்தொடர்ச்சி மலையிலே தோன்றி கடலிலே பாயும் தன்மை கொண்டது. நீர்வளம் மிக்கது. இவ்வளத்தைப் பற்றி கூறுகையில்,

**“வசைஇல்புகழ் வயங்கு வெண்மீன்**

**திசை திரிந்து தெற்கு ஏகினும்**

**தற்பாடிய தளியுணவின்**

**புள்தேம்பப் புறல்மாறி**

**வான் பொய்ப்பினும் தான் பொய்யா**

**மலைத்தலைய கடல்காவிரி**

**புனல்பரந்து பொன் கொழிக்கும்”**[51]

என்று கவினுற குறிப்பிட்டுள்ளார். இவ்வடிகள் வெள்ளி என்னும் விண்மீன் தான் நிற்றற்குரிய வடதிசையில் நில்லாது, தென்திசையிற் சேரினும், மழைத்துளியையே உணவாக உட்கொள்கின்ற வானம்பாடியே மழைத்துளியைப் பெறாது, புலம்பம்படி வானம் மழைப் பெய்யாது பொய்ப்பினும் காவிரியிடத்தில் நீர்வளம் வற்றாது என காட்சிப்படுத்தியுள்ளதை எடுத்துரைக்கின்றன. வெள்ளி திசை திரிந்து தெற்கு நோக்கிச் சென்றால் உலகில் மழை பெய்து நிலம் வளம் கொழிக்கும் என்னும் கொள்கையுடையவர் நம் பண்டைத் தமிழ் மக்கள் என்பதை,

**“இலங்குகதிர் வெள்ளி தென்புலம் படரினும்**

**அந்தண் காவிரி வந்துகவர் பூட்ட”**[52]

என்றும்,

**“கரியவன் புகையினும் புகைக்கொடி தோன்றினும்**

**விரிகதிர் வெள்ளி தென்புலம் படரினும்**

**……………………………………………**

**காவிரிப் புதுநீர்க் கடுவரல் வாய்த்தலை”**[53]

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இவற்றின் மூலம் பொய்க்காமல் மழை பெய்வதால் காவிரியில் புதுப்புனல் போல் காட்சியளித்து மக்களுக்கு பெரும்பயனை அளிக்கின்றது என்பதை உணரமுடிகின்றது.

### 3.3.7. கரிகால் வளவனின் பெருமையை வருணித்தல்

தன்னை எதிர்த்து வரும் பகைவர்களை அடையாளம் இன்றி அழிக்கக் கூடியவன். தன்னை நாடி வருபவர்களைக் காத்து அருள்புரிபவன். அவனுடைய சினம் கட்டுக்கடங்காதது. பகைவரோடு போரிட்டும் சினம்

தணியாத வளவன் ஒளிநாட்டார், அருவா நாட்டார், குடநாட்டார் ஆகியோரோடும் போரிட்டு வெற்றி பெற்றான் என்பதை,

**“பல்ஒளியர் பணிஒடுங்க**

**தொல் அருவாளர் தொழிற்கேட்ப**

**வடவர் வாடக் குடவர் கூம்பத்**

**தென்னவன் திறல்கெடச் சீறி”**[54]

என்ற அடிகள் குறிப்பிடுகின்றன. இவ்வடிகளில் கரிகாலனின் சினமானது ஒரு நாட்டோடு போர் செய்தும் அடங்காது, பல்வேறு நாட்டோடும் போர் செய்து தன் சினத்தைத் தணித்துக் கொண்டான் என பட்டினப்பாலை வாயிலாக உணர்த்தப்பட்டுள்ளன.

### 3.3.8. அட்டில் சாலைகள்

காவிரிப்பூம்பட்டினத்தில் ஏழை எளியவர்களுக்கு உணவு அளிக்கும் அட்டில் சாலைகள் இருந்ததாகப் பட்டினப்பாலை குறிப்பிடுகின்றது. அச்சாலைகளால் ஏழை மக்கள் பலர் பயனடைந்தார்கள். அதில் இடைவிடாது சோறு சமைக்கப்பட்ட வண்ணம் இருந்தார்கள். இச்சாலைகளில் ஆக்கிய சோற்றின் கொழுத்த கஞ்சியானது ஆறு போலப் பரந்து ஓடியதாக,

**“சோறு வாக்கிய கொழுங்கஞ்சி**

**யாறுபோல பரந்து ஒழுகி”**[55]

கடியலூர் உருத்திரங்கண்ணனார் விளக்குகின்றார். இதில் இடைவிடாது ஆக்கிய சோற்றுக் கஞ்சியானது ஆறாக ஓடுவதாக வருணித்துள்ளார். அவற்றை உண்ணச் செல்லும் காளைகள் தம்மோடு ஒன்றோடொன்று சண்டையிடுவதால் அவ்விடம் சேறாகி புழுதி பரந்து அப்புழுதி அரண்மனையில் படிவதால் அரண்மனை பார்ப்பதற்கு தீட்டப்பெற்ற ஓவியம் போல காணப்படுவதாக குறிப்பிடுகின்றார்.

### 3.3.9. அந்தபுரவருணனை

பாண்டியன் அன்றி, பிற ஆண்கள் அணுகாத மிகுந்த காவலை உடையதாக அந்தபுரம் அமைந்துள்ளது. இவ்வந்தப்புரத்தில் எழுந்த பல்வேறு ஓசைகளும் மலைகளில் எழுகின்ற ஓசையைப் போன்றிருந்தது. இவ்வந்தப்புரத்தின் தூண்கள் நீல மணியால் அமைக்கப்பட்டவை போன்று கருமையும் திரட்சியும் பெற்றிருந்ததாகவும், அதன் உயர்ந்த சுவர்கள்

செம்பினாற் செய்தாற் போன்ற பல வேலைபாடுகள் உடையனவாக இருந்ததை,

**"மணிகண் டன்ன மாத்திரள் திண்காழ்ச்**
**செம்பியன் றன்ன செய்வுறு நெடுஞ்சுவர்**
**உருவப்பல்பூ ஒருகொடி வளைஇ"**[56]

என்ற வரிகளில் கூறுகின்றார். சுவரின் பல இடங்களில் பல பூக்களையுடைய கொடிகள் விளங்கும்படி செஞ்சாந்தினால் எழுதப்பட்டிருப்பதாக இவ்வடிகள் சுட்டுகின்றன.

### 3.3.10. கட்டில் ஒப்பனைத்திறம்

தலைவி உறங்கும் கட்டில் முதிர்ந்த பழமையான கட்டிலாகும். அக்கட்டில் நாற்பது வயதுடைய போரிற் பொருதுபட்ட யானையின் கொம்பை வெட்டி செம்மையாக ஒத்தமைத்து தச்சன் உளியாலே இயற்றி இலைத் தொழிலை இடையிடையே அமைத்து பல நிற மயிர்களை (புலி முதலியவற்றின் வரி தோன்ற) உள்ளே வைத்து அவற்றின் மேலே சிங்கம் முதலியவற்றை வேட்டையாடுகின்ற வடிவாகச் செய்த தகடுகளை வைத்தும், முல்லை போன்ற பிற பூக்களை வைத்தும், சாளரங்களாகத் திறந்த வெளிகளை அணிகளால் தைத்தும் பல வேலைபாடுகள் நிறைந்ததாக அக்கட்டில் அமைந்திருந்தன.

**"மடைமாண் நுண்இழை பொலியத் தொடைமாண்டு**
**முத்துடைச் சாலோகம் நாற்றிக் குத்துறுத்து**
**புலிப்பொறிக் கொண்ட பூங்கேழ்த் தட்டத்துத்**
**தகடுகண் புதையக் கொளீஇத் துகள்தீர்ந்து**
**ஊட்டுறு பல்மயிர் வரைஇய வயமான்**
**வேட்டம் பொறித்து வியன்கண் கானத்து**
**முல்லைக் பல்போது உறழப் பூ நிரைத்து"**[57]

இவ்வரிகள் கட்டில் அழகுறும்படியாக முத்துக்களால் ஆன மாலையை வரிசையாகத் தொங்கவிட்டும், தகடுகளை வேய்ந்து அதன்மேல் சிங்கம் வேட்டையாடுதல் போன்றும், முல்லை முதலிய பல்வேறு மலர்களையும் ஓவியங்களாக வரைந்துள்ளனர் என்பதை குறிப்பிடுகின்றது.

### 3.3.11. பாசறைக் காட்சி

முல்லைப்பாட்டு பாசறையின் அமைப்பைத் துல்லியமாக வருணிக்கிறது. தலைவன் பகைமேற்போர்த் தொடுக்க பகைவர் நாட்டில் பாசறை அமைத்துத் தங்குகின்றான். அவன் தங்கும் பாசறை எவ்வாறு அமைத்துள்ளனர் என்பதை விரிவாக விளக்குகின்றார்.

**"கான்யாறு தழீஇய அகனெடும் புறவிற்**
**சேணாறு பிடவமொடு பைம்புத லெருக்கி**
**வேட்டப்புழை யருப்ப மாட்டிக்காட்ட**
**இடுமுட் புரிசை ஏமுற வளைஇப்**
**படுநீர்ப் புணரியிற் பரந்தபாடி"**[58]

அதாவது காட்டாறு சூழ்ந்த அகன்ற நெடிய காட்டிலே சேய்மையில் உள்ள பகைவரின் அரண்களையும் அழித்து, முள்வேலியாகிய மதிலினை அமைத்து அதனகத்தே கடல் போன்ற பரப்பினை உடையதாக அமைந்துள்ளதாக இவ்வரிகளில் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

### 3.3.12. தலைவியின் துன்ப நிலை

தலைவன் போர்க் காரணமாகத் தலைவியை விட்டுப் பிரிந்து, கார்காலத்தில் திரும்பி வருவதாக கூறிச் செல்கிறான். கார்காலம் தொடங்கிவிட்டது. ஆனால் தலைவன் வரவில்லை. அதனால் தலைவி ஆற்றாதவளாகி படும் துயரினை,

**"இன்றுயில் வதியுநற் காணாள் துயருழந்து**
**நெஞ்சாற்றுப் படுத்த நிறைதபு புலம்பொடு**
**நீடுநினைத்து தேற்றியும் ஓடுவளை திருத்தியும்**
**மையல்கொண்டு மொய்யென வுயிர்த்தும்**
**ஏவுறு மஞ்ஞையி னடுங்கி யிழை நெகிழ்ந்து"**[59]

என்ற முல்லைப்பாட்டு வரிகளில் ஆசிரியர் வருணித்துள்ளார். தலைவனைக் காணாத தலைவி தன்னைத்தானே தேற்றிக் கொண்டும், தன் கையில் இருந்து கழன்று விழும் வளையல்களைத் திருத்தியும், தலைவனை நினைத்து நினைத்து மயங்கியும், அணிகலன்களெல்லாம் கழன்று விழுமாறு நெகிழ்ந்து அம்பு தைத்த மயில்போல நடுங்கினாள் என வருணித்துள்ளதைக் காணமுடிகிறது.

### 3.3.13. தலைவன் வெற்றி பெற்று மீளுமிடத்து வழியிற்காணும் காட்சி

தலைவன் தலைவியை விட்டு பிரிந்து கார்காலத்தில் திரும்ப வருவதாக கூறிச் சென்றான். கார் காலமும் வந்தது. போரும் நிறைவுற்றது. அப்போரில் பகைவரை வென்று வெற்றி பெற்று வெற்றிக் கொடியை உயர்த்தினான். பின் அவன் திரும்பி வரும் காட்டு வழியிலே பல்வேறு மலர்கள் அழகாக மலர்ந்துள்ளதாக குறிப்பிடுகின்றார்.

**"செறியிலைக் காயா அஞ்சண மலர**
**முறியிணர்க் கொன்றை நன்பொன் காலக்**
**கோடல் குவிமுகை அங்கை அவிமத்**
**தோடர் தோன்றி குருதி பூப்பக்**
**கான நந்திய செந்நிலப் பெருவழி**
**வானம் வாய்த்த வாங்குகதிர் வரகின்**
**திரிமருப் பிரலையொடு மடமானுகள"**[60]

இம்முல்லைப்பாட்டு தலைவன் வரும் வழியில் நுண் மணிலிலே காயா கரிய பூக்களையும், கொன்றை பொன்னிற மலர்களையும், வெண்காந்தள் மலர் உள்ளங் கைப்போல் விரிந்து நிற்கும் காட்சியையும், ஆண் மான்கள் பெண் மான்களோடு விளையாடுகின்ற அழகிய காட்சியையும் தலைவன் காண்பதாக குறிப்பிடுகின்றது.

## 3.4. தொகுப்புரை

- ❖ இயற்கையை வருணிப்பதில் வல்ல சான்றோர்கள் இயற்கையின் எழிலைக்கண்டு மயங்கி அவர்கள் பாட எண்ணிய பொருள்களுக்கு இயற்கையை உவமையாக வைத்து பாடியுள்ளனர். அதாவது மலையின் எழிலான தோற்றம், இடியோடு கூடிய மழை பொழியும் காட்சி, மரம், செடி, கொடிகள், விலங்குகள், மக்கள் போன்ற பலவற்றையும் இயற்கையோடு இயைத்து தம் பாடலில் புகுத்தியதை இலக்கியங்கள் சுட்டுகின்றன.

- ❖ மிகுதியாக மழைப்பெய்து பின் சிறுசிறு துளிகளை மெல்லத் தூவுகின்ற காட்சியானது, வானைப் பிளந்து கொண்டு வெண்மையான முத்துக்கள் உதிர்வதைப் போன்று மழைப் பெய்வதாக நக்கீரர் அழகாக வருணித்துள்ளமையைச் சுட்டப்பட்டுள்ளன.

- ❖ இடைவிடாது பெய்த மழையால் பறவைகளும் விலங்குகளும் குளிரால் நடுங்கியதையும் சிறப்பாக வருணித்துள்ளார். குளிர் மிகுதியால்

பறவைகள் இரைத்தேடி வெளியே செல்ல இயலாமல் தவித்து தம் பெடையோடு இரவும் பகலும் மயங்கி, கால்களை மாற்றி மாற்றி நின்று கொண்டிருந்தன என்று மழையின் தன்மையையும் நாட்டின் வளமையையும் குறிப்பிடப்பட்டுள்ளன.

- ❖ கூதிர் காலத்தில் பெய்த மிக்க மழையால் மக்கள் மிகவும் குளிரால் நடுங்கினர். ஆதலால் சங்ககால மகளிர்கள் தாம் நாள்தோறும் அணியும் பல வகையான அணிகலன்களை அணிந்து கொள்ளாமலும் மங்கலம் என்று கருதிய ஒருசில மலர்களை மட்டுமே சூடிக்கொண்டதை நெடுநல்வாடை வாயிலாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

- ❖ தமிழர்களின் வாழ்வில் மலர்கள் சிறந்த இடம் பெற்றுள்ளன. இம்மலர்கள் மங்கலப்பொருளாகவும், வழிப்பாட்டுப் பொருளாகவும் வாழ்வில் பயன்படுத்தப்பட்டு வருகின்றது. இம்மங்கலப் பொருளான மலர் இல்லையென்றால் வாழ்வின் நிகழ்ச்சிகள் நிறைவுறுவதில்லை. அதனால் தான் இலக்கியப் புலவர்கள் பல இடங்களில் பல நோக்கங்களில் மலர்களை வருணித்துள்ளதை பத்துப்பாட்டில் அறியமுடிகிறது.

- ❖ கடற்கரையோரங்களில் காணப்படும் அடும்பின் வடிவினை குதிரையின் கழுத்தில் கட்டப்பட்டிருக்கும் மணிக்கு ஒப்புமைப்படுத்தி பட்டினப் பாலையும், அதிரல் எனப்படும் மோசி மல்லிகையின் மொட்டுக்களை குயிலின் மூக்கிற்கும், காட்டுப் பூனையின் கூரிய பல்லிற்கும் ஒப்புமைபடுத்தி முல்லைப்பாட்டும், காந்தள் மலர் போன்று பெண்கள் தன் கைகளை குவித்து வணங்குவதாக பட்டினப்பாலையும், காயா மலரின் நிறத்தினை மயிலுக்கு உவமையாக வருணித்தும், கொன்றையின் ஒளியினை பொன்னின் ஒளியுடன் ஒப்பிட்டு முல்லைப்பாட்டும் வருணிப்பதை தொகுத்துரைக்கப்பட்டுள்ளன.

- ❖ மேலும் தாழையின் வடிவத்தை யானையின் கொம்புக்கும், தோன்றிப்பூவின் நிறமானது இரத்தம் போன்று காட்சியளிப்பதாக முல்லைப்பாட்டும், பித்திகத்தின் நிறம் பொன் போல் காணப்படுவதாக நெடுநல்வாடையும், முல்லையின் இதழினை வாயிற்கும் ஒப்புமைப்படுத்தி வருணிப்பதை இலக்கியங்கள் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

- நெற்பயிர்களிலிருந்து முற்றிய நெல்மணிகள் தலைசாய்வது பார்ப்பதற்கு தலை சாய்ந்து வணங்குவதாக கபிலர் சுவைபட வருணித்துள்ளமைக் கூறப்பட்டுள்ளன.

- தலைவியின் கண்கள் மானின் கண்ணிற்கு உவமையாகவும், கண்ணின் குளிர்ச்சியை குவளை மலருக்கு ஒப்பாகவும் கபிலரின் குறிஞ்சிப்பாட்டில் வருணிக்கப்பட்டுள்ளது.

- கானவர்கள் யானையை விரட்டுவதனால் யானை வருகின்ற அக்காட்சியானது, கார் காலத்தில் மழை பொழியும் போது இடிக்கும் இடியோசை போலவும், பின் மரங்களை ஒடித்து எறிந்த பித்தேரிய யானை கூற்றுவனின் தூதுவனைப்போல வருவதாகவும் குறிஞ்சிப்பாட்டு குறிப்பிடுகின்றது.

- மழைத்துளியையே உணவாக உட்கொள்கின்ற வானம்பாடியே மழைத்துளியைப் பெறாது, புலம்பும்படி வானம் மழைப் பெய்யாது பொய்ப்பினும் காவிரியிடத்தில் நீர்வளம் வற்றாது என காவிரியின் வளத்தினை பட்டினப்பாலை அழகாக வருணிக்கின்றது.

- காவிரிப்பூம்பட்டினத்தில் மக்கள் பயன்பெறும் வகையில் அட்டில் சாலைகள் அமைக்கப்பட்டிருந்தன. அச்சாலைகளில் ஆக்கிய சோற்றின் கொளுத்த கஞ்சியானது ஆறுபோல ஓடியதாகவும், அங்குள்ள காளைகள் ஒன்றோடொன்று சண்டையிடுவதால் அவ்விடம் சேறாகி புழுதி பரந்து அப்புழுதி அரண்மனையில் படிவதால் அரண்மனை பார்ப்பதற்கு தீட்டப்பட்ட ஓவியம் போல காணப்படுவதாகவும் பட்டினப்பாலை குறிப்பிடுகின்றது.

- தலைவன் போர்க் காரணமாகத் தலைவியை விட்டுப்பிரிந்து சென்றான். குறித்த கார்காலம் வந்தும் தலைவன் திரும்பி வராமையால் தலைவி தன்னைத்தானே தேற்றிக் கொண்டும், அணிகலன்களெல்லாம் கழன்று விழுமாறு நெகிழ்ந்து அம்பு தைத்த மயில் போல நடுங்கினாள் என தலைவியின் நிலையை முல்லைப்பாட்டு அழகாக வருணித்துள்ளதை எடுத்துக்கூறுப்பட்டுள்ளன.

இவ்வியலில் சங்கச் சான்றோர்கள் தாம் இயற்றிய செய்யுள்களில் இயற்கை, பறவைகள், விலங்குகள், மனிதன் மற்றும் பல நிகழ்வுகளை மிகவும் அழகாக சுவைபட வருணனை செய்துள்ளமையை அறிய முடிகிறது.

# பின்குறிப்புகள்

1. வரதராசன். மு, பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப. 10.
2. சோமசுந்தரனார். பொ. வே, நெடுநல்வாடை, பா.அடி. 73-74.
3. மேலது, குறிஞ்சிப், பா.அடி. 187-194.
4. செயபால். இரா (உ.ஆ), அகம், பா. 2.
5. சோமசுந்தரனார். பொ. வே, பத்துப்பாட்டு, நெடுநல்வாடை, பா. அடி. 19-20.
6. சோமசுந்தரனார். பொ. வே, குறிஞ்சிப்பாட்டு, பா. அடி. 47-53.
7. மேலது, பா. அடி.54-61.
8. ஔவை நிர்மலா, அணுத்துளி, ப. 28.
9. சோமசுந்தரனார். பொ. வே, நெடுநல்வாடை, பா. அடி. 3-4.
10. மேலது, பா.அடி, 9-10.
11. திருநாவுக்கரசு. சி, கம்ப. கார், பா. 79.
12. சோமசுந்தரனார். பொ. வே, நெடுநல்வாடை, பா.அடி. 45-48.
13. சாமிநாதையர். உ. வே, (ப.ஆ), பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கினியருரையும், பா.அடி. 67-70.
14. சோமசுந்தரனார். பொ. வே, நெடுநல்வாடை, பா.அடி. 51-54.
15. மேலது, பா.அடி. 57-59.
16. நடராசன். பி. ரா, பத்துப்பாட்டு, முல்லைப்பாட்டு, பா.அடி. 6.
17. வெற்றிச்செல்வன், தமிழ் இலக்கியத்தில் மலர்கள், ப. 24.
18. புலியூர்க்கேசிகன் (உ.ஆ), சிலம்பு, அழற்படுகாதை, பா.அடி. 93-94.
19. சுப்பிரநாயகரவர்கள். சூ, பெரியபுராணம், பா. 1036.
20. வெற்றிச்செல்வன், தமிழ் இலக்கியத்தில் மலர்கள், ப. 24.
21. சோமசுந்தரனார். பொ. வே, குறிஞ்சிப்பாட்டு, பா. அடி. 113-114.
22. மேலது, பா.அடி. 61-95.
23. மேலது, பட்டினப்பாலை, பா.அ. 65.
24. மேலது, முல்லைப்பாட்டு, பா.அ.51.
25. சோமசுந்தரனார். பொ. வே, பட்டினப்பாலை, பா.அ. 66.
26. மேலது, குறிஞ்சிப்பாட்டு, பா.அ. 223.
27. மேலது, பட்டினப்பாலை, பா.அ. 153.
28. பாலசுப்பிரமணியன். கு.வெ, நற்றிணை, பா. 14.
29. தாணம்மாள். இல, சங்க இலக்கியத்தில் மலர்கள், ப. 28.
30. சோமசுந்தரனார். பொ. வே, முல்லைப்பாட்டு, பா. அ. 93.
31. நாராயணப்பிள்ளை. எம், பத்துப்பாட்டு (2), பட்டினப்பாலை, பா. அ. 24.

32. மேலது, நெடுநல்வாடை, பா.அ. 83.
33. சோமசுந்தரனார். பொ. வே, முல்லைப்பாட்டு, பா.அ. 94.
34. இராகவையங்கார். இரா, பட்டினப்பாலை ஆராய்ச்சி, பா.அ. 81.
35. சோமசுந்தரனார். பொ. வே, முல்லைப்பாட்டு, பா.அ. 96.
36. மேலது, நெடுநல்வாடை, பா.அடி. 40-42.
37. மேலது, பா.அ. 14.
38. சோமசுந்தரனார். பொ. வே, பட்டினப்பாலை, பா.அ. 235.
39. மேலது, குறிஞ்சிப்பாட்டு, பா.அ. 115.
40. பாலசுப்பிரமணியன். கு.வெ, நற்றிணை, பா. 69.
41. மோகன். இரா, பத்துப்பாட்டு நெடுநல்வாடை, பா. அடி. 14-14.
42. மேலது, பா.அ. 22.
43. மேலது, குறிஞ்சிப்பாட்டு, பா.அடி. 107-112.
44. நாராயணவேலுப்பிள்ளை. எம், பத்துப்பாட்டு – 2, குறிஞ்சிப்பாட்டு, பா.அ. 117-122.
45. மேலது, 123-127.
46. மேலது, 130-141.
47. மேலது, 40-45.
48. மேலது, 161-165.
49. மேலது, 166-174.
50. மேலது, 128-132.
51. சோமசுந்தரனார். பொ. வே, பட்டினப்பாலை, பா.அடி. 1-7.
52. மாணிக்கவாசகன், புறம், பா. 35: 7-8.
53. புலியூர்கேசிகன் (உ.ஆ), சிலம்பு, பா. 10: 102-8.
54. நடராசன். பி.ரா, பத்துப்பாட்டு, பட்டினப்பாலை, பா.அடி. 274-277.
55. மேலது, 44-45.
56. சோமசுந்தரனார். பொ.வே, நெடுநல்வாடை, பா.அடி. 111-113.
57. மேலது, 124-130.
58. மேலது, முல்லைப்பாட்டு, பா.அடி. 24-28.
59. மேலது, 80-84.
60. மேலது, 93-99.

# இயல் – 4

## பாடுபொருளும் பாடல் அமைப்பும்

**தலைப்பு** **பக்க எண்**

# இயல் – 4

# பாடுபொருளும் பாடல் அமைப்பும்

சங்கப்பாடல்கள் தமிழிலக்கியப் பேழை. உண்மை நிறைந்த கருவூலம். இவை கருத்து வளமும் கற்பனைச் சிறப்பும் பொருந்திய அழகான பாடல்கள் பலவற்றைப் பெற்று மிளிர்கின்றன. ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பு தமிழர் வாழ்ந்த வாழ்க்கையின் சிறப்புகளை விளக்கிக் கூறுவதாக இச்சங்கப் பாடல்கள் அமைந்துள்ளன. இவை புறத்தே தோன்றும் காட்சிகளையும், அகத்தே தோன்றும் கருத்துகளையும் புனைந்து நிற்கும் அழியாத அழகு நிறைந்த ஓவியங்களாகும். அவற்றை நவிலுந்தோறும் இன்பம் தருபவையாக உள்ளன. இவ்வகையான மிகச்சிறந்த பாடல்களை மிகவும் நயமாக எடுத்துரைப்பதில் வல்லவர்கள் சங்கப்புலவர்கள் என்பதில் ஐயமில்லை. அச்சங்கப் புலவர்கள் பாடிய பாடல்களின் அமைப்பு முறை பற்றியும், அப்பாடல்களில் அவர்கள் எவற்றையெல்லாம் பாடுபொருளாக வைத்துப் பாடியுள்ளனர் என்பதையும் இவ்வியல் விரிவாக எடுத்துரைக்கிறது.

## 4.1 அமைப்பு முறைகள் - பாடலும் பாடுபொருளும்

ஒவ்வொரு பாடலுக்கும் மிகவும் இன்றியமையாததாகக் கருதப்படுவது அதன் அமைப்பு முறையேயாகும். புலவர்கள் தாம் பாடும் பாடலின் அமைப்பு முறையை பாங்குடன் அமைத்துத் தெளிவாக கருத்துக்களை எடுத்தியம்பியுள்ளனர். இவ்வமைப்பு முறைகள் அனைவராலும் புரிந்து கொள்ளும் வகையில் உள்ளன. அவ்வகையில் சிறப்புடன் எழுந்ததே பத்துப்பாட்டும் எட்டுத்தொகையுமாகும். அவ்வகையில் பாடும் பாடல்களுக்கு அதன் கருத்தே மிகவும் இன்றியமையாதது. ஒரு புலவன் ஒரு பாடலைப் பாடுவதற்கு முன்னர் எதைப்பற்றி பாடவேண்டும் என்பதை கருத்தில் கொள்ள வேண்டும். பின் பாடப்படும் பாடல்கள் பொருள் நிறைந்ததாகவும் அவர்தம் உணர்வினை வெளிப்படுத்துவதாகவும், பண்பாடுகளைப் பிரதிபலிப்பதாகவும், வரலாற்று நிகழ்வுகளை எடுத்துக் கூறுவதாகவும் அனைத்திற்கும் மேலாக அனைவராலும் ஏற்றுக்கொள்ளக் கூடியதாகவும் இருக்க வேண்டும். இதன் அடிப்படையில் அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு பொருள்கள் பற்றிக் கூறப்பட்டதே இலக்கியங்களாகும். இவ்விலக்கியங்கள் பெரும்பாலும் காதலையும் வீரத்தையுமே இரு கண்களாகக் கருதிப் பாடப்பட்டுள்ளன.

“மனிதனின் படைப்புகளில் இலக்கியம் மிகவும் சக்தி வாய்ந்தது. மனித குலத்தில் தானும் ஒருவனாய் வாழும் மனிதன் வாழ்க்கை நடைமுறைகளின் காரணமாக அமையும் உணர்வு நிலையின் ஒரு வெளிப்பாடாக இலக்கியத்தை ஒரு கவிஞன் தோற்றுவிக்கிறான்.”[1] என்று எல்.கே.அக்னிபுத்ரன் கூறுகிறார். இலக்கியங்கள் மனிதனை நல்வழிபடுத்தக் கூடிய ஒரு சிறந்த கருவியாகவும் அமைகின்றன. “ஒரு சமுதாயத்தின் விருப்பு, வெறுப்பு, நம்பிக்கை முதலியவற்றை வளர்த்துப் பண்படுத்துவது அந்த சமுதாயத்தின் இலக்கியங்களே. ஆகையால் இலக்கிய வடிவில் மனித வாழ்வைப் பெரிதும் மாற்றியமைப்பது கவிதைகளே”[2] என்று மு.வரதராசன் குறிப்பிடுகிறார். இலக்கியம் என்ற சொல்லின் விளக்கத்தை வெ. இராமலிங்கம்,“இலக்கியம் என்ற சொல் “இலட்சியம்” என்னும் சொல்லின் திரிபாகும். இலட்சியம் என்ற பதம் லஷியம் என்ற வடமொழி பதத்தின் தமிழ் உச்சரிப்பாகும். ஷ என்னும் எழுத்து தமிழில் இல்லை. அதற்காக ‘ஷ’ என்ற எழுத்துக்கு ‘க்கு’ என்ற இரண்டு எழுத்துக்களும் சேர்த்து போலியாக உபயோகிக்கப்படுகின்றன. ஆதலால் ‘லக்கியம்’ என்று மாறியது. தமிழ்இலக்கண வழக்கின் படி ‘ல’ என்னும் எழுத்து மொழிக்கு முதலில் வராது. அதனால் லக்கியம் என்பது இலக்கியம் என உருவாகியது”[3] என்று குறிப்பிடுகின்றார்.

மேலும், “இலக்கியம் என்பது கற்பனையால் விளையும் பாடுபொருளை உடையது. உள்ளடக்கம் யதார்த்தப் பொருண்மையிலிருந்தும், அன்றாட நடைமுறைப் பயன்பாட்டிலிருந்தும் விலகியிருக்கும் பாங்கின. இலக்கியம் என்பது ஓர் உருவாக்கம் படைக்கப்படுவதே பாடுபொருளாகும்”[4] என்று அ.அ.மணவாளன் கூறுவது இங்கு ஒப்பு நோக்கத்தக்கதாக அமைகின்றன. “பாடுபொருள் போக்கைப் பொறுத்த அளவில் இன்றையத் தமிழ் இலக்கியங்கள் சமுதாய உணர்வையே பெரிதும் பேசுகின்றன”[5] என்று முல்லை வி.சண்முகம் கூறுகின்றார். இலக்கியங்கள் மக்களுக்குரியனவாகவே படைக்கப்பட்டுள்ளன என்பதையும், அவ்வகை இலக்கியங்கள் சிறந்த பாடுபொருளைக் கொண்டே படைக்கப்பட்டுள்ளமையையும் உணர்த்துகின்றன.

## 4.2 பாடுபொருள் கட்டமைப்பு

ஒரு பாடலுக்கு எந்த அளவுக்கு பாடுபொருள் இன்றியமையாததோ, அதனைவிட இன்றியமையாதது அதன் அமைப்பு முறையாகும். புலவர்கள் பாடலை, இயற்றும் போது தொடர்ச்சியாக இல்லாமல் இடங்களுக்கு ஏற்ப பொருள் அமைத்து சிறந்த முறையில் பாடப்பட்டுள்ளதால் அது அனைவரின் உள்ளத்தையும் கவரும் இலக்கியங்களாக மாறியுள்ளன. சமுதாய நடவடிக்கைகளால் நிறைவு செய்ய முடியாத மனிதனின் தேவைகளை இலக்கியங்கள் நிறைவு செய்கின்றன.

இலக்கியம் கையாளும் மொழி நடைமுறையில் கையாளப்படும் மொழியிலிருந்து மாறுபடுகிறது. இலக்கியங்கள் காட்டும் பொருள்கள் நடைமுறையில் மொழி அறிவுறுத்தும் பொருளிலிருந்து வேறுபடுகின்றன. நடைமுறை மொழி சமுதாய நடவடிக்கையை மையமாகக் கொண்டு பயன்படுத்தப்படுகின்றன. ஆனால் சமுதாய நடவடிக்கைகளால் நிறைவு செய்ய முடியாத மனிதனின் தேவைகளை கலையும் சமயமும் நிறைவு செய்கின்றன என்பதை இலக்கியங்கள் உணர்த்துகின்றன. இலக்கியத்தில் அமைந்துள்ள பாடுபொருள்களின் தன்மையைப் பல்வேறு புலவர்கள் பலவாறாக குறிப்பிட்டுள்ளமையை இங்கு காணமுடிகிறது.

“ரஷ்ய கோட்பாட்டாளர்கள் கருத்தில் இலக்கியத்தின் பாடுபொருள் அல்லது உள்ளடக்கம் அவ்வளவாக இன்றியமையாததன்று. வடிவத்திற்காகவோ, சில உத்திகளைப் பயன்படுத்துவதற்காகவோ பொருத்தமான பாடுபொருளைக் கவிஞர்கள் தேர்ந்தெடுத்துக் கொள்கின்றனர். இலக்கியம் பாடுபொருளால் சிறப்படைவதில்லை. உத்தியால் மட்டுமே இலக்கியத்தின் தன்மை (Literariness) உருவாகிறது”[6] என்று இவர்கள் கருதுகின்றனர் என அ.அ.மணவாளன் குறிப்பிடுகின்றார். நாடகம் (அல்லது) கவிதை (அல்லது) பாடல் ஒவ்வொன்றும் தனித்தனிக் கட்டமைப்பைக் கொண்டதாக அமைந்துள்ளன. அவ்வகையில், “நாடகம் (அல்லது) கவிதை (அல்லது) பாடல் ஒவ்வொன்றும் தொடக்கம், நடுவு, முடிவு என்ற மூன்று பகுதிகளை உடையதாக இருக்கவேண்டுமென்று”[7] ச.அகத்தியலிங்கம் கூறுகின்றார். இவற்றிலிருந்து சங்க இலக்கியம் சிறந்த பாடுபொருளை உடையதோடு மட்டுமின்றி சிறந்த அமைப்பை உடையதாகக் காணப்படுவதை அறிய முடிகின்றது.

## 4.3 பாடல் அமைப்பு முறைகள்

சங்க இலக்கியப் பாடல்கள் ஒவ்வொன்றும் தனித்தனி அமைப்பை உடையதாகக் காணப்படுகின்றன. இவ்வமைப்பு முறை பாடலின் பொருளை மக்களின் உள்ளத்தில் நிலைநாட்டுவதற்காகவும், எளிமையாக புரிந்து கொள்வதற்கும் உதவுகின்றன. இங்கு பத்துப்பாட்டு நூல்களான முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை போன்ற ஐந்து பாடல்களின் அமைப்பு முறையை தெளிவாகக் கட்டமைக்கப்பட்டுள்ளன.

## 4.4 முல்லைப்பாட்டின் அமைப்பு

முல்லையின் உரிப்பொருள் இருத்தலும் இருத்தலுமாகிய நிமித்தங்களாகும். அன்பாலே ஒத்த தலைவனும் தலைவியுமாகிய இருவரும் உள்ளமொத்துக் கூடி இல்லறம் நடத்துகின்ற நாள்களிலே, தலைவன் தன் இன்றியமையாக் கடமையாய் தம் இல்லறம் இனிதே நடத்துவதற்கு ஏதுவாய் உள்ள பொருட்பேற்றிற்காக தன் அன்புடை மனையாளைப் பிரிந்து செல்லுதல் உலகியல்பாகும். இவ்வியல்போடொத்துத் தன் பகைவரொடு போர் செய்யக் கருதிப் புறப்படுகின்ற தலைவன் தன் மனைவியை நோக்கி, இனிதாகத் தான் பிரிந்து செல்ல வேண்டிய தன் இன்றியமையாமையை நயமாக எடுத்துக்கூறி, யான் இத்துணைநாளில் மீண்டும் வருவேன், அதுவரையில் ஆற்றியிருத்தல் நின்கடமை என்று கூறி பிரிந்து சென்றான். அவ்வாறு அத்தலைவன் வினைமேற் சென்ற காலம் முதுவேனிற் பருவமாகும். அவன் மீண்டு வருவதாகக் கூறிச் சென்ற காலம் முதுவேனிற் காலத்தின் இறுதியும், கார்காலத் தொடக்கமுமாகிய ஆவணித் திங்களின் முதல் நாளாகும்.

மக்களின் மனவியல்பை நுண்ணிதின் உணர்ந்த சான்றோர் பிரிவாற்றாமையால் எழுகடல் போன்ற தன் வருத்தத்தைக் கணவன் ‘ஆற்றியிரு’ எனத் தனக்கிட்ட கட்டளையை எண்ணியும், கணவன் சொல்திறத்தின் திண்மையே தன் உயிரினும் சிறந்த கற்பாதலை நினைந்தும், நெடிய அம்முதுவேனிற் பருவத்தை ஒருவாறு கழித்து தலைவி ஆற்றிருந்தாள். இதுவே முல்லை ஒழுக்கமாகும். இதனைச் சான்றோர் ‘இல்லிருத்தல் முல்லை’ என்று போற்றினர். இவ்வகையான அக இலக்கியத்தைப் பற்றி ராதா,

“அக இலக்கியம் தலைவன் தலைவியரிடையே காணப்படும் காதல் உணர்வை, அதன் மிகப்பெரும் பரிமாணத்தை, அதன் தெய்வீகத்

தன்மையை அதனால் ஏற்படும் பல்வேறு உள்ளுணர்வுகளை, மாற்றத்தை, மனப்போக்கினை, அதனால் உண்டாகும் பல்வேறு விளைவுகளைக் குறிக்கோளுடன் எடுத்துரைக்கின்றன”[8] என்று கூறுகிறார். அதாவது பெண்ணின் உணர்வினை வெளிக்காட்டுவதாக முல்லைப்பாட்டு அமைந்துள்ளது. இப்பாட்டு 103 அடிகளைக் கொண்டு சிறந்த முறையில் கட்டமைக்கப்பட்டுள்ளன.

- ❖ 1 முதல் 23 வரையிலான அடிகளில் தலைவியின் நிலை கூறப்பட்டுள்ளது. (இதில் செவிலியர், தோழியர் ஆறுதல் கூறவும் தலைவி ஆற்றாதவளாகிறாள்)
- ❖ 24 முதல் 79 அடிகள் ஒரே தொடராக அமைந்து தலைவன் பாசறையில் இருக்கும் நிலை சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.
- ❖ 80 முதல் 89 வரையிலான அடிகளில் மீண்டும் தலைவியின் நிலை கூறப்பட்டுள்ளது.
- ❖ மேலும் 90 முதல் 103 அடிகள் ஒரே தொடராக அமைந்து மீண்டும் தலைவனின் நிலை கூறப்பட்டுள்ளது. (இதில் கார்காலத்திற்குப் பிறகு கூதிர் காலத்தில் தலைவன் திரும்புவதும், அங்ஙனம் திரும்பும்போது அவனது தேரில் பூட்டிய குதிரையின் கழுத்து மணிகளே அங்ஙனம் ஒலித்தன என்பதும் உணர்த்தப்படுகின்றன).

### 4.4.1 தலைவியின் நிலை

கார்காலத்தில் வருவதாகக் கூறிச் சென்ற தலைவன் கார்காலம் வந்தும் வரவில்லை. அதனால் தலைவி வருத்தமுற்று இருந்தாள். அவளின் ஆற்றாமையைக் கண்ட செவிலித் தாயார் வாய்ப்புள் கேட்டு நின் தலைவர் விரைவில் வந்துவிடுவர் என்று கூறி அதுவரையில் ஆற்றியிருத்தல் வேண்டும் என்று தேற்றலும் பின் தலைவியின் நிலையும் கூறப்பட்டுள்ளது.

### 4.4.2 முதுபெண்டிரின் தேற்றமொழிகள்

தலைவன் வராமையால் ஆற்றாத தலைவி கண்களில் நீர் வழிய வருந்தி நின்றாள். அதைக் கண்ட பெண்டிர்கள் நாங்கள் நற்சொற்கள் கேட்டதனாலும், தலைவன் போர்மேற் சென்ற காலத்தே நல்லோர் கேட்ட வாய்ப்புள் நல்லனவாக அமைந்ததாலும் தலைவன் பகைவரை வென்று, அவர்பாற் பெற்றத் திறைப்பொருளுடனே இப்பொழுதே வந்து விடுதல் உறுதி. ஆகையால் நீ உன் மனத்தடுமாற்றத்தால் உற்ற வருத்தத்தைப் போக்கி

ஆற்றியிருந்திடுக! எனப் பன்முறை கூறித் தலைவியைத் தேற்ற முயன்றனர். இருப்பினும் தலைவியின் பூப்போலுங் கண்கள் தனித்து விழுகின்ற முத்துப்போலும் துளியை சிந்தின என்பதை,

**"பருவர லெவ்வங் களைமா யோயெனக்**
**காட்டவுங் காட்டவுங் காணாள் கலுழ்சிறந்து**
**பூப்போ லுண்கண் புலம்புமுத் தலைவியின்"[9]**

என்ற அடிகள் குறிப்பிடுகின்றன. இதில் தலைவியின் பிரிவாற்றாமையை சிறப்பாக குறிப்பிடப்பட்டுள்ளது. இதில் முல்லையின் உரிப்பொருளாகிய இருத்தலாகிய ஒழுக்கமும், முதுபெண்டிரின் விரிச்சி கேட்கும் வழக்கமும் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.

### 4.4.3 பாசறை அமைப்பு

பாசறையில் உள்ள தலைவனின் நிலையை 55 அடிகளில் ஆசிரியர் விளக்கியுள்ளார். காட்டாறுகள் சூழ்ந்த நெடிய அகன்ற காட்டில் சேய்மையிலுள்ள மணக்கின்ற பிடவம் பூவோடு ஏனைய பசிய செடிகளையும் அழித்து, இடுமுள் வேலியாகிய மதிலினை அமைத்து அதனகத்தே கடல்போன்ற பரப்புடையதாக அகன்ற பாசறை அமைக்கப்பட்டது. அப்பாசறையை 'வேனிற்பாசறை' என்றும் கூறுவர். இவ்வேனிற் பாசறையேயன்றி கூதிர்ப் பாசறையும் உண்டு. இதனைத் தொல்காப்பியம்,

**"கூதிர் வேனில் என்றிரு பாசறைக்**
**காதலி னொன்றிக் கண்ணிய மரபினும்"[10]**

என்ற நூற்பா வழியாக வலியுறுத்தியுள்ளார். இதில் பண்டைக் காலத்தில் அரசர்கள் போர் செய்வதற்குக் கூதிர்ப் பருவமும் வேனிற் பருவமுமே ஏற்றது எனக் கொண்டு, அப்பருவங்களிலே போர் மேற்கொள்ளுதலும், எஞ்சிய பருவங்களில் போரொழிந்து இருத்தலும் வழக்கம் என்பதையும் உணர்த்துகின்றன. மேலும் பாசறையைச் சுற்றி முள்வேலி அமைக்கும் வழக்கம் இருந்தமையும், படை முழுவதும் அமைக்க கடல் போன்ற பாசறை அமைக்கப்பட்டன என்பதும் புலனாகிறது.

### 4.4.4 மறவர்க்குரிய அரண்கள்

துகிலைக் காவிநிறந்தோய்த்து உடுத்த தவவேடமுடையவனும், முக்கோல் உடையவனுமாகிய அந்தணன் அம்முக்கோலை நட்டு, அவ்வுடையினை அதன்மேலிட்டு வைத்த தன்மையைப் போன்று, அற

நெறியால் தாம் செய்கின்ற போரில் புறமுதுகிட்டு ஓடாமல் வலிமையான வில்லைச் சேர ஊன்றி, அவற்றின் மேல் துணிகளைத் தொங்கவிட்டனர். பின் கூடாரமாக கால்களை நட்டு வலித்து கட்டி படைகளை வரிசையாக பிணைத்து நிறுத்தப்பட்ட பல படைகளின் நடுவே மறவர்களுக்கு அரண்கள் அமைக்கப்பட்டதை (முல்லைப்பாட்டு 37-43) குறிப்பிடுகின்றது. இம்முக்கோல் அந்தணர்குரியதாதலை,

**“நூலே கரகம் முக்கோல் மணையே**

**ஆயுங்காலை அந்தணர்க் குரிய”[11]**

என வரும் தொல்காப்பியத்தாலும்,

**“எறித்தரு கதிர்தாங்கி யேந்திய குடைநீழல்**

**உறித்தாழ்ந்த கரகமும் உரைசான்ற முக்கோலும்”[12]**

என்ற கலித்தொகைப் பாடலால் குறிப்பிடப்பட்டுள்ளன. மேலும், படைகளின் நடுவே மறவர்களுக்கு அரண்கள் அமைக்கும் வழக்கத்தை,

**“வைந்நுதி மழுங்கிய புலவுவாய் எ.்.கம்**

**வடிமணிப் பலகையொரு நிறைஇ முடிநாட்**

**சாபஞ் சார்த்திய கணை துஞ்சு வியன்கர்”[13]**

என்ற அடிகளால் அறியமுடிகிறது. அதாவது பண்டைக் காலத்தில் பாசறையில் மன்னன் வீரர்கள் போன்றோர் தங்குதற்கு அரண்கள் அமைக்கப்பட்டமையை முல்லைப்பாட்டு எடுத்துரைக்கின்றன.

### 4.4.5 நாழிகைக் கணக்கர்

பாசறையில், மன்னன், மறவர், படைகள் மட்டுமின்றி நாழிகைக் கணக்கரும் இருந்ததாக முல்லைப்பாட்டு குறிப்பிடுகிறது.

**“பொழுதளந் தறியும் பொய்யா மாக்கள்**

**தொழுது காண்கையர் தோன்ற வாழ்த்தி**

**எறிநீர் வையகம் வெலீஇய செல்வோய்நின்**

**குறுநீர்க் கன்னல் இணைத்தென் றிசைப்ப”[14]**

நாழிகையை அளந்து இத்துணை என்று அறியும் பொய்தலில்லாத நாழிகைக் கணக்கர்கள் மன்னனைக் கையால் தொழுதபடியே கண்டு வாழ்த்தி கடல் சூழ்ந்த உலகத்தில் பகைவரை வெல்லச் செல்கின்றவனே! உன்னுடைய நாழிகை வட்டிலிற் சென்ற நாழிகை இத்துணையென்று கூறுவதற்கு அரசனின்

பாசறையில் நாழிகைக் கணக்கர்கள் இருந்தனர். சங்க காலத்தில் பொழுதறிந்து கூறக்கூடிய நாழிகைக் கணக்கரும் அதனை அறியும் கருவியாகிய நாழிகை வட்டிலும் இருந்துள்ளமையை,

**"குறுநீர்க் கன்னல் எண்ணுந லல்லது**

**கதிர்மருங் கறியா தஞ்சுவரப் பாஅய்"[15]**

என்றும்,

**"நாழிகைக் கணக்கர்"[16]**

என்று வருதலாலும் அறிய முடிகின்றது. தற்காலத்தில் சோதிடர் இருப்பதைப் போல, பழங்காலத்தில் பொழுதை அளந்து கூற நாழிகைக் கணக்கர் இருந்தமையை இவை எடுத்துரைக்கின்றன.

### 4.4.6 வேந்தனின் மனநிலை

வேந்தனின் மனநிலையை முல்லைப்பாட்டு (67-80) மிக அழகாகக் சுட்டிக்காட்டுகிறது. வேந்தன் பகைவர் மேல் கொண்ட போர் விருப்பத்தால் உறக்கம் கொள்ளாமல் முன்னாட்களில் பாசறையில் நடந்த நிகழ்வுகளை நினைத்து வருத்தம் கொண்டான். பின் அவன் வெற்றியை உண்டாக்கிய மறவரை நினைத்தும், அம்புகளை எய்தமையால், புல்லுண்ணாமல் செவிகளைச் சாய்த்து நிற்கும் குதிரைகளை நினைத்தும் உறக்கம் கொள்ளாமல் இரவைப் போக்கினான். இவற்றிலிருந்து போரை ஆடவர்கள் விரும்பிச் செல்லுதல் மரபாகும் என்பதை அறிய முடிகிறது. போர் என்றவுடனே மறவர்கள் அங்ஙனமே செல்லுதல் இயல்பாகும் என்பதை,

**"நானில மதனினுண்டு போரென நவிலின் அச்சொல்**

**தேனினும் களிப்புச் செய்யும் சிந்தையார்"[17]**

எனவரும் இராமாயணச் செய்யுளால் உணர்த்தப்பட்டுள்ளன.

24-ஆம் அடி முதல் இடைப்பிறவலாக 80ம் அடி வரையில் பாசறையில் தலைமகன் நிலையினை விரித்துக் கூறியவர் மீண்டும் தலைவியின் நிலையை 80முதல் 88அடிகள் வரை கூறுகின்றார்.

### 4.4.7 தலைவியின் துயரநிலை

தலைவனைப் பிரிந்த தலைவி துன்புற்று அவன்பாற் போக்கின நெஞ்சை நினைத்து தனிமையில் வருந்தினாள். பின் இவ்வாறு வருந்துதல்

எம்பெருமான் சொல்லைத் தவறியதாவோம் எனக்கருதித் தன்னை தானே தேற்றிக் கொண்டும், கழலும் வளையல்களைக் கழலாமல் திருத்தியும், மயங்கியும், அணிகலன்கள் நெகிழப் பெற்றும் வருத்தமுற்று இருந்தாள். அப்பொழுது மழைநீர் அருவியாகத் திரண்டு விழுந்ததால் ஓசை எழுந்தது. அந்த ஓசையையும் மீறி தலைவியின் நெஞ்சத்தை நிரப்பும்படியாக அவளது செவி நிரையும்படி ஆரவாரம் கேட்டன. அவ்வாரவாரத்தைக் கேட்டதும் தலைவி மிக்க மகிழ்ச்சி அடைந்ததாக முல்லைப்பாட்டு குறிப்பிடுகின்றது. தலைவி தன் நெஞ்சினைத் தன்பால் நிறுத்த முயன்றும் தன் விருப்பத்திற்கு மாறாக நெஞ்சு தலைவன்பாற் சென்றுவிடுதலை,

**“கெட்டார்க்கு நட்டார்இல் என்பதோ நெஞ்சேந்**

**பெட்டாங்கு அவர்பின் செல்ல”[18]**

என்று வள்ளுவர் கூறுவதன் மூலம் உணரலாம். மேலும் பிரிவாற்றாமையாற் துயரும் மகளிருக்குத் தோள் வாடுதலும், வளை நெகிழ்தலும் உண்டு என்பதை,

**“பணைநீங்கிப் பைந்தொடி சோரும் துணை நீங்கித்**

**தொல்கவின் வாடிய தோள்”[19]**

**“தொடியொடு தோள்நெகிடி நோவல் அவரை**

**கொடியர் எனக்கூறல் நொந்து”[20]**

என்ற குறள்வழியாக வலியுறுத்தியுள்ளார். அதாவது தலைவி தலைவன் மேல் கொண்ட ஆழ்ந்த அன்பினை புலப்படுத்துவதாக அமைந்துள்ளது.

### 4.4.8. தலைவன் வருகை

**‘‘எதிர்செல் வெண்மழை பொழியுந் திங்களின்**

**முதிர்காய் வள்ளியங் காடுபிறக் கொழியத்**

**துனைபரி துரக்குஞ் செலவினர்**

**வினைவிளங்கு நெடுந்தேர் பூண்ட மாவே”[21]**

பகைவர் விரும்பும் நிலங்களையெல்லாம் கவர்ந்து வலிய படைகளோடு வெற்றிக் கொடியை உயர்த்திக் கொண்டு, வெற்றிக்கேற்ப ஊதுகொம்பும் சங்கும் முழங்கவும், நுண்ணிய மணலில் காயா மலரவும் தளிருடைய கொன்றை, காந்தள் மலர்கள் மலரவும், தோன்றி பூக்கவும் காடு தழைத்த செவ்விய முல்லை நிலத்தில் மான்கள் துள்ளவும் கார்காலத் தொடக்கமாகிய

ஆவணித் திங்களின் முதலில் இயல்பிலே விரைந்து செல்லும் குதிரைகளை மேலும் தூண்டி, செலுத்தி வந்தவருடைய வினைத்திறம் விளங்குகின்ற தேர் பூண்ட குதிரைகள் என ஆசிரியர் பாடலை நிறைவு செய்துள்ளார். அதாவது பாடலின் தொடக்கத்தில் கார்காலத்தின் இயல்பையும் தலைவியின் துயர நிலையினையும் கூறிக்கொண்டே வந்த புலவர் பாடலின் இறுதியில் தலைவன் வருகையைக் குறிப்பிட்டு தலைவி மகிழ்ச்சி அடைவதை குறிப்பால் புலப்படுத்துவதாக அமைத்துள்ளமையைக் காணமுடிகிறது.

## 4.5 மதுரைக்காஞ்சி

பத்துப்பாட்டில் ஆறாவதாக அமைந்த நூல் மதுரைக்காஞ்சி. இந்நூலைப் பாடியவர் மாங்குடி மருதனார். இவருக்கு மதுரைக்காஞ்சிப் புலவன், காஞ்சிப்புலவன் என்னும் பெயர்களும் உண்டு. இவர் வேளாண் மரபினைச் சார்ந்தவர். மதுரைக் காஞ்சியில் சைவசமயம், பௌத்த சமயம், சமண சமயம் முதலிய சமயங்களைக் கூறுவதால் இவர் எல்லா சமயத்தையும் பொதுவாகக் கூறும் தன்மை உடையவராகக் கருதமுடிகிறது. மேலும் இவர் சிறந்த சமயங்கள் அனைத்திற்கும் உள்ளீடாய் உயிராய் அமைந்த சீரிய கொள்கை ஒன்றனையே மேற்கொண்டவராவர்.

தொடக்கம் மற்றும் இடையிடையேயும் வஞ்சியடிகள் விரவி வருமாறு இப்பாட்டுத் தொடுக்கப்பட்டுள்ளது. தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டிய நெடுஞ்செழியனுக்கு வீடு பேற்றின் நிமித்தம், பல்வேறு நிலையாமைகளைச் செவி அறிவுறுத்தற்காக பாடப்பட்டதாகும். மதுரையிடத்து அரசனுக்குக் கூறிய காஞ்சித்திணை மதுரைக்காஞ்சி எனவும் கூறுவர். காஞ்சி புறத்திணை ஏழனுள் நிலையாமை பற்றிக் கூறும் திணையாகும். தொல்காப்பியம்,

**"பாங்கரும் சிறப்பின் பல்லாற்றானும்**
**நில்லா உலகம், புல்லிய நெறித்தே"**[22]

என்ற தொடரால் வீடுபேறாகிய நிமித்தத்தை எடுத்துரைக்கின்றன. மேலும்,

**"ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி**
**மாங்குடி மருதன் தலைவனாக**
**உலகமொரு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற்**
**புலவர்"**[23]

என்ற புறநானூற்று வரிகள் பாண்டின் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டிய நெடுஞ்செழியனின் அவையகத்தே வீற்றிருந்த நல்லிசைப் புலவர்களிலும் இவர் தலைசிறந்து விளங்கியவர் என்பதை எடுத்துரைக்கின்றன.

### 4.5.1 காஞ்சி பாடுதற்குரிய காரணம்

நெடுஞ்செழியன் இளமையில் மருதனார் புலமை உள்ளம் நிறையப் பெற்றவனாக பனுவல்யாக்கும் திறம் பெற்றவனாகத் திகழ்ந்தான். அவன் தந்தை இறந்தமையால் அவ்விளமையிலேயே அரசு கட்டியலேறினான். புலவரோடு உடனுறைந்து புலமையுள்ளம் முதிர்ந்து காணப்பட்டான். அவன் இளமையுடையோன் என்பதாலும், வேறு பிற காரணங்களாலும் அப்போதே அவனுக்குப் பல்வேறு பகைகள் கிளர்ந்தெழுந்தன. அரச முடி சூட்டியவுடன் கையில் வில்லேந்திப் போர்க்களம் புக வேண்டிய நிலை ஏற்பட்டது. இக்காலம் தொடங்கி நெடுஞ்செழியன் போர்ச் செயலில் ஈடுபட்டு ஊக்கத்தோடு உலகெல்லாம் வியக்கும்படி போர்த்தொடுத்து வெற்றியின் மேல் வெற்றியாக எய்தி அத்துறையில் ஒப்பில்லாதவனாய்த் திகழ்ந்தான்.

இவன் காலத்தில் வாழ்ந்த புலவர்கள் பலர் போர்த்திறத்தையும் புகழையும் பலவாறு பாடினர். இப்புலவர்களில் சிறந்த புலவர்களாகிய மாங்குடி மருதனார் ஏனைய புலவர்களைப் போன்று, இவன் மேன்மேலும் உயர்ந்து செல்லும் வெற்றியையும் புகழையும் கண்டு உள்ளம் வருந்தினார். இளமையில் அறிவுத்துறை பற்றி வளர்ந்த இவன் உள்ளம் இவ்வாறு இப்போர்த்துறையில் ஆழ்ந்துவிட்டானே என்று வருந்தினார். பின் செழியனின் மறத்துறைப் போக்கை இடித்துரைத்து மீண்டும் அத்துறையில் ஈடுபடுத்தச் செய்த முயற்சியின் பயனே இம்மதுரைக் காஞ்சியாகும். மன்னரைச் சார்ந்தொழுகுதல் மிக்க பெருமை தரும் செயலே எனினும் அச்செயலின் கண் சிறு தவறு நேர்ந்தவிடத்தும் அது மிக்கத் துன்பத்தையே விளைவிக்கும் என்பதை,

**“பழையம் எனக்கருதிய பண்பல்ல செய்யும்**
**கெழுதகைமை கேடுதரும்”[24]**

என்றும்,

**“இளையர் இனமுறையர் என்றிகழார் நின்ற**
**ஒளியோ டொழுகப் படும்”[25]**

என்றும் வள்ளுவர் கூறுவதனால் அறிய முடிகிறது. பண்டைய நாளில் தமிழ் வேந்தர் தம் ஆட்சியின் கீழ் மக்கள் வாழ்ந்த சிறப்பினை நாம் அறிந்து கொள்வதற்குச் சான்றாக மதுரைக்காஞ்சி திகழ்கிறது.

### 4.5.2. பாடல் அமைப்பு

❖ மதுரைக்காஞ்சி 782 அடிகளைக் கொண்டு திகழ்கின்றன. இதில் 1 முதல் 42 வரையிலான அடிகள் நெடுஞ்செழியனுக்கு நிலையாமை கருத்துக்களை எடுத்துக்கூறுவதாகவும், அவன் முன்னோர்களின் செங்கோன்மைச் சிறப்பினைப் பாராட்டிக் கூறுவதாகவும் அமைந்துள்ளன.

❖ 43 முதல் 61 வரையிலான அடிகளில் போர் ஆற்றலும், நால்வகைப் படைகளின் திறமும் குறிப்பிடப்பட்டுள்ளன.

❖ 62 முதல் 74 வரையிலான அடிகளில் செழியனின் சிறப்பு, அவன் ஆட்சியின் கீழுள்ள நாட்டின் எல்லைகள் போன்றவை கூறப்பட்டுள்ளன.

❖ 75 முதல் 88 அடிகள் வரை ஒரே தொடராக அமைந்து செழியன் துறைமுகப்பட்டினத்தை கைக்கொண்ட வெற்றியைக் கூறுகின்றது.

❖ 89 முதல் 105 வரையிலான அடிகள் பாண்டிய நெடுஞ்செழியனின் கொடைச் சிறப்பையும்,

❖ 106 முதல் 130 வரையிலான அடிகள் தலையாலங்கானத்து போரில் செழியன் வெற்றி பெற்றச் சிறப்பினையும்,

❖ 131 முதல் 151 வரையில் ஒரே தொடராக அமைந்து செழியனின் சிறப்புகளையும், போர்த்தொழிலில் நெடுஞ்செழியன் கொண்ட ஊக்கத்தினையும் வெளிப்படுத்துகின்றன.

❖ 152 முதல் 176 வரையிலான அடிகள் பகைவர் நாட்டை பாழ்படுத்தியமை பற்றியும்,

❖ 177 முதல் 196 வரையிரலான அடிகள் புலவன் நெடுஞ்செழியனின் பண்புகளை வாழ்த்துவதாகவும்,

❖ 197 முதல் 209 வரையிலான அடிகள் நெடுஞ்செழியனின் சான்றாண்மைகளையும்,

- ❖ 210 முதல் 237 அடிகள் காஞ்சித்திணையின் பொருள்களைக் கூறுவதாகவும்,
- ❖ 238 முதல் 699 வரையுள்ள அடிகள் மதுரை மாநகரின் சிறப்பையும் ஐவகை நிலக்காட்சிகளையும் கூறுகின்றது. இதில்,

- ❖ 238 – 270 அடிகள் மருத நிலத்தின் வளத்தையும்,
- ❖ 271 – 285 அடிகள் முல்லை நிலக்காட்சிகளையும்,
- ❖ 286 – 301 அடிகளில் குறிஞ்சி நிலத்தின் இயற்கை வளத்தையும்,
- ❖ 302 – 314 அடிகளில் பாலை நில இயல்பினையும்,
- ❖ 315 – 326 அடிகளில் நெய்தல் நில இயல்பினையும்,
- ❖ 327 – 699 அடிகளில் மதுரை மாநகரின் சிறப்புகளும் கூறப்பட்டுள்ளன.
- ❖ 700 முதல் 782 வரையிலான அடிகள் ஒரு தொடராக அமைந்து இளமை, யாக்கை, செல்வம் நிலையாமை முதலிய நிலையாமைகளைக் கூறி வந்த புலவர், பின் நில்லாத இவ்வுலகத்தில் நிலையுடையதாகிய வீடுபேற்றை பாண்டிய நெடுஞ்செழியனுக்கு மிக நுணுக்கமாகவும், குறிப்பாகவும் எடுத்துக்கூறி, பின் புலவர் வாழ்த்துவதாக இப்பாடல் அமைந்துள்ளன. அதாவது இப்பாடலின் தொடக்கம் பாண்டியனின் செங்கோன்மையின் சிறப்புகளைக் கூறுவதாகவும் முடிவு புலவர் நெடுஞ்செழியனுக்கு வீடுபேற்றை எடுத்துரைப்பதாகவும் அமைந்துள்ளன.

### 4.5.3. செங்கோன்மையின் சிறப்பு

மக்களிடம் பசியும் பிணியும் நீங்கியமையால் அவர்கள் அழகினால் பொலிவுற்று விளங்கினர். உலகினைத் தாங்கும் தொழிலை மேற்கொண்டுள்ள பொலிவு பெற்றுத் திகழும் திசையானைகளை இவ்வரசன் தாங்குவதால் அவை வருத்தமின்றி மாண்புடன் விளங்கின. உண்டு நீங்காத உணவாகிய மிக்க செல்வத்துடன், உயர்ந்த இருபுறமும் அமைந்த மாடங்களையுடையத் தெருக்கள் இருந்தன. எக்காலத்தும் உண்மை மொழிகளைப் பேசுவதால் புகழால் நிறைந்து, மொய் மொழிகளைக் கேட்டறியாத நல்ல அமைச்சர்களுடன் பல அரசர்களும் தன்னைப் பணிந்து நடக்கவும் இவ்வுலகத்தையாண்ட உயர்ந்த செங்கோல் மன்னர் மரபில் தோன்றியவன் நெடுஞ்செழியன் என்பதை,

**"பொய்யறியா வாய்மொழியாற்**

**புகழ்நிறைந்த நன்மாந்தரொடு**

**நல்லூழி அடிப்படரப்**

**பல் வெள்ளம் மீக்கூற**

**உலகம் ஆண்ட உயர்ந்தோர் மருக"[26]**

என்ற வரிகள் உணர்த்துகின்றன. இதில் நெடுஞ்செழியன் சிறப்பாக ஆட்சி செய்ததையும் ஆட்சிச்சிறப்பால் மக்கள் பசியும் பிணியுமின்றி மகிழ்ச்சியுடன் சிறந்து விளங்கினர் என்பதையும், நாட்டில் வாழும் அமைச்சர் மற்றும் புலவர்களும் புகழால் சிறந்தோங்கியதையும் எடுத்துரைக்கின்றன.

### 4.5.4 நெடுஞ்செழியனின் சான்றாண்மை

நெடுஞ்செழியனின் சான்றாண்மையை (197-206) வரிகளில் எடுத்துரைத்துள்ளார். பொய்க்கூறுவதால் தேவருலகமும் அவர்கள் உண்ணும் அமிழ்தமும் எளிதாகக் கிடைப்பதாயினும் பொய்க்கூறாமல் மெய்மையைக் கூறும் இயல்புடையவன். கடலினை எல்லையாக உடைய இப்பேருலகத்தே வாழ்பவருடன் வானுலகத்தில் வாழ்பவரும் சேர்ந்து பகைத்து எதிர்த்தாலும் அப்பகைக்கு அஞ்சாது எதிர்த்துப் போரிடக் கூடியவன். பிறருக்கு ஈவதனால் வரும் புகழைப் பெரிதும் விரும்பக் கூடியவன். இத்தகைய மேன்மையுடைய நினக்கு நிகர் எவருமில்லை. எனினும் இவற்றிற்கெல்லாம் மேலான ஒன்றைக் கூறத்துணிகிறேன் அதைக் கேட்பாயாக! அதனால் நின் மயக்கம் ஒழிவதாக! உலகெல்லாம் பரவித்திகழும் உன் உயர்ந்த புகழ் உலத்தில் நின்று நிலைபெறுவதாக! என்று ஆசிரியர் நெடுஞ்செழியன் குறிப்பிடுவதாக அமைந்துள்ளது.

**"வாய்மை எனப்படுவ தியாதெனின் யாதொன்றும்**

**தீமை யிலாத சொலல்"[27]**

அதாவது பிறிதோர்க்கு தீங்கு சிறிதும் பயவாத சொற்களைச் சொல்லுதல் வேண்டும் என்பதை வள்ளுவர் குறிப்பிடுகின்றார். மேலும் சான்றாமையைக் குறித்து,

**"உண்டா லம்மஇவ் வுலகம் இந்திரர்**

**அமிழ்தம் இயைவதாயினும் இனிதெனத்**

**தமியர் உண்டலு மலிரே முனிவிலர்**

**துஞ்சலும் இலர்பிறர் அஞ்சுவ தஞ்சிப்**

**புகழ்எனின் உயிருங் கொடுக்குவர் பழியெனின்**

**உலகுடன் பெறினும் கொள்ளலார் அயர்விலர்**

**அன்ன மாட்சி யனைய ராகித்**

**தமக்கென முயலா நோற்றாள்**

**பிறர்க்கென முயலுநர் உண்மை யானே"[28]**

புறநானூறு கூறுவதாலும் அறிய முடிகிறது. இவற்றிலிருந்து பண்டை காலத்தில் மன்னர்கள் வாய்மை தவறாது சான்றாண்மை உடையவர்களாகத் திகழ்ந்ததை எடுத்துரைக்கின்றன.

### 4.5.5 நிலையாமையை அறிவுறுத்தல்

210 முதல் 237 வரையிலான அடிகளில் இந்நூலின் உட்பொருளாகிய நிலையாமையை வலியுறுத்துவதாக அமைந்துள்ளது. இளம்பருவத்தினாயினும் அஞ்சா நெஞ்சத்துடன் போர்க்கோலம் பூண்டு பகைவரை வென்றான். அவனை நக்கீரர், குடபுலவியனார், கல்லாடர் முதலியோர் இப்பாண்டியனின் வெற்றிச்சிறப்புகளையும், புகழையும் போற்றிப் பாமாலைகள் புனைந்தனர். மன்னன் மனம் உலக அறநெறிகளில் ஈடுபட வேண்டும் என்பது மாங்குடி மருதனாரின் விருப்பமாகும். மதுரையை ஆண்ட பாண்டியனுக்குப் பல நிலையாமைக் கருத்துக்களை மதுரைக்காஞ்சியின் மூலமாக எடுத்துரைத்துள்ளார்.

**"கொன்னொன்று கிளக்குவல், அடுபோர் அண்ணல்**

**கேட்டிசின் வாழி! கெடுகநின் அவலம்"[29]**

என்று அடிகளில் வீடுபேற்றின் நிமித்தத்தினையும்,

**"திரையிடு மணலினும் பலர் உரைசெல**

**மலர்தலை யுலக மாண்டுகழிந் தோரே"[30]**

என்னும் அடிகளில் நிலையாமையின் தன்மையையும் எடுத்துக்கூறியுள்ளார். இவற்றில் நெடுஞ்செழியனுக்கு மாங்குடி மருதனார் நிலையாமையை வலியுறுத்துவதைக் காண முடிகிறது.

### 4.5.6 அறங்கூறும் அவையம்

அச்சத்தையும் வருத்தத்தையும் பற்றுள்ளத்தையும் போக்குபவராய் வழக்குத் தொடர்ந்தோருள் ஒருவர் மேல் செற்றமும், ஒருவர் மேல்

உவகையும் கொள்ளாமல் துலாக்கோல் போன்று நடுநிலைமையுடையவராய் சிறந்த கொள்கையுடன் அறத்தின் வழி நீதி வழங்கும் சான்றோர்கள் இருந்ததை,

**“அச்சமும் அவலமும் ஆர்வமும் நீக்கிச்**
**செற்றமும் உவகையும் செய்யாது காத்து**
**ஞெமன்கோல் அன்ன செம்மைத் தாகிச்**
**சிறந்த கொள்கை அறங்கூறு அவையமும்”**[31]

என்று மதுரைக்காஞ்சி வழி ஆசிரியர் எடுத்துக்காட்டியுள்ளார். மேலும், சான்றோர்கள் துலாக்கோல் போல இருந்து அறம் கூறவேண்டுமென்பதை,

**“சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்தொருபாற்**
**கோடாமை சான்றோர்க் கணி”**[32]

வள்ளுவரும் குறிப்பிட்டுள்ளதைக் காணமுடிகிறது. இது மதுரை மாநகரில் நடுநிலைமையோடு நீதிகளை கூறும் அவையமும் இருந்ததைப் புலப்படுத்துகின்றது.

### 4.5.7 வீதிகளின் அமைப்பு

மதுரை நகரில் அமைச்சர் வாழும் தெரு, வணிகர் வாழும் தெரு, நால்வகைப் படையினர் வாழும் தெரு எனத் தனித்தனியாக தெருக்கள் அமைந்திருந்ததாக மதுரைக்காஞ்சி வாயிலாக ஆசிரியர் விளக்கியுள்ளார். அவ்வீதிகள் வையையாற்றைப் போல அகன்றிருந்தது. அவ்வீதிகளின் இருபுறங்களிலும் உயர்ந்த மாடங்களையுடைய இல்லங்கள் அமைந்திருந்தன. தென்றல் காற்று அவ்வில்லங்களில் உலவுவதற்கு மேல் மாடங்கள் பல சாளரங்களைப் பெற்றிருந்தன. அவ்வீடுகள் மண்டபம், கூடம், அடுக்களை முதலிய பல பகுதிகளை உடையதாகக் கட்டப்பட்டிருந்தன. இம்மதுரை மாநகரில் உள்ள நாளங்காடி, அல்லங்காடி பற்றிய செய்திகளும் இதில் குறிப்பிடப்பட்டுள்ளன.

**“உருகெழு பாணள் வருவன பெயர்தலிற்**
**பல்வேறு புள்ளின் இசையெழுந் தற்றே**
**அல்லங்காடி அழிதரு கம்பலை”**[33]

அதாவது பகலில் வணிகம் செய்வதோடு மட்டுமின்றி மரக்கலங்களில் கொணர்ந்த பல்வேறு பண்டங்களை அயல்நாட்டு வணிகர்கள் நள்ளிரவில்

வந்து இறக்குவதால் எழுந்த ஆரவாரமும் அங்குள்ள பறவைகள் எழுப்பிய ஓசையாலும் அல்லங்காடி ஓசையுடையதாகக் காணப்பட்டது. நாள் முழுவதும் பகலிலுள்ள கடைகளை **'நாளங்காடி'** எனவும் இரவில் இருக்கும் கடைகளை **'அல்லங்காடி'** எனவும் குறிப்பிடுவதை மதுரைக்காஞ்சி எடுத்துரைக்கின்றது.

### 4.5.8 மதுரையின் சிறப்புகள்

புகழ் நிறைந்த மதுரை மாநகரில் வாழ்ந்த மக்கள் வீரப்பண்பு மிக்கவர்களாகவே காணப்பட்டனர். பெருந்தோள்களையுடைய வீரரைத் தோற்கடித்து, அவர்கள் போர்களத்தே விட்டொழிந்த யானைகளும், பகைவர் நாட்டிலே சென்று கைகொண்ட குதிரைகளும் வீரர்கள் பகைவர் நாட்டிற் புகுந்து ஆநிரையைக் காத்திருந்த வீரரை வெட்டிக் கொன்று அவரின் ஊர்களைத் தீயிற்கு இறையாக்கினான் நெடுஞ்செழியன். பின்பு பகைவர்கள் தாம் வாழும் பொருட்டுத் தம்மை காக்கும்படி கையாற் தொழுது, வாழ்த்தி திறையாகக் கொணரப்பட்ட பொருளும் மதுரை மாநகரத்தில் குவித்து வைக்கப்பட்டிருந்தன. கங்கையாறு கடலிற் பலமுகமாகப் புகுமாறு பல பகுதியிலிருந்து பண்டங்கள் வந்து குவிவதால் பார்ப்பதற்கு மதுரை நகரம் தேவருலகம் போன்று பொலிவு பெற்று திகழ்வதை,

> **"புத்தே ளுலகம் காவினிக் காண்வர**
> **மிக்குப்புகழ் எய்திய பெரும் பெயர் மதுரை"**[34]

என்ற வரிகள் உணர்த்துகின்றன. படை மறவர்கள் போருக்கு செல்லும் முன்பு முதலில் பகைவர் நாட்டிலுள்ள ஆநிரைகளைக் கவர்தல் இயல்பு என்பதைத் தொல்காப்பியரும்,

> **"வேந்துவிடு முனைஞர் வேற்றுப் புலக் களவின்**
> **ஆதந்து ஓம்பல் மேவற்று ஆகும்"**[35]

என்ற நூற்பா மூலம் விளக்கியுள்ளார். ஒரு நாட்டின் செல்வம் பசுக்களே. அதனால் அச்செல்வத்தைக் கவரும் பொருட்டு முதலில் பசுக்களை கவர்தலும் பின் அப்பகைவரை வென்று ஊரைத் தீயிடுதலும் உண்டு என்பதையும், மறப்பண்புகள் நிறைந்த மறவர்களை உடையதாக மதுரை மாநகரம் திகழ்ந்ததையும் எடுத்துரைக்கின்றன.

### 4.5.9 விலங்கு காட்சி சாலை

மதுரை மாநகரில் விலங்குக்காட்சிசாலை ஒன்று இருந்ததையும் மதுரைக்காஞ்சி வாயிலாக ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். அவ்விலங்குக்காட்சி சாலையில் கரடி முதலிய விலங்குகள் கூட்டில் அடைக்கப்பட்டிருந்ததை,

**"கூட்டுறை வயமாப் புலியொடு குழும"[36]**

என்ற வரிகள் குறிப்பிடுகின்றன.

### 4.5.10 பற்றற்ற செயலும் மெய்ப்பொருள் உணர்ச்சியும்

அகன்ற வீடுகளால் மிகப்புகழ் எய்திய மதுரை நகரில் இடந்தோறும் கள்ளை எடுப்பதும், மரத்தடிகள்தோறும் செம்மறிக்கிடாயை நிறுத்தியும் நிணத்தையுடைய தசைகளைச் சுடுவதால் அந்நிணம் உருகி, நெய் நிறையப்பெற்று பொரிக்கறிகளின் ஓசை எழவும் தாளிப்பினால் எழுந்த புகை மழையையுடைய திசைகள் போல பரந்து தோன்றியது. அவ்வகன்ற மதுரையிடத்தே பல யாகங்களைச் செய்த உன் முன்னோனாகிய பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைப் போன்று வேள்வி பல செய்வாயாக! மேலும், அகத்தியனாரை உள்ளிட்ட பழைய ஆணையையுடைய மெய்யுணர்ந்த சான்றோர்கள் தம்முள்ளே புணர்ந்து நுகரும் பொருளின்பத்தை அவர் அருளாலே தானும் அகத்தே உணர்ந்து நுகர்ந்திருந்த புகழ்மிக்க நிலந்தரு திருவிற் பாண்டியன், பின் அறநெறியில் நின்று வீட்டின்பத்தைப் பெற்றான். அதனால் அவனைப் போல நீயும் நிலையாமையை உணர்ந்து வீட்டின்பம் எய்த வேண்டும் என்பதை மாங்குடி மருதனார் நெடுஞ்செழியனை அறிவுறுத்துவதாக அமைந்துள்ளது.

### 4.5.11 புலவர் மன்னனை வாழ்த்துதல்

பொன்னாற் செய்த பேரணிகளையுடைய ஐம்பெருங்குழுவினரும், புகழ்மிக்க மறமுடைய குறுநில மன்னரும் பிறரும் நிறைந்து திகழ்கின்ற நின் அவைக்களம் நின் செங்கோல் நெறியைப் புகழ்ந்து நிற்பதாக! மேலும், அணிகலன் அணிந்த மகளிர் பொன் வள்ளத்தில் தந்த காமபானத்தைப் பருகி நாள்தோறும் மகிழ்ந்து இனிதாக வாழ்ந்திருப்பாயாக! பெருமானே! ஊழ் நினக்கென வரைந்தளித்த ஊழிக்காலத்தை! என பாடலின் அடி நிறைவு பெற்றிருப்பதை,

**"பொலம்பூண் ஐவர் உட்படப் புகழ்ந்த**

**மறமிகு சிறப்பிற் குறுநில மன்ன**

**வரைந்துநீ பெற்ற நல்லூ ழியையே”[37]**

என்ற அடிகள் வாயிலாகக் காணமுடிகிறது. அதாவது முன்னோர்கள் சென்றநெறி, ஆசிரியரைச் சார்ந்து பெற்ற அறிவின் முதிர்ச்சி, பூத்த சுற்றமொடு பொலிந்து தோன்றும் பெருந்தகைமை ஆகியவற்றைக் கூறி, அவர்களை வாழ்த்துவதாய் இப்பாடலின் முடிவு அமைந்துள்ளது. இதில் பாடலின் தொடக்கமும் முடிவும் ஆசிரியர் நெடுஞ்செழியனை வாழ்த்துவதாக பாடல் அமைக்கப்பட்டுள்ளதை உணர்த்துகின்றன.

## 4.6 குறிஞ்சிப்பாட்டும் நூலாசிரியர் வரலாறும்

ஆன்றோர் புகழ்ந்த அறிவினிற் செரிந்து சான்றோர் உரைத்த தண்டமிழ்த் தெரியல் ஒருபது பாட்டினுள் எட்டாம் எண்ணுமுறைக்கண் நின்ற இக்குறிஞ்சிப்பாட்டை இயற்றியவர் கபிலர் என்னும் நல்லிசைப் புலவராவர். இவர் செந்தமிழ்ப் பாண்டிய நாட்டிலுள்ள திருவாதவூர் என்னும் மூதூரிற் பிறந்தவர். இவர் அந்தணர் குலத்தவர் என்பதை,

**“அந்தணன் புலவன் கொண்டுவந் தனனே”[38]**

எனத் தம்மையே இவர் கூறிக்கொள்வதனாலும் மாறோகத்து நப்பசலையார் இவரை,

**“புலனழுக் கற்ற அந்தணாளன்”[39]**

எனப்போற்றி கூறுவதன் மூலம் அறிய முடிகிறது. கபிலர் உயிர்வாழ்ந்திருந்த காலத்தே ‘பாரி பாரி’ என்று சான்றோர் ஏத்திப் புகழ்ந்த வள்ளற் பெருமானும் வாழ்ந்திருந்தான். அக்காலத்தே அவன் வழங்கிய கொடைச்செயலின் புகழ் அடுக்கிய மூவுலகும் கேட்கலாயிற்று. அப்புரவலன் அவைகளத்தில் கபிலர் சிறந்து விளங்கினார்.

பின் அவ்வள்ளல் பெருமானின் ஆருயிர் நண்பராகவும் விளங்கினார். குறுநில மன்னராகிய பாரியின் பெரும்புகழ் உலகெல்லாம் பரவுவதை அறிந்த முடிவேந்தராகிய சேர, சோழ பாண்டியர் மூவரும் பொறாமை கொண்டனர். இம்மூவேந்தரும் பாரியை வீழ்த்தும் பொருட்டு ஒன்றுப்பட்டு மகற்கோடல் காரணமாக மாபெரும் படையுடன் திரண்டு பாரியின் பறம்பு மலையினை முற்றுகையிட்டனர். அப்பொழுது அஞ்சா நெஞ்சமுடைய கபிலர் அம்மூவேந்தர் முன்னர் துணிந்து சென்று அவர் நெஞ்சகத்தை ஊடுருவி செல்லும்படி தமது திண்ணிய சொல்லம்பைத் தொடுத்து அழுக்காறுற்ற அம்மன்னர்களின் சிறுமையையும், பறம்பின் வளத்தையும், பாரியின்

மறச்சிறப்பையும், கொடை நலத்தையும் ஓதிய தீஞ்சுவை நிறைந்த வீரப்பாடல்கள் உள்ளத்தை உருக்கும் தன்மையுடையன.

கபிலருடைய வாழ்நாளில் முற்பகுதி ஒப்பற்ற இன்பமுடையதாக இருந்தது. அக்காலத்தே இவர்தம் உள்ளக்கோயிலில் வீற்றிருந்தருளிய தெய்வத் தீந்தமிழ் அன்னைக்குச் சிறந்த அணிகலன்கள் பற்பல இயற்றி அணிந்து மகிழ்ந்தார். சங்க நூல்கள் என நாம் போற்றும் சங்க இலக்கியச் செல்வங்களுள் பாட்டும் தொகையும் கீழ்க்கணக்குமாகிய முத்திறத்து இலக்கியங்களுள்ளும் இவர் இயற்றியத் தீஞ்சுவைச் செய்யுள்கள் திகழ்கின்றன. இச்செய்யுள்களில் இவர் இயற்றியனவாக நமக்குக் கிடைத்தவை 279 செய்யுள்களேயாகும். இச்செய்யுட்களில் தொண்ணூற்றொரு செய்யுள் குறிஞ்சித்திணை என்னும் அகப்பொருள் பற்றியன. அவற்றிலும் அடியினால் நீண்டதாக அமைந்தது இக்குறிஞ்சிப்பாட்டேயாகும். குறிஞ்சி நிலத்தில் தோன்றி, அந்நிலத்திலே பயின்று, அந்நிலத்தின் முதல் கரு உரி என்னும் முத்திறத்த பொருள்களையும் நுண்ணிதின் உணர்ந்து அவ்வுணர்ச்சி முதிர்வினால் இவர் இயற்றிய செய்யுட்கள் ஒப்பற்ற நலன் உடையனவாகத் திகழ்கின்றன.

கபிலருடைய வாழ்நாளின் இறுதிநாட்கள் அவர்க்கு எல்லையற்ற இடர் தருவனவாக அமையலாயின. வேள்பாரியின்பாற் பொறாமை கொண்ட வேந்தர் பாரியைக் கொன்று தீர்த்தனர். உலகோம்பிய மாபெரும் வள்ளலாகிய பாரியின் மகளிர் ஆதரவற்று ஏழையாயினர். அந்நிலையிலே செய்நன்றித்தேடும் சான்றோராகிய கபிலர் அம்மகளிர்க்குத் தந்தையாகி, அவரை அவர் தகுதிக்கேற்ற மன்னர்க்கு மணம்புரிவித்து வாழ்விக்கப்பட்ட பாட்டினை நினைக்கும் போது உள்ளம் உருகும்.

பாரி மாய்ந்த பின்னர் அவ்வள்ளலின் மகளிர்க்குத் துன்பம் நிகழாதவாறு பாதுகாத்தார். பின் பாரி மகளிரைப் பெரிதும் முயன்று மலையன் என்னும் மன்னனுக்கு மணம் புரிவித்தனர் என்றும் அதன் பின்னர் பாரியின் பிரிவாற்றாமையால் வடக்கிருந்து உயிர் நீத்தார் என்றும் கூறுவர். கபிலருடைய செய்யுட்களில் கிடைக்கும் அகச்சான்றுகள் கொண்டு ஆராயும் போது சமயக் கோட்பாட்டில் இவர் திருவள்ளுவரையும் இளங்கோவையும் போன்று ‘எம்மதமும் சம்மதம்’ எனக்கொள்ளும் விரிந்த மனம் உடையவராகக் காணப்படுகிறார்.

இவர் பாடிய செய்யுட்களால் அக்காலத்தே தமிழகம் எய்தியிருந்த நாகரிகச் சிறப்பும் அவர்களின் ஒழுக்கலாறுகளும் பற்பல புரவலர்கள் அரசர்கள் முதலியோர் வரலாறுகளும் அக்காலத்தே சிறந்து விளங்கிய நகரம், மூதூர் முதலியவற்றின் தன்மையும் நன்கு புலனாகிறது.

### 4.6.1 நூல் வரலாறு

கபிலர் குறிஞ்சிப்பாட்டை ஆரிய அரசன் பிரகத்தன் என்பவனுக்கும் தமிழறிவுறுத்தற் பொருட்டு இயற்றினார் என்று கூறப்படுகிறது. அயன் மொழியாளனாகிய ஆரிய மன்னனுக்குத் தெய்வத் தமிழின் சுவைநலனையும் அதன்கண் இருந்த தமிழ் மக்களின் குறிக்கோள்கள், வாழ்க்கைநெறி, பண்பாடு முதலியவற்றை எஞ்சாது ஒருங்குணர்த்த கபிலர் அவற்றிற்கு நிலைக்களனாகத் திகழும் புணர்தல் என்னும் இவ்வொழுக்கத்தைத் தம் செய்யுட்கு உயிராக அமைத்து அறிவுறுத்தினார். பேரியாற்றின் இருமருங்கிலும் மக்கள் வழங்கும் உண்டுறை பல அமைந்தாற் போன்று இக்குறிஞ்சித் திணையிலும் உட்பகுதிகள் பல அமைந்துள்ளன. அவற்றைத் ‘துறை’ என்று கூறுவர். அத்துறையுள் தம் கருத்திற்கேற்பத் தமிழின் பண்பாட்டை விரித்துக் கூறுவதற்கேதுவாக அமைந்த ‘அறத்தொடு நிலை’ என்னும் ஒரு சிறந்த துறையிலே கபிலர் தம் குறிஞ்சிப்பாட்டை இயற்றியுள்ளார்.

இவர் தொல்காப்பிய வரையறையின் படி, சுட்டி ஒருவர் பெயர் கொள்ளாது மக்கள் அனைவருக்கும் பொதுவாக அமையுமாறு குறிப்பிட்டுள்ளார். ஆடவர், பெண்டிர் இருவரையும் தலைவன் தலைவியாகவே கூறியுள்ளார். இவ்விருவரில் தலைவிக்குத் துணையாகவும் உயிராகவும் அமைபவள் தோழியே. தலைமக்கள் இருவருடைய அகவாழ்வில் தோழிக்குத் தெரியாமல் எதுவும் நடப்பதில்லை. ஆதலின் அவர் தம் நெஞ்சந்திறந்து நோக்கும் தகுதியும் அவற்றைக் கூறும் உரிமையுடைய இத்தோழியின் கூற்றாக நிகழும் அறத்தொடு நிலை என்னும் இத்துறை வாயிலாகக் கபிலர் ஆரிய மன்னனுக்கு தமிழன் தீஞ்சுவையை அறிவுறுத்தினார். இவை அக இலக்கியச் செல்வமாகிய இன்பம் நிறைந்த கருவூலங்களைத் திறந்து நுகர்தற்குரிய திறவுகோலாக திகழ்கின்றன. இவ்வக இலக்கியம் அமைந்த குறிஞ்சிப்பாட்டில் அமைந்துள்ள துறைப்பற்றி கீழ்க்கண்டவாறு காணமுடிகிறது.

தெய்வத்தின் ஆணையால் ஒரு பூம்பொழிலின் கண் பிறப்பு முதலிய பத்தும் ஒத்த தலைமகனும் தலைமகளும் தம்முள் ஒத்து ‘செம்புல நீர்போல்’ அவர்தம் அன்புடை நெஞ்சம் கலந்தன. இவ்வாறு ஒன்றுபடும் அன்பை ‘இயற்கைப் புணர்ச்சி’ (அல்லது) ‘தெய்வப்புணர்ச்சி’ என்று கூறுவர். இவ்வாறு ஒன்றுபட்ட காதலர் இருவரும் குறியிடங்களில் கூடியும், பிரிந்தும் வருங்கால் தலைவி தன் பெற்றோர் இல்லத்திலிருந்து வெளியேறாதபடி காக்கப்பெற்று இல்லியே தங்கிவிடுவாள்.

இந்நிலையில் தலைவன் அவளைக் காணாமையால் மிகவும் வருந்துவான். பின் தலைவியைக் காண்பதற்கு பற்பல துன்பங்கள் நிகழும். அவன் நள்ளிரவில் வருவதால் ஊர்களில் உள்ள நாய்கள் குரைக்கும். ஊர்காக்கும் காவலர் தடுப்பர். நிலவு வெளிப்பட்டுப் பகல்போல் தோன்றும். தாய் உறங்காமல் விழித்திருப்பாள். இது போன்ற பல இடர்பாடுகள் ஏற்படுவதால் தலைவியைக் காணாமல் வருந்தித் தான் வந்தமையைக் குறிக்க ஏதேனும் சில குறியீடுகள் செய்துவிட்டு வந்த வழியே மீள்வான். தலைவன் இவ்வாறு இருக்க இச்செறிக்கப்பட்டத் தலைவி அவனைக் காணாது உறக்கங்கொள்ளாமல் தன் உடல் மெலிந்து காணப்படுவாள். உடல் தேய்ந்து நலியும் தலைவியின் நிலைக்கண்டு ஆற்றாளதவாகிய செவிலி இவள் மெலிவுக்குக் காரணம் யாதோ? என ஆராய்ந்து இவள் “தெய்வத்தால் தான் தீங்குற்றாள்” எனக்கருதி அந்நோய் தீர்க்க வெறியாட்டு நிகழ்த்துவாள் செவிலி. இவ்வெறியாடல் கண்டு தலைவி மிகவும் நாணுவாள். மேலும் இரவின்கண் தலைவன் வருவதால் அவனுக்குத் தீங்கு நேருமோ எனக்கருதி, தன் உள்ளத்தே வைத்து புலம்புவாள். பின் இதை தன் தோழிக்குக் கூற்றாகவும் குறிப்பாகவும் உணர்த்துவதனை அறத்தொடு நிலை என்பார்கள்.

தோழி தலைவியின் மெலிவுகண்டு இந்நிலை நீளுமாயின் இவள் இறந்துபட நேருமோ என அஞ்சி இக்களவு வெளிப்படுதலே இதற்குத் தீர்வு என்று கருதி, அக்களவை செவிலிக்கு வெளிப்படுத்தி அறத்தொடு நிற்பாள். அவ்வாறு அறத்தொடு நிற்கும் போது தலைவியின் குடிப்பிறப்பிற்கும் கற்பு, நாண் முதலியவற்றிற்கும் செவிலியின் அறிவிற்கும், தலைவன் பெருமைக்கும் தன் பாதுகாவலுக்கும் மாறுபடாதவாறு நிற்க வேண்டும் என்னும் வரையறையை கடைபிடிப்பாள். இவ்வாறு நிற்கும் அறத்தொடு நிலையை குறிஞ்சிப்பாட்டு மிகவும் சிறப்பாகக் குறிப்பிடுகிறது. அறத்தொடு நிற்கும்

தோழி எளித்தல் முதலிய ஏழு திறத்தைக் கொண்டு நிற்றல் வேண்டும் எனத் தொல்காப்பியம் கூறுகிறது. அவையாவன,

**“எளித்தல் ஏத்தல் வேட்கை யுரைத்தல்**
**கூறுத லுசாத்தல் ஏதீடு தலைப்பாடு**
**உண்மை செப்பும் கிளவியொடு தொகை**
**அவ்வெழு வகைய என்மனார் புலவர்”[40]**

போன்ற ஏழுமாகும். இவ்வேழு திறத்தினுள் ‘கூறுதலுசாதல்’ என்னும் ஒன்றொழிய ஆறுவகையாலும் தோழி அறத்தொடு நிற்பதாகக் குறிஞ்சிப்பாட்டானது குறிப்பிடுகிறது.

### 4.6.2 பாட்டின் தன்மைகள்

குறிஞ்சிப்பாட்டானது தோழி செவிலிக்குத் தலைவியின் இயல்புகளைக் கூறி, அறத்தொடு நிற்கும் கூற்றாக அமைந்துள்ளது. இதனுள் தலைவன் தலைவியும் தாமாகவே செய்யும் மண இயல்பும், தலைவன் வாரானாயினும் இறக்கும் வரையில் துயரத்தைப் பொறுத்திருந்து மறுபிறப்பினும் அக்கூட்டத்தைக் கருதுவது தலைவியின் இயல்பாகும். தினைபுனத்தில் கிளியோட்டும் முறையும், குறிஞ்சி நிலத்திற்குரிய பலவகைப் பூக்களின் பெருக்கமும், பூக்களாலும் தளிராலும் மகளிர் அணி செய்து கொள்ளும் முறையும், குறிஞ்சி நிலத்தலைவன் ஆயத்தோடு நின்ற தலைவியைக் கண்டு வினாவியதும், வேட்டை நாய்களை அவன் ஓட்டியதும், ஓடும் நீரில் குதித்து கால் தளர்ந்த வேளையில் தலைவன் தலைவியைப் பாதுகாத்தலும், களவொழுக்கம் நிகழ்ந்த பிறகு குறிஞ்சிக் கடவுளாகிய முருகனை வாழ்த்தி வஞ்சினம் உரைத்தலும், மாலை கால இயல்பும், வரைவு கருதி தலைவன் வராமை பற்றித் தலைவி வருந்திக் கூறியதும் இப்பாட்டில் விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

இப்பாடல் பலதுறைகளின் இணைவால் உருவாகி, அறத்தொடு நிலை என்னும் துறையில் முடிகிறது. இது சிறந்த நாடகப் பண்பும் காப்பியப்போக்கும் உடையதாகக் காணப்படுகிறது. இது ஒருநாள் நிகழ்ச்சியைத் தெளிவாகக் கூறுவதாக அமைக்கப்பட்டுள்ளது. அதாவது தலைவி தினைப்புனங்காக்கச் சென்றபோது நடந்த நிகழ்வை தெளிவாக விளக்கப்பட்டுள்ளது. இதனைக் ‘காப்பியப்பாட்டு’ என்றும் போற்றுவர்.

இதன்கண் மகளிர் 99 வகையான மலர்களைப் பாறையில் தேடித் தொகுத்ததாகக் கூறப்பட்டுள்ளது. மலர்களின் அமைப்பைத் தமிழண்ணல்,

"பூமாலை போன்ற பாமாலை என்பது வெறும் உபசார வழக்கு-உவமை பற்றியது. கபிலர் இவை இரண்டின் ஒருங்கிணைவையே தம் பாட்டில் கொண்டுவர முயல்கிறார். மூன்று மூன்று மலர்களாக அவர் கண்ணி தொடுக்கும் அழகே சிறப்பானது"[41] என்று குறிப்பிடுகிறார்.

மேலும், தலைவனின் அழகைப்புனையும் தனிச்சிறப்பும் இப்பாடலில் தான் உண்டு. நம் அணிகலன்கள் பழுதுபட்டால் திருத்திக் கொள்ளலாம் ஆனால் பண்பு கெட்டால் திருத்திக் கொள்வது கடினம் என்ற கருத்து சிறப்படையதாகக் கருதப்படுவதை,

**"முத்தினும் மணியினும் பொன்னினும் அத்துணை**
**எளிய என்னார் தொல்மருங்கு அறிஞர்"[42]**

என்ற அடிகள் உணர்த்துகின்றன. அக்காலத்தில் திருமணங்கள் பெரியோர்களால் தான் நிச்சயிக்கப்பட்டன. இருப்பினும் களவு மணமுறையும் காணப்பட்டது. அதைக்கண்டு தமிழரனைவரும் அன்று களவு வழிக்காதலும் மணமுமே பெற்றனர் என்று முடிவு செய்து விடக்கூடாது. தோழியே,

**"கொடுப்பின் நன்குடைமையும் குடிநிரல் உடைமையும்**
**வண்ணமும் துணையும் பொரீஇ எண்ணாது**
**எமியேம் துணிந்த ஏமம்சால் அருவினை"[43]**

என்று கூறுவதால் தாங்கள் சமுதாயம் பொது வழக்காற்றுக்கு மாறாகப் போய்விட்டதாக வருந்துகிறாள் என்பதை உணர முடிகிறது. எனவே, அன்று சமுதாயத்தில் ஓரளவு அரிதாகக் காணப்பட்ட களவுக்காதல் இலக்கியத்தில் சுவைதரும் உரிப்பொருளாகப் (Theme) புனையப்படலாயிற்று.

1. கதை கூறும் போக்கு
2. நாடக அமைப்பு
3. காப்பியப் புனைவு முறைகள்

போன்றவற்றினைக் கொண்ட குறிஞ்சிப்பாட்டினைக் 'காப்பியப்பாட்டு' என்று கூறுவது பொருத்தமுடையதேயாகும்.

### 4.6.3 பாடல் அமைப்பு முறை

குறிஞ்சி நில ஒழுக்கத்தை எடுத்துக்கூறும் இக்குறிஞ்சிப் பாட்டானது மிகச்சிறந்த முறையில் கட்டமைக்கப்பட்டுள்ளது.

- 1 முதல் 34 வரையிலான அடிகள் ஒரே தொடராக அமைந்து, தோழி செவிலித்தாய்க்கு அறத்தொடு நிற்றல் செய்தியைத் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. (இது தலைவியின் உடல் மெலிவு கண்டு ஆற்றாது அந்நோய்க்கும் காரணங்காண செவிலி முயல்தலும், செவிலியின் துயர நிலையைக் கண்டு தலைவியின் உள்ளப் பாங்கினைத் தோழி செவிலிக்குக் கூறி, இவற்றிற்கெல்லாம் தீர்வாகத் தான் வெளியிடப்போகும் மறையினைக்கேட்டு வெகுளற்க எனச்செவிலியை வேண்டி மறையை வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளது.)

- 35 முதல் 106 வரையிலான அடிகளில் செவிலியின் ஏவலால் தோழியும் தலைவியும் தினைப்புனம் காத்தல், கிளியோட்டல், அருவி, சுனை போன்றவற்றில் விளையாடுதல், மலர் கொய்தல் முதலான செய்திகள் அழகாகச் சுட்டப்பட்டுள்ளன.

- 107 முதல் 142 வரையிலான அடிகள் தலைவன் வரும் காட்சியும், அவனைத் தொடர்ந்து வரும் வேட்டை நாய்களின் இயல்பும், தலைவன் தலைவி தோழி இருவரையும் வளைத்தலும் அவர்கள் அஞ்சி ஓடலும், பின் இருவரும் தலைவனுடன் உரையாடலும், தலைவன் தலைவியின் எழிலைப் பாராட்டுதல் போன்றவற்றை எடுத்தியம்புகின்றன.

- 143 முதல் 152 வரையிலான அடிகள் ஒரே தொடராக அமைந்து தலைவன் நாய்காத்து தலையளி செய்தமையைக் கூறப்பட்டுள்ளது.

- 153 முதல் 183 வரையிலான அடிகள் ஒரே தொடராக அமைந்து கானவர் செய்கையும், யானை புறமுதுகிடலும், தலைவியைத் தேற்றலும் போன்றவையை குறிப்பிடுகின்றது.

- 184 முதல் 214 வரையிலான அடிகள் தலைவனின் நாட்டின் இயல்பு, தோழி தலைவியைத் தெளிவித்தல் முதலான செய்திகள் தெளிவாக விளக்கப்பட்டுள்ளன.

- 215 முதல் 237 வரையிலான அடிகள் மலைப்பொழுதின் வருகையையும், தலைவன் மீளும் செய்திகளும் எடுத்துரைக்கிறது.

- ❖ 238 முதல் 245 வரையிலான அடிகள் தலைவனின் இயல்பினைச் சிறப்பாக குறிப்பிடுகிறது.

- ❖ 246 முதல் 261 வரையிலான அடிகள் ஒரே தொடராக அமைந்து இரவுக் குறியின்கண் வரும் தலைவனுக்கு ஏற்படும் துன்பங்களும், அதனால் தலைவிக்கு ஏற்படும் வருத்தமும் கூறப்பட்டு இத்தொடரானது முடிக்கப்பட்டுள்ளது. அதாவது இப்பாட்டின் முடிவானது தலைவியின் வருத்தத்துடனே நிறைவு பெற்றுள்ளதை உணரமுடிகிறது.

### 4.6.4 அறத்தொடு நிற்றல்

ஒத்த கிழவனும் கிழவியும் ஊழலால் ஒரு சோலையிலோ வேறு இடங்களிலோ எதிர்ப்பட்டு அன்பு வயப்படுவர். பின் அவர்களுக்குள்காதல் மணம் நிகழ்ந்து செம்புலப்பெயல் நீர் போல ஒன்றுபடுவர். இவ்வாறு அன்பால் ஒன்றுபட்ட இருவரும் குறியிடங்களில் கூடுவர். இக்குறியிடங்களை இரவுக்குறி, பகற்குறி என இரண்டு வகையாகத் தொல்காப்பியர்,

**“குறியெனப் படுவது இரவினும் பகலினும்**

**அறியத் தோன்றும் ஆற்றதென்ப”[44]**

என்ற நூற்பா வழி எடுத்துரைக்கின்றார். தலைவியின் இவ்வொழுக்கத்தால் அவளது மேனி, ஒழுக்கம் முதலியவற்றால் வேறுபடுவதற்குக் அவற்றிற்குக் காரணம் யாது? என்று தோழி எண்ணுவாள். தலைவியிடம் அது பற்றி வினவி பின் உண்மையை அறிந்து கொள்வாள்.

தலைவியின் மேனி வேறுபாட்டைக்கண்ட செவிலி அதன் காரணத்தை அறிய எண்ணி கட்டுவிச்சியை வரவழைத்து கேட்பாள். அவள் தலைவியின் மேனி வேறுபாட்டுக்கு தெய்வமே காரணம் என்பாள். பின் வெறியாட்டு நிகழும். அப்பொழுது தோழி, செவிலித் தாயிடம் தலைவியின் உடல் வேறுபாட்டுக்குக் காரணம் தலைவனே என்று உண்மையை உரைப்பாள். காதல் செய்த ஒருவனையே மணந்து இல்லறம் நிகழ்த்துதலே அறம் என்றெண்ணி அந்த அறத்தில் நிற்றலே ‘அறத்தொடு நிற்றல்’ என்பர். தோழிக்குத் தலைவி அறத்தொடு நிற்பாள். அதாவது நிகழ்ந்ததை நிகழ்ந்தவாறு உரைப்பாள். தோழி செவிலித் தாய்க்கும், செவிலி நற்றாய்க்கும், நற்றாய் தந்தை, தமையன், உறவினர் முதலியோருக்கும் அறத்தோடு நிற்கும் மரபே சங்க இலக்கியங்களில் காணப்படுகிறது. இங்கு

இந்நூலில் செவிலிக்குத் தோழி அறத்தோடு நிற்கும் நிலையை ஆசிரியர் தெளிவாக குறிப்பிட்டுள்ளார்.

### 4.6.5 அறத்தொடு நிற்றற்கு உரியவர்

அறத்தொடு நிற்றலுக்கு உரியவர் யார் யார் என்பதை நம்பியகப்பொருள்,

**"தலைவி பாங்கிற்கு அறத்தொடு நிற்கும்**
**பாங்கி செவிலிக்கு அறத்தொடு நிற்கும்**
**செவிலி நற்றாய்க்கு அறத்தொடு நிற்கும்**
**நற்றாய் தந்தை தன்னையர்க்கு அறத்தொடு**
**நிற்கும் என்ப நெறியுணர்ந்தோரே"**[45]

என்ற நூற்பா வழி சுட்டுகிறது. அதாவது தலைமகள் அறத்தொடு நிற்றற்கு பாங்கி உரியவள் என்றும், பாங்கி அறத்தொடு நிற்பதற்கு செவிலி உரியவள் என்றும், செவிலி அறத்தொடு நிற்றற்கு ஈன்றதாய் உரியவள் என்றும்,ஈன்றதாய் அறத்தொடு நிற்பதற்கு தலைமகளின் தந்தை, உடன்பிறந்தோர் உரியவர் எனவும் குறிப்பிடுவதை காணமுடிகிறது.

### 4.6.6 அறத்தொடு நிலை நிகழும் இடம்

அறத்தொடு நிற்றலுக்கும் சில கட்டுப்பாடுகள் சங்க காலத்தில் விதிக்கப்பட்டிருந்தன. இவ்வகையான அறத்தொடு நிலையானது எவ்விடங்களில் நிகழும் என்பதை,

**"ஆற்றூறு அஞ்சினும் அவன்வரைவு மறுப்பினும்**
**வேற்று வரைவு நேரினும் காப்புக்கை மிகினும்**
**ஆற்றூறத் தோன்றும் அறத்தொடு நிலையே"**[46]

என்ற நூற்பா புலப்படுத்துகிறது. தலைமகன் வரும் வழியில் தடை முதலான இடர்பாடு கொண்டு அஞ்சிய போதும், சுற்றத்தார் மணம் நிகழ்தலை மறுக்கும் போதும், பிற வகையில் வேற்று வரைவு நேரும் போதும், காவல் மிக்கு விளங்கும் இடத்தினும் அறத்தொடு நிற்றல் நிலை உண்டாகும் என்று வலியுறுத்துகிறது. இங்கு தோழி எவ்வாறு செவிலியிடம் அறத்தொடு நிற்றலில் பங்குபெறுகிறாள் என்பதை தெளிவாக விளக்கப்பட்டுள்ளது.

### 4.6.7 தோழி – சொல் விளக்கம்

தலைவியின் நலத்தைப் பெரிதும் விரும்புபவள் தோழியே. அத்தோழியைக் குறிக்க பல சொற்கள் உள்ளன. ‘எல்லா சொல்லும் பொருள் குறித்தனவே’ என்பார் தொல்காப்பியர். ஆனால் ஒரே பொருளைச் சுட்ட பல சொற்கள் வழங்கினாலும் அவற்றினிடையே சிறிதளவேனும் வேற்றுமை உண்டு என்பது மொழி நூலாரின் கருத்தாகும். தலைவியுடன் சிறப்போடு பழகியிருந்த துணைமைப் பாத்திரங்களைச் சுட்ட தோழி, இகுளை, பாங்கி, சிலதி, இணங்கி, துணைவி, சேடி, சகி போன்ற சொற்கள் பல்வேறு கால நிலைகளில் தோன்றிப் பயின்று வந்துள்ளன. இவற்றில் தோழி என்ற சொல்லே பெரும்பாலும் சங்க நூல்களில் பயன்படுத்தப்படுகின்றன. தோழியைப் பற்றிக் குறிப்பிடும் தொல்காப்பியர்,

**“ஒன்றித் தோன்றும் தோழி”**[47]

என்று கூறுகிறார். மேலும் எல்லாவற்றிற்கும் மேலாகத் தலைவியின் நல்வாழ்விற்காகவே தனது வாழ்வைத் தியாகம் செய்து வாழ்பவள் தோழி என்பதை,

**“தாங்கரும் சிறப்பின் தோழி”**[48]

என்ற தொல்காப்பியத் தொடரால் எடுத்துரைக்கப்பட்டுள்ளது. தோழியே தலைவியின் நலத்தைப் பெரிதும் விரும்புபவளாக சுட்டப்படுவதை அறிய முடிகிறது.

### 4.6.8 செவிலியின் நிலை

குறிஞ்சிப்பாட்டின் தொடக்கமானது தோழி செவிலியை முன்னிறுத்தி தலைவியின் நிலையைக் கூறுவதாக அமைந்துள்ளது. தாயே! நான் கூறுவதைக் கேள். என் தோழியின் அணிகளை நெகிழச் செய்த நோய் யாது என்று கட்டுவிச்சியை அழைத்துக் கேட்டாய். அவள் இந்நோய் தெய்வத்தால் உண்டாயிற்று என்றாள். அதனால் நீ இறைவனைப் போற்றி வாழ்த்தி வணங்கினாய், பின் மலர்களைக் கொண்டு அர்ச்சனை செய்தாய். இருப்பினும் அந்நோய் தணியவில்லை. ஆனால் மனஞ்சுழன்று நீயும் வருந்துகின்றாய் என்று தோழி செவிலியின் நிலையைக் கூறுவதாக அமைந்துள்ளதை,

**“விறல்இழை நெகிழ்த்த வீவருங் கடுநோய்**
**எய்யா மையலை நீயும் வருந்துதி”**[49]

என்ற குறிஞ்சிப்பாட்டடிகள் குறிப்பிடுகின்றன.‘வீவருங்கடுநோய்’ என்றது தலைவன் மார்பினையன்றி பிற மருந்தாலும் நீ நிகழ்த்தும் வெறியாட்டாலும் தீராத காமநோய் என்பதை,

**“பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை**
**தன்னோய்க்குத் தானே மருந்து”[50]**

என்று சிறப்புடையத் தலைமகன் கூற்றாகக் கூறப்படினும் காமநோய் இருவருக்கும் ஒத்தலின் தலைவியின் நோய்க்கு தலைவன் மார்பே மருந்து என்று வள்ளுவர் கூற்றாலும் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

### 4.6.9 தலைவியின் நிலையைத் தோழியுரைத்தல்

தலைவனும் தலைவியும் காதல் கொள்கின்றனர். இதனைத் தோழியிடம் தலைவி உரைக்கின்றாள். அக்கூற்றினைத் தோழி செவிலியிடம் உரைப்பதாக அமைந்துள்ளது. தாய் தந்தையராகிய இருமுதுகுரவரும் தாம் இசைந்தவர்க்கு என்னைக் கொடுப்போம் என்று எண்ணுகின்ற அவரது காதலும், எனது மடனும் ஒரு சேரக்கெடும்படி, நெடிய தேரையுடைய என் தந்தையின் கடப்பதற்கரிய அரியக் காவலைக் கடந்து யாம் தேர்ந்து கொண்ட களவு மணம் இது என்று யாமே தாய்க்கு அறிவுறுத்தின் அது புகழேயன்றி பழியாகாது. அவ்வாறு யாம் அறிவுறுத்தினப் பின்னர் அவர்கள் நெறிப்பட்டுவாராராயினும் உயிர்போகும் வரை ஆற்றியிருப்பேன். அங்ஙனம் இருந்தபோது இம்மைமாறி மறுமை எய்தியபோதும் இக்கூட்டம் நமக்கு எய்துவது உறுதி என்று (குறிஞ்சி 19-24) கூறினாள் தலைவி. எண்ணம் உறுதியாயிருப்பின் எண்ணியதை எய்துதல் உறுதி என்பதை,

**“இம்மை மாறி மறுமை ஆயினும்**
**நீயா கியர்என் கணவனை**
**யானா கியர்நின் நெஞ்சுநேர் பவளே”[51]**

என்ற குறுந்தொகைப்பாடல் குறிப்பிடுகிறது. எண்ணம் சிறந்ததாயின் அது நிறைவேறும் என்பதையும் புலப்படுத்துகிறது. மேலும்,

**“மானமர் நோக்கங் கலங்கிக் கையற்று**
**ஆனாச் சிறுமையன் இவளுந் தேம்பும்”[52]**

என்ற வரிகள் பெண்மான்களும் விரும்புதற்குக் காரணமான அழகுடைய தன் விழிகள் கலங்கி ஆற்ற இயலாத துன்பமுடையவளாக என் தோழி (தலைவி) வருந்துகிறாள் என்று தோழி உணர்த்துவதைக் காணமுடிகிறது.

ஒருவனுக்கு தன் மகளைக் கொடுக்க எண்ணுபவன் கொடுத்தால் நன்மையே உண்டாகும் எனக்கருதி ஆராய்ந்தறிந்து பிறரை அவனுடன் ஒப்பிட்டுப் பார்த்து எண்ணித்துணிதலே இயல்பாகும். அவ்வாறாக நாங்கள் எண்ணாது துணிந்து மேற்கொண்ட இக்களவு நேர்ந்த விதத்தை உரைக்கின்றேன்! அதைக்கேட்டு அன்னையே! சினம் கொள்ளாதே! என்று தோழி செவிலியிடம் உரைப்பதாக அமைக்கப்பட்டுள்ளது. அக்களவு மேற்கொண்ட தலைமகனுக்கு அமைய வேண்டிய பண்புகளாக,

**“பிறப்பே குடிமை ஆண்மை யாண்டொடு**
**உருவு நிறைந்த காம வாயில்**
**நிறையே அருளே உணர்வொடு திருவென**
**முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே”**[53]

என்று தொல்காப்பியம் குறிப்பிடுகிறது. அதாவது தலைமகனுக்கு பிறப்பு ஒழுக்கம் குடியாண்மை, பருவம், உருவம், அன்புடைமை, நிறையுடைமை, அருளுடைமை, அறிவுடைமை, திருவுடைமை என்ற பத்து பண்புகளும் அமைய வேண்டும் என்பதை வலியுறுத்துகிறது. இப்பத்து பண்புகளும் தலைவனிடம் இருந்ததாகத் தோழி சுட்டுவதை இலக்கியங்கள் வாயிலாக உணர்த்தப்பட்டுள்ளன.

### 4.6.10 தினைப்புனம் காத்தலும் நீராடலும்

செவிலியின் ஏவலால் தோழியும் தலைவியும் தினைப்புனம் காக்கச் சென்றனர். அங்கு ஆரவாரம் மிகுந்த மரத்தின் உச்சியில் பரண் அமைத்து அதில் ஏறி அமர்ந்திருந்து அம்மலைச் சாரலில் இருக்கும் பிரம்பினால் அழகாகப் பின்னிய,‘தழல்’ என்னும் கருவியும், தட்டை என்ற கருவியும், குளிர் என்ற கருவியும் இவை போன்ற பிற கருவிகளையும் கொண்டு கதிரவனின் சுடர்கள் சுடுகின்ற வெம்மை விளங்கும் உச்சிப் பொழுதில் கிளிகளை ஓட்டினர். அப்பொழுது மேகமானது முரசம் போன்ற இடியுடன் மின்னும் மின்னல் முதலியவற்றுடன் எம்பெருமான் மலைமேல் மழை பொழிந்தது. அப்பொழுது அங்குள்ள வெண்மையான அருவியில் விருப்பமுடன் விளையாடினர். நீராடி மலையில் அவர்கள் விரும்பியவற்றைப்

பாடி கரிய கூந்தலின் நீரைப் பிழிந்து ஈரம் உலர்த்திச் சிவந்த கண்ணை உடையவர்களாயினர். பின் அங்குள்ள 99 வகையான மலர்களைப் பறித்து அங்குள்ள பாறையில் குவித்து பூவுடன் தழையையும் சேர்த்துத்தொடுத்து உடுத்திப் பூமாலையை முடியிலே சூடிக்கொண்டு அசோக மலர் நிழலில் மகிழ்ச்சியாக விளையாடியதை,

**"கிள்ளை ஒப்பியும் கிளையிதழ் பறியாப்**
**பைவிரி அல்குற் கொய்தழை தைஇப்**
**பல்வேறுருவின் வனப்பமை கோதையெம்**
**மெல்லிரு முச்சிக் கவின் பெறக் காட்டி**
**எரியவிர் உருவின் அங்குழைச் செயலைத்**
**தாதுபடு தண்ணிழல் இருந்தனமாக"[54]**

என்ற அடிகள் உணர்த்துகின்றன. மேலும், குறிஞ்சித் திணைக்குரிய பூ மட்டுமல்லாது பிறத்திணை பூக்களும் மயங்கி வரலாம் என்பதை,

**"எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்**
**அந்நிலம் பொழுதொடு வாரா வாயினும்**
**வந்த நிலத்தின் பயத்தவாகும்"[55]**

என்ற தொல்காப்பிய நூற்பா உணர்த்துகிறது. அதாவது குறிஞ்சி நிலத்தில் அந்நிலத்துப் பூக்கள் மட்டுமின்றி பிற திணைக்குரிய பூக்களும், பறவைகளும் மயங்கி வந்துள்ளதை அறியமுடிகிறது.

### 4.6.11 தலைவனின் தோற்றமும் செய்கையும்

இப்பாட்டு தலைவனின் தோற்றத்தை அழகாக எடுத்தியம்புகிறது. பலமுறையும் எண்ணெய் வார்க்கப்பெற்ற நல்ல கரிய நிறத்தையுடைய சந்தனத்தை மணக்கும்படி பூசிய சிக்கு விடுத்த முடியினையும், பல்வேறு நிறமுடைய மணம் பொருந்திய மலர்களைத் தொடுத்த குளிர்ந்த மாலையையும் அணிந்து முருகனோ எனக் கண்டோர் அச்சம் கொள்ளும்படி தோற்றமளித்தான். பின் தலைமயிரில் பிச்சிப்பூவால் ஆன மாலையைச் சுற்றித் தீச்சுடர் போன்ற அசோகந்தளிரைத் தன் காதிலே செருகிக் கொண்டு நறிய மலர் மாலையும் அணிகளும் பொருந்திய வண்ணம் மிகவும் அழகாகத் தோற்றமளித்தான்.

**"தாமரைக் கொழுமுறித் தாதுபடு செருமலர்க்**

**காமரு குவளைக் கழுநீர் மாமலர்ப்**

**பைந்தளிர்ப் படலை”**[56]

அதாவது பழங்காலத்தில் ஆண்கள் மலர் மாலையணிதல் வழக்கமாயிற்று. தாமரைக் கொழு இழையினையும், அதன் மலரினையும், குவளை மலரையும் கழுநீர் மலரினையும் உடைய மாலையைத் தலைவன் அணிந்துள்ளதை எடுத்துக் கூறுகிறது.

## 4.6.12 தோழிக்கூற்று

தலைவன் மாலையை அணிந்ததோடு மட்டுமின்றி தனது கையில் வில்லையும் காலில் வீரக்கழலும் கட்டியிருந்தான். அப்போது ஒளியுடைய நாய் எம்மை வளைத்துக் கொண்டது என்று தோழி செவிலியிடம் கூறுவதாக அமைந்துள்ளது. அதனால் நாங்கள் நடுங்கி அசோகத் தண்ணிழல் கீழ் இருக்க முடியாதபடி விரைவாக எழுந்து வேறு இடத்திற்கு செல்ல விரைந்தோம். அப்போது அழகு மிக்க ஒருவன் எம்மிடம் வந்து எங்கள் அழகினைப் பாராட்டி “ஒளியுடைய வளையலையும் மென்மையான சாயலையும் அழகிய வளைந்த கொப்பூழையும் குளிர்ந்த கண்ணையும் உடைய இளையீர்! இங்குத் தப்பி வந்த கெடுதியும் உடையேன் எனத் தலைவன் கூறியதாகத் தோழி செவிலியிடம் உரைத்தாள். இங்கு கெடுதி வினாதல் என்பது ஒரு துறையாகும். கெடுதியாவது யானை, புலி, மான் முதலியனவும், நெஞ்சு உணர்வும் இழந்தேன் கண்டீரோ என வினவுவதாக அமைந்துள்ளது. தலைவன் தன் நலத்தைப் பாராட்டினான் என்பதை,

**“நில்என நிறுத்தான் நிறுத்தே வந்து**

**நுதலும் முகனும் தோளும் கண்ணும்**

**அனையன பல பாராட்டி”**[57]

என்ற கலித்தொகையாலும்,

**“நறைபரந்த சாந்தம் அறவெறிந்து நாளால்**

**உறையெதிர்ந்து வித்தியவூழ்எனல் - பிறை எதிர்ந்த**

**தாமரைபோல் வாண்முகத்துத் தாழ்குழலீர் காணீரோ**

**ஏமரை போந்தன ஈண்டு”**[58]

என்ற பாடலடிகளாலும் அறிய முடிகிறது. இவற்றிலிருந்து சங்க காலத்தில் தலைவன் முதலில் தலைவியிடம் நேரடியாகப் பேசத் தொடங்காமல் மான்,

புலி, யானை போன்றவற்றைக் கண்டீரோ? என வினவுவதாக அமைந்துள்ளதைக் காணமுடிகிறது.

### 4.6.13 கானவர் செய்கையும் தலைவியின் நிலையும்

குறிஞ்சிப்பாட்டில் கானவரின் செயலால் தலைவிக்கு ஏற்பட்ட நிலையை நன்கு விளக்கப்பட்டுள்ளது. கானவர்கள் தினையின் தாளால் வேயப்பட்ட குடிலிலுள்ள மானின் பார்வையுடைய மனைவி கொடுத்தக் கள்ளை உண்டு மயங்கி காவல் தொழிலை மறந்தனர். அப்போது தினைப்புனத்தில் யானை வந்து மிதித்ததால் தினை குறைந்தது. அதைப் பொறுக்க மாட்டாத கானவர் சினம் கொண்டு வில்லை நாணேற்றிக்கணை எய்தும், சீழ்க்கை எழுப்பியும் தட்டை முதலியவற்றைக் கொண்டு ஒலி எழுப்பியும் அவ்யானையை ஓட்டினர். கள்ளுண்டால் தம்மை மறத்தலுண்டு என்பதை,

**"கையறி யாமை உடைத்தே பொருள்கொடுத்து**
**மெய்யறி யாமை கொளல்"[59]**

என்னும் குறளாலும், யானை மிதித்து பயிர்கள் அழிவதை,

**"காயநெல் அறுத்துக் கவளம் கொளினே**
**மாநிறை வில்லதும் பன்னாட் காகும்**

**..........................................................................**
**..........................................................................**
**யானை புக்க புலம்போலத்**
**தானும் உண்ணான் உலகமும் கெடுமே"[60]**

என்ற புறநானூற்று அடிகளும் புலப்படுத்துகிறது. கானவர் விரட்டுவதால் அக்களிரானது மதச்செருக்கோடு மரங்களை முறித்துக்கொண்டு வந்தது. அதைக்கண்ட அவர்கள் தப்பியோடுவதற்கு வழியறியாது விரைந்தோடி நாண் முதலியவற்றை மறந்து தலைவனைப் பொருந்தி நடுங்கி நின்றனர். அப்பொழுது அவன் தலைவியை நோக்கி கூந்தலையுடையவளே! நீ தடுமாறாதே! சிறிதும் அஞ்சாதே! யான் உன் அழகின் நலத்தை நுகர்வேன்! என்று கூறி அவன் நெற்றியின் வியர்வையைத் துடைத்தவனாய் என் முகத்தைப் பார்த்துப் புன்முறுவல் கொண்டான். பின் தலைவனால் அன்பு செய்யப்பட்ட நிலையில் தன்கேயுரிய நாணமும் அச்சமும் கொண்ட

தலைவியை அணைத்துத் தழுவினான். பின் தலைவியிடம் இல்லறத்தின் மேன்மையை எடுத்துக்கூறி, விருந்தினரை ஓம்பும் தன்மையையும் தலைவன் எடுத்துரைத்தான். இதேப்போல் விருந்தினரை ஓம்பும் சிறப்பினை,

**“ஆற்றுநர்க் களிப்போர் அறவிலை பகர்வோர்**
**ஆற்றா மாக்கள் அரும்பசி களைவோர்**
**மேற்றே உலகின் மெய்ந்நெறி வாழ்க்கை**
**மண்டினி ஞாலத்து வாழ்வோர்க் கெல்லாம்**
**உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே**
**உயிர்க் கொடை பூண்ட உரவோ யாகித்**
**கயக்கறு நல்லறங் கண்டனை”[61]**

என்று மணிமேகலையும் குறிப்பிடுகிறது. இங்கு இல்லறத்தை உயர்த்திப் பேசும் தமிழ்ப் பண்பாடு கபிலரால் பேசப்படுகிறது. மேலும்,

**“உறக்குந் துணைய தோர் ஆலம்வித் தீண்டி**
**இறப்ப நிழற்பயந் தாஅங்கு அறப்பயனும்**
**தான்சிறி தாயினும் தக்கார்கைப் பட்டக்கால்**
**வான் சிறிதாப் போர்த்து விடும்”[62]**

என்று நாலடியாரும் விருந்தோம்பலின் சிறப்புகளை எடுத்தியம்புகிறது.

இயற்கைப் புணர்ச்சி தொடங்கிய நாள் முதல் இவளை நாடி இரவுக்குறியில் ஒவ்வொரு நாளும் தப்பாமல் வருவான். அவ்வாறு வரும்போதெல்லாம் காவலர் வருதலாலும் செவிலியான நீ விழித்தலாலும், நிலவு அறிந்தலாலும் இடையூற்றை அடைந்து இவளது மெல்லிய தோளில் துயில் கொள்ளாதவனாய் வறிதே திரும்பி செல்வான். அங்ஙனம் திரும்பினும் வெறுப்புக் கொள்ளான். இப்படி எளிமையாய் வந்து ஒழுகுபவன் இளமை நீங்கியவனும் அல்லன். செல்வம் மிகவுடையவனாயினும் செருக்குக் கொள்ளாத தன்மையுடையவன் தலைவன் என்று தோழி செவிலியிடம் கூறுவதாக இப்பாட்டு அமைக்கப்பட்டுள்ளதை காணமுடிகிறது.

## 4.7 நெடுநெல்வாடையின் அமைப்பு

சங்க இலக்கியங்கள் பாடுபொருளால் அகம் புறம் எனப்பாகுபாடு செய்யப்பட்டிருப்பினும், சில நூல்கள் அகத்துறையையும் புறத்துறையையும் ஒருங்கே பெற்றுச் சிறப்புற்று விளங்குகின்றன. அவ்வகையில் பத்துப்பாட்டு

நூல்களில் அகமும் புறமும் இயைந்த நூலாக நெடுநல்வாடைத் திகழ்கிறது. இந்நூல் பத்துப்பாட்டில் ஏழாவதாக வைத்துப் போற்றப்படுகிறது. இது தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டிய நெடுஞ்செழியனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரர் பாடியுள்ளார். இது 'வாகைத்திணையில்' அமைத்து கூதிர்ப்பாசறை என்னும் துறையை உள்ளடக்கியதாக அமைந்துள்ளது. இப்பாடல் அகவற்பாவால் இயற்றப்பட்டுள்ளது. இதில் குறிப்பிடும் பருவம் பின்பனி காலமாகும். (அதாவது ஐப்பசி, கார்த்திகை மாதமாகும்). மேலும் அகவற்பாவால் ஆன இப்பாட்டின் அமைப்பினையும் பாடுபொருளின் தன்மையையும் கீழ்க்கண்டவாறு காணலாம்.

### 4.7.1 நெடுநல்வாடை – பெயர்க்காரணம்

தலைவிக்குப் தலைவனின் பிரிவுத்துயரால் வாடைக்காற்று நெடியதாகவும், பாசறையில் போர்மேற்கொண்ட வேந்தனுக்கு வெற்றிபெற வாடைக்காற்று நல்லதாகவும் அமைந்துள்ளது. இதனால் இந்நூல் நெடுநல்வாடை எனப்பெயர் பெறுவதாயிற்று. நெடிய நல்ல வாடை எனப்பொருள்படுமாறு விரிந்து அமைந்துள்ளன. நெடுநல்வாடை அகமா புறமா என ஐயத்திற்கு இடமிருப்பினும் வ.சுப.மாணிக்கம், புறநானூறு **'தீங்கனி யிரவமொடு வேம்பு மனைச் செரீ இ (281), 'வேம்பு சினை யொடிப்பவும் (296)'**, என்ற சான்றுகளைக் காட்டி பேய் தீண்டாது காப்பு செய்தற்கு பயன்பட்டுள்ளமையைக் குறிப்பிடுகிறார். இவர் நெடுநல்வாடையிலும் **'வேம்புதலை யாத்த'** என்ற தொடருக்கு விழுப்புண் காணப்போர் வேந்தனுக்கு வேம்பினால் வேலால் புண்ணுடையாளர்களைச் சுட்டிக்காட்டினான் என்று பொருள்கூறி இது அகநூல்"[63] என்று குறிப்பிடுகிறார். மேலும்,

"நெடுநல்வாடை அகப்பாட்டு எனவும், முல்லைத் திணைக்குரியது எனவும், முல்லைக்கூறு முகத்தால் அதன் புறமாகிய வஞ்சித்திணையையும் கொண்டது"[64] என்று செ.வேங்கடராம செட்டியார் குறிப்பிடுகிறார். ஒவ்வொரு அறிஞர்களும் கூறும் கருத்துகளிலிருந்து நெடுநல்வாடை அகமும் புறமும் கலந்த நூல் என்பது தெளிவாகிறது.

### 4.7.2 நூல் அமைப்பு

தலைவியின் பிரிவுத்துயர் நீங்க போர்க்களத்துப் பாசறையினின்றும் தலைவன் வெற்றி பெற்றுத்திரும்பும் வகையில் மேற்கொண்ட தொழில்

இன்னே முடிவதாக என வேண்டும் வகையில் பாடலை நக்கீரர் அமைத்துள்ளார். இதுவே இப்பாட்டின் மையப்பொருளாக அமைந்துள்ளது. பாட்டின் முழு அமைப்பும் கொற்றவையை வழிபட்டு வேண்டுவதாக அமைந்துள்ளது. ‘வையகம் பனிப்ப வலனேர்ப வளைஇ’ எனத்தொடங்கி கூதிரின் நிலையை விளக்கிவருகிறது. முதல் 12 அடிகள் இந்நிலைக்கு விளக்கமாக அமைகிறது.

இப்பாடலின் அமைப்பு தொடர்ந்து வருகின்ற வகையில் எவ்வித இணைப்பானுமின்றி ஒரே முற்றுத் தொடராக அமைந்துள்ளது. ‘இன்னே முடிவதாக’ (168) என்பது வினை முடிவினைத் தருவதாக அமைந்துள்ளது. இப்பாட்டில் தொடர் உவமைகள் அமைந்து காணப்படுகின்றது. இது பொருள் விளக்கம் தருவதோடு கேட்பதற்கு இன்பத்தினை நல்குகிறது.

**“வரைகண் டன்ன தோன்றல் வரைசேர்பு**
**வில்கிடந் தன்ன கொடிய பல்வயின்**
**வெள்ளியன்ன விளங்குஞ் சுதையுரீஇ**
**மணிகண் டன்ன மாத்திரள் திண்காழ்ச்**
**செம்பியன் றன்ன செய்வுறு நெடுஞ்சுவர்”**[65]

என்ற அடிகளில் தொடர் உவமைகள் அமைந்துள்ளதைக் காணமுடிகிறது.

### 4.7.3 பாடல் அமைப்பு

188 அடிகளில் இப்பாடல் மிகவும் சிறப்பாக அமைக்கப்பட்டுள்ளது.

- 1 முதல் 72 அடிகளில் கூதிர்கால நிலை சிறப்பாகக் கூறப்பட்டுள்ளது. (இதில் கோவலர் நிலை, பறவை விலங்குகளின் நிலை, இயற்கை எழில் மகளிரின் மாலைகால வழிபாடு, மகளிரின் நிலை போன்றவை எடுத்துரைக்கப்பட்டுள்ளன.)

- 72 மதல் 100 வரையிலான அடிகளில் அரண்மனையின் அமைப்பைச் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

- 101 முதல் 134 அடிகள் அந்தபுரம் பற்றிய செய்திகள் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. (இதில் அரசியின் அறை, கட்டில் அலங்காரம் போன்றவற்றைத் தெளிவாகக் கூறப்பட்டுள்ளன).

❖ 135 முதல் 168 வரையிலான அடிகள் ஒரே தொடராக அமைந்து தலைவனைப் பிரிந்த தலைவியின் நிலை, கொற்றவை வழிபாடு போன்றவற்றை எடுத்தியம்புகிறது.

❖ 169 முதல் 188 வரையிலான அடிகளில் புறச்செய்திகள் தெளிவாகக் கூறப்பட்டுள்ளன. அதாவது போரில் விழுப்புண்பட்ட வீரர்களின் நிலையையும், வாடைக்காற்று வீசுதலும், விழுப்புண்ணைக்கண்ட வேந்தனின் மன நிலையையும் நன்கு விளக்கப்பட்டுள்ளன.

### 4.7.4 வாடையின் தன்மையும் விளைவும்

இந்நூல் வாடைக்காற்றின் தன்மையைச் சிறப்பித்துக் கூறுவது போலவேறெந்த நூலும் சிறப்பித்துக் கூறவில்லை. தலைவியின் அரண்மனையினுள்ளும், தலைவனின் போர்களத்துப் பாசறையினுள்ளும் ஊடுருவிச் சென்று முரண்பட்ட செய்திகளை அமைத்துப் பாடலை நயம்பட விவரித்துச் செல்வது இவ்வாடைக்காற்றாகும். நெடுநல்வாடையில் வாடைக்காற்றை,

1. முல்லை நிலத்துக் காடுகளில் வாடை வீசுதல்
2. பெருநகரத்துள் வாடை வீசுதல்
3. பாசறையில் வாடை வீசுதல் என மூன்று நிலைகளில் காண நேர்கிறது.

### 4.7.5 முல்லை நிலத்துக் காடுகளில் வாடை

வாடைக்காற்று முல்லை நிலத்துக் காடுகளில் வீசி இடையர்களையும் அவர்கள் மேய்க்கும் பசு, ஆடு மற்றும் எருமைகளையும் தாக்கி வருத்துகிறது. இடையர்கள் குளிரைத் தாங்காமல் பலரு கூடி நெருப்பு மூட்டி, தணலிலே கையைக் காட்டித் தம் கன்னங்களில் வைத்துக் கொண்டனர். இருப்பினும் அவர்களின் பற்கள் பறைகொட்டி நடுங்குவதை,

**“கைக்கொள் கொள்ளியர் கவுள் புடையூஉ நடுங்க”**[66]

என்ற அடி வாயிலாக உணர்த்தப்படுகிறது. மேலும்,

**“செறிநறுந் தயிரும் பாலும் வெண்ணெயும் சேர்ந்த நெய்யும்**
**உறியொடு வாரி யுண்டு குரந்தொடு மருத முந்தி**
**மறியுடைய யாயர் மாதர் வனைதுகில் வாருநீராற்**
**பொறிவரி யரவி னாடும் புனிதனும் போலுமன்றே”**[67]

என்ற கம்பர் கூற்றால் மலையிடத்தே பெய்த மலையாற் பெருகிய வெள்ளம் அக்குறிஞ்சியை அடுத்துள்ள முல்லைநிலத்தில் வாழ்வோராகிய கோவலரையே முதலில் வருத்தமடைய செய்ததை உணரமுடிகிறது. மனிதர்களை மட்டுமின்றி முல்லைநிலக் காட்டிலுள்ள பறவைகள் மற்றும் விலங்குகளையும் வாடைக்காற்று வருத்தியதை (9-12) அடிகளில் எடுத்துரைக்கப்பட்டுள்ளது. இவ்வடிகள் விலங்குகள் மேய்தல் தொழிலை மறந்ததாகவும், குரங்குகள் குளிரால் நடுங்கியதாகவும், பறவைகள் வாடை மிகுதியால் நிலத்தில் விழுந்ததாகவும் பசுக்கள் பால் உண்ணாதபடி உதைத்ததாகவும் குறிப்பிடுகின்றன.

**"மந்திதுயில் வுற்றமுறை வன்கடுவன் அங்கத்**
**திந்திய மவித்ததனி யோகரின் இருந்த"[68]**

என்ற கம்பர் வரிகளால் ஏனைய விலங்குகளைக் காட்டிலும் குரங்குகள் குளிருக்கு மிகவும் வருந்தும் இயல்புடையது என்பதை எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

### 4.7.6 பெருநகரத்துள் வாடை

வாடைக்காற்றானது காட்டில் மட்டுமின்றி பெருநகரத்தினுளுள்ளும் வீசுகிறது. இவ்வாடையால் நகரத்திலுள்ள மக்களும், இல்லத்தில் வாழும் பறவைகளும் வருத்தமடைந்தன. ஆனால் கள்ளுண்டு உணர்விழந்தவர்கள் மட்டுமே குளிரையும் சிறுதூறலையும் பொருட்படுத்தாமல் இரவில் திரிகின்றார்கள். அங்கு வாழும் புறாக்கள் இறையைத் தேடி வெளியில் செல்லாமல் ஒரே இடத்தில் செயலற்று, காலை மாற்றி மாற்றி வைத்தபடி இருக்கிறது என்பதை (45-48) அடிகளில் குறிப்பிடப்பட்டுள்ளது.

### 4.7.7 பாசறையுள் வாடை

வாடைக்காற்றானது பாசறையினுள்ளும் வீசுவதாக நெடுநல்வாடை குறிப்பிடுகிறது. இக்காற்று வீசுந்தோறும் பாண்டிலில் (அகல்விளக்கு) எரியும் சுடர்கள் அசைந்து தெற்குப் பக்கம் சாய்ந்து எரிகின்றன. வாடைக்காற்றால் தலைவனின் மேலாடை சரிகிறது. மழைத்தூறலும் காற்றும் கலந்து வேந்தனின் வெண்கொற்றக் குடையைத் தாக்கித் 'தவ்' என்ற ஒலியை உண்டாக்குகிறது. இப்பாட்டில் வாடைக்காற்றின் ஒலி 'தவ்' என்று ஒலிப்பதாக ஆசிரியர் சுட்டுகிறார். அதாவது நகரத்தினுள் வீசும் காற்றை 'கல்' என்ற ஒலியாலும், பாசறையில் வீசும் காற்றை 'தவ்' என்ற ஒலியாலும் சுட்டிக்காட்டியுள்ளார். கல், தவ் என்ற ஒலிகளைக் குறித்து,

**“கல்லென் துவலை தூவலின் யாவரும்”[69]**

**“தவ்வென்று அசைஇ தாதுளி மறைப்ப”[70]**

என்ற அடிகள் குறிப்பிடுவதையும் காணலாம். மேலும் வாடைக்காற்றானது மலையையும் குளிர்வித்தது என்பதை,

**“குன்று குளிர்ப்பன்ன கூதிர்ப் பன்னாள்”[71]**

என்ற வரி சுட்டுகிறது. இவற்றிலிருந்து வாடைக்காற்றானது முல்லைக்காடு, பெருநகரம், பாசறை போன்ற இடங்களில் வீசி அங்குள்ள கோவலர்கள், பறவைகள் விலங்குகள், வீரர்கள் போன்ற அனைவரையும் வருத்தமுறச் செய்ததை அறிய முடிகின்றது.

### 4.7.8 நெடுநல்வாடையின் சிறப்புகள்

- நெடுநல்வாடை என்ற பெயரில் நெடு, நல் என்னும் இரு அடைமொழிகள் உள்ளன. இது இருவேறு உள்ளங்களையும் அந்தந்த உள்ளங்களின் உணர்வுகளையும் புலப்படுத்துவனவாக உள்ளன.
- வையகம் என்ற சொல்லால் தொடங்கியிருப்பது போற்றுதற்குரிய வழக்காக உள்ளது. இந்நூலாசிரியரின் வேறுநூலான முருகாற்றுப்படையும் ‘உலகமுகப்ப’ என்றே தொடங்கப்பட்டுள்ளது. நெடுநல்வாடையில் ஓவியம் குறித்து மூன்று இடங்களில் பேசப்படுகிறது. அதாவது, ‘புனையாஓவியம்’, ‘உருவப்பல்பூ’, புதுவது இயன்ற மெழுகு செய்படமிசை என்றமைந்துள்ளன.
- நச்சினார்க்கினியரையே திகைக்கச் செய்த பாடலாக நெடுநல்வாடை அமைந்துள்ளது இவைகளே இதன் சிறப்புகளாகும்.

### 4.7.9. அரண்மனையின் அமைப்பு

72 முதல் 100 வரையிலான அடிகளில் அரண்மனையின் அமைப்பினை சிறப்பாகக் கூறப்பட்டுள்ளது. சித்திரை மாதத்தின் இடைப்பட்ட பத்து நாட்களில் கதிரவன் நிழல் சாயாமல் நேராக இயங்குகின்ற ஒரு நாளைச் சிற்ப நூல் வல்லார் அரண்மனை அமைப்பதற்குரிய நன்னாளாக குறித்தனர். அந்நாளில் திசைகளையும் அத்திசைகளில் நிற்றற்குரிய தெய்வங்களையும் அளந்து அறுதியிட்டு நிறுவினர். அவர்கள் அரசர்கள் வாழ்வதற்கேற்ற மனைகளையும், வாயில்களையும் மண்டபங்களையும் பிறவற்றையும் உள்ளடக்கிய மதில்களை எழுப்பினர். இரும்பு ஆணிகள் பட்டங்கள் ஆகியவற்றால் செறிக்கப்பட்டதும், சாதிலிங்கம் பூசப்பெற்றதும் இரட்டையானதும், தலைக்கோல் பொருத்தப்பெற்றதும் வெண் சிறு கடுகு

அப்பி வைக்கப்பெற்றதுமாகிய கதவுகளையடைய உயர்ந்த நிலைகளை அமைத்தனர். மரத்தாலாகிய பொருள்களுக்கு நிறமூட்டுதற்கு செவ்வரக்கு பூசுதல் வழக்கம் என்பதை,

**“உள்ளரக் கெறிந்த வுருக்குறு போர்வைக்**

**கருந்தொழில் வினைஞர் கைவினை முற்றி**

**ஊர்ந்து பெயர்பெற்ற எழினடைப் பாகரொடு”[72]**

என்ற சிறுபாணாற்றுப்படை அடிகளால் உணரமுடிகிறது. கதவுகளில் தெய்வம் உரையும் என்பது பண்டைத் தமிழரின் நம்பிக்கையாகும். அதனால் அக்கதவுகளுக்கு ஐயவி நெய் முதலியன அணிதல் வழக்கமாகும். இதனை,

**“தொல்வழி நிலைஇய அணங்குடை நெடுநிலை**

**நெய்படக் கரிந்த திண்போர்க் கதவின்**

**மழையாடு மலையி னிவந்த மாடம்”[73]**

என்ற அடிகளாலும்,

**“நெய்யோ டிமைக்கும் ஐயவித் திரள்காழ்**

**விளங்கு நகர் விளங்க”[74]**

என்ற அடிகளாலும் உணர்த்தப்படுகிறது. உயர்த்திய கொடியோடு யானைகள் செல்லத்தக்க உயர்ந்த வாயில்களையுடையது அரண்மனை. அது திருமகள் நிலைபெற்ற மணல் நிறைந்த முன்றிலை உடையது. அவ்விடங்களில் அன்னமும் கவரிமானும் விளையாடும் அங்கு குதிரைகள் கனைக்கும் ஓசையும் நீர்க்குழாய் வழியே விழும் நீரின் ஓசையும், சேர்ந்து அருவியின் ஓசைபோலத் தோன்றும். இவ்வாறு பல்வேறு வகையான ஓசைகள் ஒன்று சேர்ந்து ஒரு மலையிடத்தே உண்டாகும் ஓசை போலத் தோன்றும் இயல்பினை உடையது அரண்மனை. இங்கு உயர்ந்த களிற்றியானையின் பிடரிலே நாட்டி உயர்த்திய கொடியோடே அவ்யானை புகுதற்குத் தகுந்த உயரமுடையதாக அரண்மனைக் கோபுர வாயில் அமைக்கப்பட்டிருந்ததைச் சுட்டுகிறது. வெற்றிக் கொடியை யானை மீது உயர்த்தி ஊர்வலஞ் செய்தல் மரபாகும். இதனையே,

**“கொடி நுடங்கு நிலைய கொள்கிறது மிடைந்து”[75]**

**“கோல்களிறு மீமிசைக் கொடி விசும்பு நிழற்றும்”[76]**

போன்ற அடிகளால் புலப்படுத்துகின்றன. அதாவது பழங்காலத்தில் மிகவும் உயர்ந்த அரண்மனைகள் இருந்ததை இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன.

### 4.7.10 அரசியின் அறை

பல சிறப்புகளையுடைய அரண்மனையில் பாண்டிய மன்னனேயன்றி ஆடவர் யாரும் அணுகுதற்குரிய காவலையுடையதாய் நல்லதோர் இருக்கை உண்டு. அதுவே அரசியின் இருக்கையாகும். அங்கு யவனரால் செய்யப்பட்ட பாவை விளக்குகள் எரிந்து கொண்டிருக்கும். அவ்விளக்குகளில் குற்றேவல் மகளிர் அவ்வப்போது நெய்வார்த்துக் கொண்டிருப்பர். அரசியின் இருக்கை மலை போன்று உயர்ந்திருந்தது. அழகிய பன்னிறக் கொடிகளையுடையது. அதன் உள்ளும் புறமும் வெள்ளி போல விளங்கும் திரண்டு உருண்ட தூண்கள் அவ்விருக்கையைத் தாங்கி நின்றன. செம்பினாற் செய்யப்பெற்றன போலத் தோன்றும் அதன் சுவர்களில் பன்னிறப் பூக்கள், கொடிகள் முதலியவற்றின் உருவங்களும் பொறிக்கப்பட்டிருந்தன. கோப்பெருந்தேவியின் இருக்கையாகிய அவ்வில்லம் காண்பதற்கு இனிய அழகுடையதாத் திகழ்ந்தது. மலையை ஒத்தப் பெரிய இல்லங்களில் மக்கள் வாழ்ந்தனர் என்ற செய்தியை,

**“குறும்பல் குழவிற் குன்றுகண் டன்ன**
**பருந்திருந் துகக்கும் பன்மான் நல்லில்”**[77]

எனவரும் மதுரைக்காஞ்சியடிகளாலும்,

**“குறுந்தொடை நெடும்படிக்கால்**
**கொடுந்திண்ணை ப.்.றகைப்பில்**
**புழைவாயில் போகிடைகழி**
**மழைதோயும் உயர்மாடத்து”**[78]

என்ற பட்டினப்பாலை அடிகளாலும் அறிய முடிகின்றன. அரசியின் அறையானது உயர்ந்தும் அதில் பல்வேறு ஓவியங்கள் வரையப்பட்டும் இருந்ததை வலியுறுத்துகின்றன.

### 4.7.11 கட்டில் அமைப்பு

அரசியின் இல்லத்தில் தலைவி உறங்குவதற்கு ஏற்ற கட்டில் மிக்க வேலைபாட்டுடன் விளங்கியது. நாற்பது ஆண்டுகள் அகவை நிரம்பியதும் முரசம் போன்ற கால்களையுடையதும், போர்த்தொழிலிலே புகழப்பட்டதும், போரின்கண் விழுப்புண் பட்டிறந்ததுமாகிய களிற்றின் மருப்புகளைப் பக்கங்களாகச் சேர்த்தி கால்கள் சீரும் செம்மையும் பொருந்தக் கைத்தொழில் வல்ல தச்சன் கூரிய உளியால் தன் திறத்தைத் தோன்ற செய்து அமைந்திருந்தான். அக்கால்களில் பல்வேறு வேலைபாடுகள்

நிரம்பியனவாய்ப் பொறிக்கப்பட்டிருந்தன. அக்கட்டிலின் பக்கங்கள் முத்துச் சரங்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தன. உள்ளிடம் புலியின் வரிகள் போன்ற கோடுகளையுடைய தகடுகளால் மூடப்பட்டிருந்தது. சிங்கம் வேட்டையாடுதலைப் போன்றும், பல்வேறு பூக்கலைப் போன்றும் உருவங்கள் வரையப்பட்டு இருந்தன. அதன்மேல் காதற்றுணைகளாய்த் தம்முட் புணர்ந்த அன்னப் பறவைகளின் வெள்ளிய மயிரை இணைத்து இயற்றிய மெல்லணையை மேன்மையுண்டாகுமாறு வைக்கப்பட்டது. பின் தலையணை, சாயணை முதலிய அணைகளையும் இட்டு வைத்து மலரிதழ்களை அகத்தே மணமேற்றப்பட்டு விரிக்கப்பட்ட கட்டில் என்பது பொருளாகும். இங்கு பழங்காலத்தில் அரசியின் கட்டில் களிற்றின் தந்தங்களைக் கொண்டு திறமை மிக்க தச்சனால் செய்யப்பட்டது என்பதையும், இதில் பல்வேறு வேலைபாடுகள் நிரம்பியிருந்ததையும், மெல்லனைகள் அன்னத்தின் வெள்ளிய மயிராலே செய்யப்பட்டதையும் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.

### 4.7.12 தலைவியின் நிலை

தலைவியின் நிலையை 136-147 அடிகளில் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளன. கணவனைப் பிரிந்த கோப்பெருந்தேவி மங்கல அணியை அன்றிப் பிற அணிகளை அணியவில்லை. அவளுடைய கூந்தல் மயிர்ச்சாந்து முதலியவைப் பூசப்பெறாமல் உலர்ந்து காற்றில் அலைந்து அவளுடைய நெற்றியின் மேல் புரண்டது. அவள் தன்னுடைய காதுகளில் மகரக்குழையை அணியவில்லை. குழையின் தழும்புகள் தோன்றும் அவளுடைய காதுகள் சிறிதே தாழ்ந்து விளங்கின. பொன்னால் செய்த தொடியை நீக்கிச் சங்கினாற் செய்த வளையல்களையே அணிந்திருந்தாள். அவளுடைய கையில் காப்புநாணும் விரலில் நெளி மோதிரமும் விளங்கின. அவள் பூத்தொழில் அமைந்த நீக்கி நூற்புடவை ஒன்றே உடுத்திப் ‘புனையா ஓவியம்’ போல காணப்பட்டாள் என்பதை,

**“அம்மா சூர்ந்த அவிர்நூற் கலிங்கமொடு**
**புனையா ஓவியங் கடுப்ப”[79]**

என்ற நெடுநல்வாடை அடிகள் குறிப்பிடுகின்றன. இங்கு புனையா ஓவியம் என்பது வடிவம் மட்டுமே வரைந்து வண்ணம் தீட்டப்பெறாத ஓவியமாகும். இப்புனையா ஓவியம் பற்றி தண்டமிழ் ஆசான் சாத்தனார்,

**“மனையகம் புகுந்து மணிமே கலைதான்**

**புனையா வோவியம்போல நிற்றலும்”[80]**

என்றும்,

**“புனையா வோவியம் புறம்போந்தன்ன”[81]**

என்ற வரிகளாலும் எடுத்துக்காட்டியுள்ளார். கணவனைப் பிரிந்த தலைவியின் துயரை நீக்க தோழியரும் செவிலியரும் அவளுடைய வருத்தம் நீங்குமாறு பலவாறு கூறி, அவளை ஆற்ற முயன்றனர். ஆற்றாதவளாகிய கோப்பெருந்தேவி தன் படுக்கைக் கட்டிலின்கண் அணிகலன்கள் இன்றி உறக்கமற்று கிடந்ததை உணர்த்துகின்றன.

### 4.7.13 பாசறையில் பாண்டியனின் நிலை

போர்க்களத்தில் யானைகளைக் கொன்று விழுப்புண் பட்ட தன் வீரர்களைப் பார்த்து, இன்மொழி புகன்று, அவர்கள் உற்றத்துன்பத்தைப் போக்க விரும்பிய பாண்டியன் தன் இடத்தினின்று புறப்பட்டான். விழுப்புண் என்பது முகத்தினும் மார்பினும் பட்ட புண்ணாகும். இதனை,

**“விழுப்புண் படாதநாள் எல்லாம் வழுக்கினுள்**
**வைக்குந்தன் நாளை எடுத்து”[82]**

என்ற குறள் வலியுறுத்துகிறது. இதில் மறவர்க்கு விழுப்புண்படும் நாளே சிறந்த நாள் என்னும் மறச்சிறப்பு உண்டென்பதை குறிப்பிடுகிறது. வேப்பந்தார் தாங்கிய வேற்படையையுடைய படைத்தலைவன் முன்னே செல்ல வீரர் சிலர் பாண்டியனைப் பின் தொடர்ந்தனர். படைத்தலைவன் விழுப்புண் பட்ட வீரர்களை முறையாக பாண்டிய மன்னனுக்குக் காட்டினான். அவன் பாசறையின் ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குச் செல்லும் போது மழை பெய்தமையால் பரவிக்கிடக்கும் கரிய சேற்றை யானைகளும் குதிரைகளும் உழக்கி அவன்மேல் தெரிந்தன. வேம்பு பாண்டிய மன்னருக்குரிய அடையாளப் பூவாகும் என்பதை,

**“வேந்திடை தெரிதல் வேண்டி யேந்துபுகழ்ப்**
**போந்தை வேம்பே யாரென வருஉம்**
**மாபெருந் தானையார் மலைந்த பூவும்”[83]**

எனவரும் தொல்காப்பிய நூற்பா போந்தை (பனம்பூ) சேரனுக்கும்,(வேம்பு) பாண்டியனுக்கும், (அத்திப்பூ) சோழனுக்கும் அடையாளப்பூவாக இருந்ததை எடுத்துரைக்கின்றன. ஆசிரியர் இளங்கோவடிகளும்,

**“வானவர் கோனாரம் வயங்கியதோட் பஞ்சவன்றன்**

**மீனக் கொடிபாடும் பாடலே பாடல்**

**வேப்பந்தார் நெஞ்சுணக்கும் பாடலே பாடல்”[84]**

எனப் பாண்டிய மன்னருக்குரிய அடையாளப்பூவினைக் குறிப்பிட்டுள்ளார். இப்பாண்டிய மன்னன் புண்பட்ட தன் வீரர்களைக் கண்டதும் மனம் வருந்தி நிலைகுலைந்ததை,

**“புடைவீழ் அந்துகில் இடவயின் தழீஇ**

**வாள்தோள் கோத்த வன்கட் காளை**

**சுவல்மிசை யமைந்த கையன் முகனமர்ந்து**

**நூல்கால் யாத்த மாலை வெண்குடை**

**தவ்வென் யாமத்து பள்ளி கொள்ளான்**

**சிலரொடு திரிதரும் வேந்தன்**

**பலரொடு முரணிய பாசறைத் தொழிலே”[85]**

என்ற வரிகளால் உணர்த்தப்பட்டுள்ளன. பாண்டிய மன்னன் தன் இடத்தோளினின்றும் சரிந்து விழும் மேலாடையை தன் இடக்கையால் தாங்கி கொண்டவாறே தன் வலக்கையை வாளேந்தி முன் செல்லும் போர் வீரனுடைய தோளில் வைத்தவனாய் விழுப்புண் பட்ட வீரர்களைச் சென்று பார்வையிட்டான். அவன் நன்றியுணர்வும் அன்பும் தோன்ற அவர்களை அகமும் முகமும் மலர்ந்து நோக்கினான். அப்பொழுது மழைத்துளிகள் அவனை நனைக்காதவாறு வீரர்கள் முத்து மாலைகளால் அலங்கரிக்கப்பட்ட குடையைத் தாங்கிப் பிடித்தனர். இவ்வாறு அவன் நள்ளிரவிலும் உறக்கம் கொள்ளாதவனாய்ச் சில மறவர்கள் தன்னைச் சூழ்ந்து வர அப்பாசறையில் விழுப்புண்பட்ட வீரர்களிடம் சென்று அவர்களைக் கண்டு ஆறுதல் கூறியதை உணர்த்துகின்றன. இவற்றையெல்லாம் நோக்கும்போது மூவேந்தர்களுக்கும் ஒவ்வொரு அடையாளப்பூவினை சூடியுள்ளனர் என்பதைக் காணமுடிகிறது. மேலும் அரசன் புண்பட்ட வீரர்கள் பால் அன்பு கொண்டு நடுயாமம் என்று பாராமல் மழைபெய்தலையும் கருதாமல், முகமலர்ந்து வீரர்களைக் கண்டு ஆற்றுவித்த செய்தி கூறப்படுவதால் அரசனுடைய எளிமையும் செய்ந்நன்றி அறிவும் வீரர்களின் பெருமையும் புலனாகின்றன. இடையிடையே கூறப்படும் செய்திகளால் பூ மலர்வதனால் பொழுதை அறியும் வழக்கமும் மகளிர் மாலைக் காலத்தைக் கொண்டாடும் செயலும் மனை வகுக்கும் முறையும், வேலுக்கு அடையாளக் பூவைச் சுட்டும் மரபும் அறியப்படுகின்றன.

## 4.8 பட்டினப்பாலை அமைப்பு

பட்டினப்பாலை என்பது பட்டினத்தைச் சிறப்பித்துக் கூறிய பாலைத்திணை செய்யுள் நூல் என விரியும். இச்செய்யுளை இயற்றிய நல்லிசைப் புலவரின் நோக்கம் கரிகால் பெருவளத்தானின் வெற்றியைச் சிறப்பித்துப் பாடவேண்டும் என்பதேயாகும். அவர் கருதியவாறு நேரே கரிகாலன் வெற்றியைப் பாடினால் அது புறத்தினை ஏழனுள் ஒன்றாகிய வாகைத்திணையின் பாற்படும். அவ்வாகைத் திணைப்பொருளே அமையப் பாடியும் இப்பாட்டினுள் நுணுகியதொரு சூழ்ச்சியால் அகத்தினை ஏழனுள் ஒன்றாகிய பாலைத்திணைப் பொருள்பட இதனை அகப்பொருள் பாடலாக வைத்து இந்நூலின் இன்பத்தைப் பெரிதும் மிகுவித்த திறம் போற்றுதற்குரியதாகும். பாலை என்பது குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் அகணைந்திணை ஒழுக்கங்களுள் ஒன்றாகும். பாலை என்பதற்கு என்பதே உரிப்பொருளாக அமைகின்றன. பிரிதலேயன்றிப் பிரிதற்குரிய நிமித்தங்களும் பாலை என்றே கூறப்படும் அகன் ஐந்திணையுள்ளும் இப்பாலைத் திணையே காதல் உள்ளத்தின் ஆழத்தே கிடக்கும் அன்புணர்ச்சிகளின் அழகினை வெளிக்காட்டும் தன்மையடையது. இவ்வன்பினை,

> **“அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்**
> **புன்கண்ணீர் பூசல் தரும்”[86]**

என்று வள்ளுவம் குறிப்பிடுகிறது. இப்பாலைத்திணை புறத்திணை ஏழனுள் ஒன்றாகிய வாகைத்திணைக்குப் புறனாக அமைந்துள்ளதை,

> **‘வாகைதானே பாலையது புறனே”[87]**

என்ற தொல்காப்பிய நூற்பா உணர்த்துகிறது. கரிகாற் பெருவளத்தானை அவன் வாகையைச் சிறப்பித்துப் பாட எண்ணிய ஆசிரியர் அதற்கினமாகிய பாலைத்திணை பற்றியே இப்பாடலை இயற்றிய அவரின் நுண்ணறிவு நன்கு புலப்படுத்துகிறது.

### 4.8.1 நூலாசிரியர் வரலாறு

செந்தமிழ் இலக்கியக் கருவூலமாய்த் திகழும் பத்துப்பாட்டினுள் நல்லிசைப் புலவராகிய கடியலூர் உருத்திரங்கண்ணனார் என்பவரே இப்பட்டினப்பாலையையும், பெரும்பாணாற்றுப் படையினையும் அருளிச் செய்தவராவார். இவர் திருப்பெயர் முன்னர் அடைமொழியாக வந்த ‘கடியலூர்’ என்பது அவரின் ஊரின் பெயர் என்பதும், உருத்திசன்

என்பாருடைய மகன் என்பதையும் நன்கு விளக்குகின்றன. இப்பட்டினப் பாலையைப் பாடியதற்காக பதினாறாயிரம் பொன் பரிகாகப் பெற்றான் என்பதை,

**"தழுவு செந்தமிழ்ப் பரிசில்வாணர் பொன்**
**பத்தோடு ஆறுநூறாயிரம் பெறப்**
**பண்டு பட்டினப்பாலை கொண்டதும்"[88]**

எனக் கலிங்கத்துப்பரணியும்,

**"பாடியதோர் வஞ்சிநெடும் பாட்டாம் பதினாறு**
**கோடிப்பொன் கொண்டது நின்கொற்றமே"[89]**

எனத் தமிழ்விடுதூதும் குறிப்பிடுவதால் அறியமுடிகிறது.

### 4.8.2 பட்டினப்பாலை பெயர்க்காரணம்

பட்டினம் என்பது செழிப்பு மிக்க கடற்கரைப் பட்டினத்தைக் குறிக்கிறது. பாலை என்பது பிரிதலும் நிமிர்த்தமாகும். அதாவது காவிரிப்பூம்பட்டினமே எனக்குப் பரிசிலாகக் கிடைப்பினும் என் தலைவியை விட்டு பிரியேன். ஏனெனில் அக்கானம் வளவனின் வேலை விட பயங்கரமானது. ஆனால் செங்கோலை விட என் தலைவியின் தோள் மென்மையானது என்று தன் நெஞ்சோடு தலைவன் பேசுவதாக அமைக்கப்பட்டதனால் இந்நூலுக்குப் 'பட்டினப்பாலை' எனப் பெயரிடப்பட்டது. இந்நூலில் 301 அடிகளைக் கொண்டதாக இருப்பினும் ஆறு அடிகள் மட்டுமே அகம் பற்றியதாகவும், ஏனைய அடிகளெல்லாம் புறச்செய்திகளான காவிப்பூம்பட்டினத்தின் சிறப்பையும், கரிகாற் பெருவளத்தானின் பெருமையையும் பேசுவதாக அமைந்துள்ளன.

### 4.8.3 பாடல் அமைப்பு

பட்டினப்பாலை 301 அடிகளில்,

- ❖ 1 முதல் 28 வரையிலான அடிகள் ஒரு தொடராக அமைந்து காவிரியாற்றின் சிறப்புகளையும் சோழ நாட்டின் சிறப்புகளையும் பட்டினப்பாக்கத்தின் தன்மைகளையும் விளக்குவதாக அமைந்துள்ளன.
- ❖ 29 முதல் 218 வரையிலான அடிகள் பட்டினத்திலுள்ள தோட்டங்கள் மற்றும் ஏரிகளின் செழிப்புகளையும், அட்டில் சாலைகள், பௌத்தப் பள்ளிகள், பரதவர் இருக்கைகள், புறஞ்சேரிகளின் இயல்புகள், பண்டசாலையின் முற்றம், அங்காடித் தெருக்கள், கொடிகளின் சிறப்புகள்

மற்றும் வேளாண்குடிச் சிறப்புகள் என பல்வேறு செய்திகள் இதில் குறிப்பிடப்பட்டுள்ளன.

❖ 218 முதல் 220 வரையிலான அடிகள் மட்டும் தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறுவதாக அமைந்துள்ளது.

❖ 221 முதல் 295 வரையுள்ள அடிகள் ஒரு தொடராக அமைந்து கரிகாலனின் வீரம், வெற்றிச் சிறப்பு, பகைநாடுகளின் நிலை, திருமாவளவனின் இன்பச்சிறப்பு போன்றவை சிறப்பாக எடுத்துக் கூறப்பட்டுள்ளன.

❖ 296 முதல் 301 வரையிலான அடிகளில் பாட்டின் பொருள் முடிவும் தலைவியின் சிறப்பும் தரப்பட்டுள்ளன.

### 4.8.4 சோழ நாட்டின் சிறப்பு

பல புகழுடன் திகழும் நாடு சோழ நாடு. மேகம் மழை பெய்யாமல் போனாலும், காவிரியாறு தான் நீர் வற்றாமல் மேற்கிலுள்ள குடகு மலையிடத்தில் பிறந்து கிழக்குக் கடலில் பாயும் சிறப்பு மிக்கது காவிரியாறு. அதன் நீர் கழனிகளில் நிறைந்து பொன்னைக் குவித்துக் கொண்டிருக்கும். மேலும் விளைதல் தொழில் மாறாத அகன்ற கழனிகளில் பசிய கரும்பினது சாற்றைக் காய்ச்சுவதனால், வாசனை வீசுகின்ற கரும்பாலைக் களத்திலுள்ள கொட்டிலிலிருந்து வரும் தீயின் சுட்டினால் அழகுகெட்டு, நீர் நிறைந்த வயல்களிலுள்ள நீண்ட நெய்தல் மலரானது வாடும். அவ்விடத்தில் விளைந்திருக்கும் செந்நெற்கதிர்களை மேயும் பெரிய வயிற்றையுடைய கன்றுகள் நெற்கூட்டின் நிழல்களில் தூங்கிக் கொண்டிருக்கும். பின் குலைகளையுடைய தென்னை, வாழை, கமுகு, மஞ்சள், மாமரம், பனை, இஞ்சி போன்றவையும் வளர்ந்திருக்கும் என்பதை பட்டினப்பாலை (8-19) அடிகள் குறிப்பிடுகின்றன. இவ்வாறு காவிரியின் நீர்ப் பெருக்கால் மருதநிலம் பல புகழுடையதாக விளங்கியது. மேலும் மருத நிலத்தின் சிறப்பை,

**“கழுநீர் மேய்ந்த கயவாய் எருமை**
**பைங்கறி நிவந்த பலவின் நீழல்**
**மஞ்சள் மெல்லிலை மயிர்ப்புறந் தைவர**
**விளையா விளங்கணாற் மெல்குபு பெயராக்**
**குளவிப் பள்ளிப் பாயல் கொள்ளும்”**[90]

என்ற சிறுபாணாற்றுப்படையாலும்,

**“தடமருப் பெருமை தாமரைமுனையின்**

**முடமுதிா் பழவின் கொழுநிழல் வதியும்”[91]**

என்ற அகநானூற்றுப் பாடல் வாயிலாகவும் அறிய முடிகிறது. இதில் சோழ நாட்டிலுள்ள மருத நிலம் செழிப்பு மிக்கதாகவும் பல புகழுடன் விளங்கியதையும் புலப்படுத்துகின்றன.

### 4.8.5 பாக்கத்தின் சிறப்புகள்

வீடுகளின் பெரிய முன் வாசலில் ஒளி பொருந்திய நெற்றியையும் கபடம் அற்ற பார்வையையும் உடைய அழகான ஆபரணங்களை அணிந்த இளம் பெண்கள், காய்கின்ற உணவுப் பொருள்களைத் தின்னும் கோழிகளை விரட்டுவதற்காக வீசியெறிந்த வளைந்த கால்களையுடைய கனமான காதணிகளானது, அழகிய கால்களையுடைய சிறுவர்கள் குதிரையில்லாமல் கையினால் உருட்டிச் செல்கின்ற மூன்று சக்கரங்களையுடைய சிறிய தேர்கள் ஓடும் முன் வழியைத் தடுத்து நிறுத்தும். இத்தகைய தடையான பகையைத் தவிர மனம் கலங்குவதற்கான வேறு பகைமையை அறியாத செல்வம் நிறைந்த செழிப்பான பாக்கத்தையுடையது காவிப்பூம்பட்டினம் என்பதை,

**“அகனகா் வியன்முற்றத்துச்**

**சுடா்நுதல் மடநோக்கின்**

**………………………………..**

**கொழும் பல்குடிச் செழும்பாக்கத்துக்**

**குறும்பல்லூா் நெடுஞ்சேணாட்டு”[92]**

என்ற பட்டினப்பாலையடிகள் குறிப்பிடுகின்றன. அதாவது காவிரிப்பூம்பட்டினத்தில் மக்கள் செல்வ செழிப்புடன் வாழ்ந்ததையும் பகையறியாது வாழ்ந்து வந்ததையும் உணா்த்துகிறது.

### 4.8.6 இயற்கை எழில்

காவிரிப்பூம்பட்டினம் பல்வேறு சிறப்பியல்புகளைக் கொண்டு விளங்குவதை (29-39) வரையிலான பட்டினப்பாலைஅடிகள் குறிப்பிடுகின்றன. சோழநாட்டிலுள்ள சிறிய பல ஊா்களுக்கும் சென்று வெண்மையான உப்பின்

விலையைக் கூறிக் கொடுத்து அதற்குப் பதிலாகப் பெற்ற நெல்லை ஏற்றிக்கொண்டு வந்த வலிமை பொருந்திய படகுகள் லாயத்தில் கட்டப்பட்டு நிற்கின்ற குதிரைகளைப் போல, கரையிடத்திலுள்ள மரங்களில் கட்டப்பட்டிருக்கும் உப்பங்கழிகளைச் சுற்றி வளர்ந்திருக்கும் சோலைகளும், பார்ப்பவர்களுக்கு மகிழ்ச்சியையும் புதிய வருமானமும் தருகின்ற தோட்டங்களும் வாசைன பொருந்திய மலர்கள் பலவகையாகப் பூத்துக் கிடப்பதனால் பல அழகுடைய நிறங்களுடன் காணப்படும் பெரிய தடாகங்களும், இம்மை மறுமையாகிய இரண்டு இன்பங்களைத் தரும் இரண்டு ஏரிகளுமே அங்கேயிருந்தன. இவைகளைச் சோமகுண்டம் சூரிய குண்டம் என சிலப்பதிகாரம் குறிப்பிடுகிறது.

**“சோமகுண்டஞ் சூரியகுண்டந் துறைமூழ்கிக்**
**காமவேள் கோட்டந் தொழுதார் கணவரொடு**
**தாமின்புறுவார் உலகத்துத் தையலார்**
**போகஞ்செய் பூமியினும் போய்ப் பிறப்பார்”[93]**

என்று கூறுவதன் வாயிலாக காவிரிப்பூம்பட்டினத்தில் உள்ள இரண்டு ஏரிகளிலும் மூழ்கினால் இம்மை, மறுமை கிட்டும் என்பது பண்டையோரின் வழக்காக இருந்ததையும் அறிய முடிகிறது.

### 4.8.7 அட்டில் சாலைகளின் தன்மைகள்

புலியின் அடையாளம் செதுக்கப்பட்டுப் பலகைகளை இணைத்துச் செய்யப்பட்ட கதவையும் திருமகள் உருவம் எழுதப்பட்டிருக்கும் உறுதியான காவலையுடைய மதிற்சுவரையும் பெற்றுப் புகழ் பெருகி அறம் தழைத்த பெரிய சமையல் இடங்களில் சோற்றிலிருந்து வடித்த நிறைந்த கஞ்சி ஆற்றைப் போலத் தெருவில் பரவி ஓடும். அங்கே காளைகள் ஒன்றோடு ஒன்று போர் செய்வதனால் அந்தக் கஞ்சி மண்ணோடு கலந்து சேறாகிவிட அந்த சேற்றின் மேல் தேர்கள் ஓடுவதனால் அத்தேர்கள் புழுதியாகி, அங்குள்ள வெண்மைநிறமுள்ள அரண்மனையை அழுக்கடையச் செய்யும். அத்தகைய அறம் தருகின்ற அட்டில் சாலைகள் அமைக்கப்பட்டதை பட்டினப்பாலை (40-50) சுட்டுகின்றன. வருந்தி வந்தோர்க்கு அரும்பசியை களைப்பதற்காக அட்டில் சாலைகள் அமைந்திருந்தன என்பதை,

**“ஆற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்**
**பெற்றான் பொருள்வைப் பழி”[94]**

என்றும்,

**“ஆற்றுவார் ஆற்றல் பசியாற்றல் அப்பசியை**

**மாற்றுவார் ஆற்றலின் பின்”[95]**

என்றும் வள்ளுவர் குறிப்பிடுகின்றார். மேலும்,

**“ஆற்றா மாக்கள் அரும்பசி களைவோர்**

**மேற்றே யுலகின் மெய்ந்நெறி வாழ்க்கை**

**மண்டினி ஞாலத்து வாழ்வோர்க் கெல்லாம்**

**உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே”[96]**

என்று மணிமேகலை குறிப்பிடுவதிலிருந்து உண்டி கொடுக்கும் இவ்வறமே சிறந்ததென கருதி, காவிரிப்பூம் பட்டினத்தில் வாழ்வோர் மெய்நெறி தவறாது அறத்தை மேற்கொண்டதை உணர்த்துகின்றன.

### 4.8.8 புறஞ்சேரியின் தன்மை

பழங்காலத்தில் மக்கள் ஆடு மாடு, நாய், பன்றி, கோழி, பறவை போன்றவற்றை உணவின் பொருட்டும், காவலின் பொருட்டும், போரின் பொருட்டும் வளர்க்கப்பட்டன. இவ்வழக்கம் இன்றும் தொடர்ந்து வருவதைக் காணலாம். இப்பழக்கம் இக்காலத்தில் காவிரிப்பூம்பட்டின மக்களிடையே காணப்பட்டதை,

**“பறழ்ப்பன்றிப் பல்கோழி**

**உறைக்கிணற்றுப் புறச்சேரி**

**மேழகத் தகரொடு சிவல்விளை யாடக்”[97]**

என்ற அடிகள் மூலம் உணர்த்தப்படுகிறது. இதில் பட்டினத்தின் புறஞ்சேரியில் குட்டிகளுடன் கூடிய பன்றிகளும், பலவகையான கோழிகளும், செம்மறி ஆட்டின் கிடாய்களும், கௌதாரி பறவைகளும் விளையாடியதை குறிக்கும் சொல்லாகக் கருதப்படுகிறது.

**“குட்டியும் பறழும் கூற்றவண் வரையார்”[98]**

என்ற தொல்காப்பிய நூற்பாவிலிருந்து பன்றியின் இளமையை ‘பறழ்’ என்று கூறுவதைக் காணமுடிகிறது. மேலும் ஒவ்வொரு விலங்கினத்திற்குமான இளமைப் பெயர்களை குட்டி, குருளை, பார்ப்பு எனவும் கூறியுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும். இவற்றிலிருந்து பன்றி பலவகையான கோழிகள், செம்மறி கிடாய்கள் மற்றம் கௌதாரி போன்றவை புறஞ்சேரியில் விளையாடுயதை உணர முடிகிறது.

### 4.8.9 சுங்கம் பெறுவோரின் தன்மை

பண்டை தமிழர் பல்வேறு தொழில்களில் ஈடுபட்டிருந்தனர். அத்தொழில்கள் நிலத்திற்கு நிலம் மாறுபட்டன. இவற்றில் பயிர்த்தொழில், வேட்டையாடுதல், கால்நடை மேய்த்தல், உலோகத்தொழில் என பல தொழில்கள் இருந்தன. இத்தொழில்களுள் சுங்கம் வசூலிக்கும் தொழிலும் ஒன்றாக கருதப்பட்டன. அதாவது இராக்காலத்தில் பொருட்களை சுங்கம் செலுத்தாமல் களவிற் கொண்டு போதாதபடி அப்பொருளைக் காக்கும் தொழிலில் சிலர் ஈடுபட்டனர் என்பதை,

> **"உறுபொருளும் உல்குபொருளும் தன் ஒன்னார்த்**
> **தெறுபொருளும் வேந்தன் பொருள்"[99]**

என்ற குறளில் வள்ளுவர் வலியுறுத்தியுள்ளார். அதாவது சுங்கம் வசூலிப்போர் வேந்தனுக்குரிய பொருளை சுங்கமிக்காது களவு கொண்டு செல்வதைக் காவல் செய்யும் தன்மையுடையவர்களாக காணப்பட்டதை எடுத்துரைக்கின்றன.

### 4.8.10 கொடிகளின் சிறப்புகள்

மக்கள் தேசப்பற்றிற்காகவும், தெய்வத் தன்மையை உணர்த்துவதற்காகவும், போராட்டத்திற்காகவும் ஏதோவொரு பொருளின் அடையாளச் சின்னமாகவும் கொடிகள் நாட்டுவது வழக்கமாக் கொண்டிருந்தனர். இதன் தொடர்ச்சியே இன்றும் அரசியல், போராட்டம் போன்றவற்றிற்காக வீதிகளில் பல வண்ணங்களில் கொடிகள் நாட்டப்படுவதைக் காணலாம். அவ்வகையில் காவிரிப்பூம்பட்டினத்தில் பல வகையான கொடிகள் பறந்து கொண்டிருந்ததை,

> **"மையறு சிறப்பின் தெய்வஞ்சேர்த்திய**
> **மலரணி வாயிற் பலர்தொழு கொடியும்**
> **..........................................**
> **தொல்லாணை நல்லாசிரியர்**
> **உறழ்குறித் தெடுத்த உருகெழு கொடியும்"[100]**

என்ற வரிகள் மூலம் எடுத்துரைக்கின்றன. குற்றமற்ற பெருமையினையுடைய தெய்வத்தை மலரால் அழகு செய்யப்பட்ட திருக்கோயிலின் வாயிலில் உயர்த்தப்பட்டனவும், பலரும் தொழும் தன்மையுடைய தெய்வக் கொடிகளும்

உருண்டோடி வருகின்ற நீரின் மூலம் வந்த வெண்மையான மணல் பரந்த காட்டாற்றின் கரையில் கரும்பினது வெண்மையான பூக்களைப் போன்று வீர வணக்கம் செலுத்தும் கொடிகள் பறந்து கொண்டிருந்தன. மேலும் பல நூல்களையும் கற்றும் கேட்டறிந்தும் வல்லவர்களான முன்னோரின் கட்டளைப்படி நடக்கின்ற சிறந்த ஆசிரியர்கள் போர் செய்வதற்கு பின்னடைய மாட்டோம் என்பதை உயர்த்திக்காட்ட கல்விக் கொடிகளும், புகார் துறையில் நிற்கும் மரக்கலங்களின் மேலே கட்டப்பட்ட கொடிகளும், பலரும் புகுதற்குரிய கள் விற்கும் மனையிடத்தே கள் விற்றலைக் குறித்து உயர்த்திய கொடிகளும், ஏனையப் பண்டங்கள் விற்றலைக் குறித்துயர்த்திய கொடிகளும் என பல வண்ணங்களில் பல கொடிகள் காவிரிப்பூம்பட்டினத்தில் தொங்கவிடப்பட்டன. இக்கொடிகளை கடவுளோடு சேர்த்தெண்ணிய தொல்காப்பியனார்,

**"கொடிநிலை கந்தழி வள்ளி யென்ற**
**வடுநீங்கு சிறப்பின் முதலான மூன்றுங்**
**கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே"**[101]

என்று குறிப்பிடுகின்றார். இதில் கொடியென்பது முருகனுக்குரிய கோழிக்கொடி ஒன்றனையே குறிப்பிட்டுள்ளார். மேலும் அக்காலம் முதற்கொண்டு போராட்டம், அரசியல், நாட்டுப்பற்று, வீரஉணர்வு எனப் பல செயல்பாடுகளுக்கும் கொடிகள் பயன்பட்டதை எடுத்துரைக்கின்றன.

### 4.8.11 வேளாளர் குடிச்சிறப்பு

காவிரிப்பூம்பட்டினத்தில் வாழும் குடிகளின் சிறப்பினை எடுத்துரைக்க நினைத்த ஆசிரியர், அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் என்னும் நான்கு குடிகளின் தன்மையினை குறிப்பாகவும், வெளிப்படையாகவும் எடுத்துரைக்கின்றார். இருப்பினும் வேளாண் குடியே ஏனைய குடிகளின் சிறப்பிற்குக் காரணம் எனக்கருதியே அக்குடியை முதலில் குறிப்பிட்டுள்ளார். வேளாண்குடி மக்கள் உழவுத் தொழிலைச் செய்பவர்கள். கொல்லாமையை மேற்கொள்பவர்கள். கொல்லுந் தொழிலை உடையோரையும் அத்தொழில் செய்யாமல் விலக்கியும், தெய்வங்களை போற்றியும், தெய்வங்களுக்கு அவி உணவு படைத்தும், நல்ல பசுக்களையும் எருதுகளையும் பாதுகாத்தலும், நான்மறை வல்லோர் புகழைப் பரவுமாறு செய்தும், விருந்தினர்க்கு உணவு முதலிய பண்டங்களை நல்கியும், பசிய உணவுகளை அவை வேண்டுவார்க்குக் கொடுத்தும் இல்லற வாழ்க்கையை இனிதே நடத்தும் வேளாண் மாந்தரும் காணப்பட்டதை,

**“கிளைகலித்துப் பகைபேணாது**
**வலைஞர் முன்றில் மீன்பிறழவும்**
**விலைஞர் குரம்பை மாவீண்டவும்**
**………………………………………..**
**புண்ணிய முட்டாத் தண்ணிழல் வாழ்க்கைக்**
**கொடுமேழி நசையுழவர்”**[102]

என்ற பட்டினப்பாலை வரிகள் சுட்டுகின்றன. இவற்றிலிருந்து வேளாண் குடிமக்கள் விருந்தினர்க்கு சோறேயன்றிச் சுவைமிகுந்த பண்ணியாரங்களையும் செய்து கொடுத்து விருந்தோம்பலில் சிறந்து விளங்கினர் என்பது தெளிவாகிறது.

### 4.8.12 தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறியது

தலைவன் தன் தலைவி மீது தீராத காதல் கொண்டான். அந்நிலையில் பொருள் ஈட்ட அயல்நாடுகளுக்குச் செல்ல எண்ணிய தலைவன் தன் பிரிவிற்கு உடன்படாத தன் காதல் மனையாளை முன்பு ஆற்றுவித்து பின்பு பிரிதல் கருதி தன் நெஞ்சை நோக்கி,

**“முட்டாச் சிறப்பின் பட்டினம் பெறினும்**
**வாரிருங் கூந்தல் வயங்கிழை ஒழிய**
**வாரேன் வாழிய நெஞ்சே”**[103]

என்று செலவழுங்கிக் கூறுவதாகப் பாடப்பட்டுள்ளது. மேலும்,

**“பல்லாய மொடு பதிபழகி**
**வேறுவே றுயர்ந்த முதுவா யொக்கற்**
**சாறயர் மூதூர் சென்றுதொக் காங்கு**
**மொழிபல பெருகிய பழிதீர் தேஎத்துப்**
**புலம்பெயர் மாக்கள் கலந்தினி துறையும்”**[104]

என்ற வரிகள் உலகிலுள்ள பல்வேறு மக்கள் கூட்டங்களோடும் காட்டில் சென்று பழகியதன் காரணமாக அறிவு நிரம்பியச் சுற்றத்தாரையுடைய சான்றோர்கள் திருவிழாக் கொண்டாடுவதற்கு பழைய ஊரிலே சென்று கூடினாற் போன்று, பல நாட்டிலும் சென்று பல மொழிகளையும் பேசுகின்ற பிறநாட்டு வணிகர்கள் பலரும் வந்து கூடி, மக்களோடு உள்ளங்கலந்து மகிழ்ந்து உறைந்தற்கிடமாகிய குறைவற்ற இடமே இக்காவிரிப்பூம் பட்டினம் என்று சிறப்பித்து, இப்பட்டினமே யான் பெறுவேனாயினும் நீண்ட கரிய கூந்தலையும் அழகிய அணிகலன்களையும் அணிந்த என் தலைவி தனித்து வருந்தும்படி விட்டு யான் நின்னோடு வருதற்கு உடன்படேன் நெஞ்சே! என்று

தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறுவதாக அமைந்துள்ளதைக் காணமுடிகிறது. இதில் தலைவன் தலைவி மேல் கொண்ட அன்பின் ஆழத்தை எடுத்துரைக்கின்றன. இங்கு 'ஒழிய' என்பது யான் பிரியின் இவள் இறந்துபடுவாள் என்ற பொருளில் கூறப்பட்டுள்ளது. இதே கருத்தை,

**"இருங்கண் ஞாலத்து ஈண்டுபயப் பெருவளம்**
**ஒருங்குடன் இயைவ தாயினும்..**
**…………………………………………………**
**…………………………………………………**
**…………………………………………………**
**கோலமை குநற்தொடிக் குறுமகள் ஒழிய**
**ஆள்வினை மருங்கிற் பிரியார்"**[105]

என்னும் குறுந்தொகைப் பாடலும் குறிப்பிடுகின்றது. இப்பாடல் தலைவன் தலைவியை விட்டு பிரிய கருதுவதில்லை என்பதைக் சுட்டுகிறது.

### 4.8.13 பாட்டின் பொருண்முடிவு

பட்டினப்பாலையில் பாட்டின் முடிவானது தலைவிக்கு மகிழ்ச்சியூட்டுவதாக சிறப்பாக அமைந்துள்ளது. அதாவது,

**"தெவ்வர்க் கோக்கிய**
**வேலினும் வெய்ய கானமவன்**
**கொலினும் தண்ணிய தடமென்தோளே"**[106]

திருமாவளவன் தான் பகைவர் மேல் ஏவிய வேலினும் நாம் செல்லக் கருதிய காடு வெப்பமுடையன. ஆனால் இப்பொழுது எய்தியிருக்கின்ற இவள் தோள்களோ அவன் செங்கோலினும் குளிர்ந்தன என்றெண்ணி தலைவியை விட்டு பிரிந்து செல்லேன் என்று தன் நெஞ்சிக்கு கூறுவதாக அமைந்துள்ளன. இப்பாட்டின் முடிவானது தலைவியின் மேல் கொண்டுள்ள அன்பையும் இல்லறப் பாங்கினையும் உணர்த்துகின்றன.

## 4.9. தொகுப்புரை

❖ புலவர்கள் ஒரு பாடலை இயற்றும் போது, தொடர்ச்சியாக ஒரே கருத்தை மட்டும் கூறாது, இடையிடையே பல்வேறு கருத்துக்களைக் கூறி இறுதியில் தாம் கூற நினைக்கும் கருத்தை சிறப்பாக எடுத்தியம்பியுள்ளனர். இவ்வாறு கூறுவதால் அப்பாடல் அனைவரின் உள்ளத்தையும் கவரும் விதமாக அமைந்துள்ளதைக் காண முடிகிறது.

❖ அவ்வகையில் பத்துப்பாட்டு சிறந்த பாடுபொருளை உடையதோடு மட்டுமின்றி சிறந்த அமைப்பினையும் கொண்டு விளங்குகின்றன.

❖ முல்லைப்பாட்டு 103 அடிகளைப் பெற்று நீண்ட பாடலாக இருப்பினும் இது தான் கூறவரும் கருத்தை மட்டும் கூறாமல், முதலில் தலைவியின் ஆற்றாமையைக் கண்டு செவிலித்தாய் ஆறதல் கூறவும் தலைவி ஆற்றாதவளாகிறாள் எனத் தொடங்கி பின் தலைவன் பாசறையில் இருக்கும் நிலையும், மீண்டும் தலைவியின் நிலையும், மீண்டும் தலைவனின் நிலையும் மாறிமாறி கூறப்பட்டு, இறுதியில் தேரில் பூட்டிய குதிரையின் கழுத்து மணியோசை ஒலிக்க அதனைக் கேட்டு தலைவி மகிழ்ச்சி அடைந்ததாக இப்பாடல் முடிவு பெற்றுள்ளதை எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

❖ இப்பாடலின் இடையிடையே பாசறையில் மறவா்களுக்கு அரண்கள் அமைக்கப்பட்ட விதத்தையும், நாழிகையை அளந்து இத்துணை என அறிந்து கூறும் நாழிகைக் கணக்கா் இருந்ததையும் மிகச் சிறப்பாக சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.

❖ மதுரைக்காஞ்சி 782 அடிகளைக் கொண்டு ஒரே பாடலாக இருப்பினும் இப்பாடல் நெடுஞ்செழியனுக்கு நிலையாமையை எடுத்துக் கூறுவதோடு மட்டுமல்லாது, இடையிடையே மதுரையின் சிறப்புகளையும், மதுரையில் நிகழும் பல்வேறு நிகழ்வுகளும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

❖ இப்பாடலின் தொடக்கத்தில் (1- 61) வரிகளில் மாங்குடி மருதனாா் நெடுஞ்செழியனுக்கு நிலையாமை கருத்துக்களை எடுத்துக் கூறுவதாகவும் பின் அவன் முன்னோா்களின் செங்கோன்மைச் சிறப்பினையும், போரின் இயல்பினையும் நால்வகைப் படைகளின் திறத்தையும் கூறுவதாக அமைக்கப்பட்டுள்ளன.

❖ மேலும், 62 – 209 வரையிலான அடிகளில் செழியனின் சிறப்பினையும், அவன் பெற்ற வெற்றியையும், மீண்டும் செழியனின் சிறப்பினையும், போா்த்தொழிலில் அவன் கொண்ட ஊக்கத்தையும், செழியன் பகைவா் நாட்டைப் பாழ்படுத்தியமையும், செழியனின் சான்றாமையையும் எடுத்துக்கூறி ஆசிரியா் பாட்டுடைத் தலைவனை வாழ்த்துவதாக கட்டமைக்கப்பட்டுள்ளன.

❖ பின் 210 – 237 வரையிலான அடிகளில் இவ்வுலகத்தில் எதுவும் நிலையன்று. எனவே போா்த்தொழிலே நிலையெனக் கருதி அதிலே

பெருநாட்டங் கொள்ளாமல் உலக அறநெறிகளில் ஈடுபட வேண்டும் என்று அறிவுறுத்துவதாகப் பாடப்பட்டுள்ளதை எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

❖ 238 – 269 வரையிலான அடிகள் ஐவகை நிலங்களின் இயல்பினையும், மதுரையில் நிலவிய சமயப் பள்ளிகளையும், தனித்தனி வீதிகளின் அமைப்பையும் தெளிவாக சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.

❖ 700 – 782 அடிகள் ஒரு தொடராக அமைந்து இளமை, யாக்கை, செல்வம் நிலையாமைகளை கூறி வந்த புலவர், பின் நில்லாத இவ்வுலகத்தில் நிலையுடையதாகிய வீடுபேற்றை பல யாகங்களை செய்த உன் முன்னோனாகிய பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைப் போன்று வேள்விகள் பல செய்வாயாக என்றும், முன்னோர்கள் சென்ற நெறி ஆசிரியரைச் சார்ந்து பெற்ற அறிவின் முதிர்ச்சி, சுற்றமொடு பொலிந்து தோன்றும் பெருந்தகைமை ஆகியவற்றைக் கூறி செழியனை வாழ்த்துவதாகப் பாடல் முடிக்கப்பட்டுள்ளன.

❖ குறிஞ்சிப்பாட்டானது தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்பதாகப் பாடப்பட்டுள்ளது. இது நாடகப் பண்புடையதாகவும் ஒரு நாள் நிகழ்ச்சியை தெளிவாக கூறுவதாகவும் விளக்கப்பட்டுள்ளது.

❖ குறிஞ்சி நில ஒழுக்கத்தை எடுத்துக்கூறும் இது 1 – 34 வரையிலான அடிகள் ஒரே தொடராக அமைக்கப்பட்டு தோழி செவிலிக்கு தலைவியின் மறையினை வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளதை புலப்படுத்துகின்றன.

❖ 35 – 106 வரையிலான அடிகளில் தலைவியும் தோழியும் தினைப்புனம் காத்தலும், அருவி, சுனை போன்றவற்றில் நீராடுதலும், 99 வகையான மலர்களைப் பறித்து விளையாடுதல் போன்ற நிகழ்ச்சிகளும், பின் 107 – 214 வரையிலான அடிகளில் தலைவனின் இயல்புகளும், தலைவன் தலைவி இருவரும் உரையாடிய விதம், தலைவன் நாட்டின் இயல்புகளை மிகவும் அழகாக தொகுத்துரைக்கப்பட்டுள்ளன.

❖ 215 – 261 வரையிலான அடிகள் இரவுக்குறியின்கண் வரும் தலைவனுக்கு ஏற்படும் துன்பங்களும், அதனால் ஏற்படும் வருத்தத்தையும் கூறி இப்பாடல் முடிக்கப்பட்டுள்ளதைக் காண முடிகிறது.

❖ 188 அடிகளைக் கொண்ட நெடுநல்வாடையானது 1 – 72 வரையிலான அடிகளில் கூதிர்காலத்தினால் பறவை, விலங்கு, மக்கள் அடையும் இன்னல்களையம், 73 – 134 வரையிலான அடிகளில் அரண்மனையின் அமைப்பையும், அந்தபுரத்தில் அரசியின் கட்டில் மற்றும் அதில்

வரையப்பட்டுள்ள பல்வேறு உருவங்களைப் பற்றியும் தெளிவாகக் கூறப்பட்டுள்ளன.

- ❖ மேலும், 135 – 188 வரையில் ஒரே தொடராக அமைந்து தலைவனைப் பிரிந்த தலைவியின் நிலையும், கொற்றவை வழிபாட்டையும் போரில் விழுப்புண்பட்ட வீரர்களின் நிலையையும் வாடைக்காற்று வீசுதலையும், விழுப்புண்ணைக் கண்ட வேந்தனின் மனநிலைகளையும் கூறுவதாக அமைந்துள்ளன. அதாவது இருவேறு மனநிலையை நெடுநல்வாடை சுட்டிக்காட்டுகிறது.
- ❖ 301 அடிகளைக் கொண்ட பட்டினப்பாலையின் தொடக்கம் (1 - 28) காவிரியின் சிறப்புகளை வருணித்து, பின் சோழ நாட்டின் சிறப்பினையும், தன்மையினையும் விளக்குவதாக அமைந்துள்ளன.
- ❖ 29–218 அடிகளில் பட்டினத்திலுள்ள தோட்டங்கள், அட்டில் சாலைகள், பண்டசாலை முற்றம், அங்கு நாட்டப்பட்டிருக்கும் கொடிகளின் சிறப்பையும், 218–220 வரையிலான அடிகளில் தலைவன் இப்பட்டினமே பெறினும் தன் தலைவியை விட்டு பிரியேன் என்று தன் நெஞ்சிற்குக் கூறுவதாக பாடல்கள் அமைந்துள்ளன.
- ❖ மேலும் 221 – 298 வரை ஒரு தொடராக அமைந்து கரிகாலனின் வீரம், கொடை, சிறப்பு போன்றவற்றை எடுத்துக்கூறி, இறுதியாக 299 – 301 வரையிலான அடிகளில் பாடலின் முடிவானது தலைவிக்கு மகிழ்ச்சியூட்டுவதாகவும், தலைவன் தலைவிமேல் கொண்ட அன்பினைப் புலப்படுத்துவதாகவும் கட்டமைக்கப்பட்டுள்ளதை உணர்த்துகின்றன.

# பின்குறிப்புகள்

1. அக்னிபுத்ரன். எல்.கே. இலக்கியமும் சமூகவியல் கோட்பாடும், ப. 194.
2. வரதராசன். மு, இலக்கியத்திறன், ப. 45.
3. இராமலிங்கம்பிள்ளை. வெ, இலக்கிய இன்பம், ப. 1.
4. மணவாளன். அ. அ, இருபதாம் நூற்றாண்டின் இலக்கிய கோட்பாடு, ப. 15.
5. சண்முகம். முல்லைவீ, புதுக்கவிதைப் பாடுபொருள், ப. 53.
6. மணவாளன். அ. அ, இருபதாம் நூற்றாண்டின் இலக்கிய கோட்பாடு, ப. 12.
7. அகத்தியலிங்கம், சங்க இலக்கியங்கள் செவ்வியல் இலக்கியங்களே, ப. 55.
8. ராதா. க, அக இலக்கியத்தில் பெண்ணாளுமை, ப. 2.
9. சோமசுந்தரனார். பொ. வே, முல்லைப்பாட்டு, பா.அடி. 21 – 23.
10. இளம்பூரனார் உரை, தொல்காப்பியம், பொருள், நூ. 75.
11. மாணிக்கவாசகன். ஞா, தொல்காப்பியம், மரபியல், நூ. 1561.
12. விசுவநாதன். அ, கலித்தொகை, பா. 9.
13. சோமசுந்தரனார். பொ. வே, பத்துப்பாட்டு (தொகுதி. 1), பெரும். அடி. 119–120.
14. மோகன். இரா, பத்துப்பாட்டு (தொகுதி. 1), முல்லைப்பாட்டு, பா.அடி 55–58.
15. செயபால். இரா., அகம், பா – 43: 6–7.
16. புலியூர்கேசிகன். (உ.ஆ). சிலப்பதிகாரம், உரைமேற், பா. 5:49.
17. திருநாவுக்கரசு. சி. கம்பராமாயணம், கிங்காரப்படலம், பா. 4.
18. அறவாணன். க. ப, திருக்குறள் - 1293.
19. மேலது, 1234.
20. மேலது, 1236.
21. சோமசுந்தரனார். பொ. வே, முல்லைப்பாட்டு, பா.அடி. 100–103.
22. மாணிக்கவாசகன். ஞா, தொல்காப்பியம், பொருள், நூ–1022.
23. மாணிக்கவாசகன். ஞா, புறநானூறு, பா. 72.
24. அறவாணன். க.ப, திருக்குறள்-700.
25. மேலது, 698.
26. சோமசுந்தரனார். பொ. வே, மதுரைக்காஞ்சி. பா.அடி. 19–23.
27. அறவாணன். க.ப, திருக்குறள்-291.
28. மாணிக்கவாசகன். ஞா, புறநானூறு, பா. 182.

29. மோகன். இரா (உ.ஆ), பததுப்பாட்டு (2), மதுரைக்காஞ்சி, அடி. 207–208.

30. மேலது, 236–237.

31. நடராசன். பி.ரா (உ.ஆ), பத்துப்பாட்டு, மதுரைக்காஞ்சி, பா.அடி. 489–492.

32. பரிமேலழகர் உரை, திருக்குறள்-118.

33. சோமசுந்தரனார். பொ.வே, மதுரைக்காஞ்சி, பா.அடி.542–544.

34. மேலது, பா.அடி. 698–99.

35. மாணிக்கவாசகன். ஞா, தொல்காப்பியம், பொருள். நூ. 1006.

36. நடராசன். பி.ரா, பத்துப்பாட்டு, மதுரைக்காஞ்சி. பா.அடி. 677.

37. மேலது, அடி. 775–780.

38. சோமசுந்தரனார். பொ. வே, குறிஞ்சிப்பாட்டு, பா.அடி.5.

39. மாணிக்கவாசகன். ஞா, புறநானூறு, பா.12.

40. இளம்பூரணார் உரை, தொல்காப்பியம், பொருள், நூ.12.

41. தமிழண்ணல், செவ்விலக்கியச் சிந்தனைகள், ப.68.

42. சோமசுந்தரனார். பொ. வே, குறிஞ்சிப்பாட்டு, பா.அடி.13–15.

43. மேலது, பா.அடி. 30–32.

44. இளம்பூரணார் உரை, தொல். பொருள், நூ.38.

45. இராமசுப்பிரமணியம். வ.த, நம்பியகப்பொருள், நூ.48.

46. மேலது, நூ.47.

47. தமிழண்ணல், தொல்காப்பியம், பொருள். நூ.985.

48. மேலது, நூ.992.

49. சோமசுந்தரனார்.பொ. வே, பத்துப்பாட்டு (2), குறிஞ்சிப்பாட்டு, பா.அடி.3-8.

50. பரிமேலழகர் உரை, திருக்குறள்,1102.

51. நாகராசன். வி (உ.ஆ), குறுந்தொகை, பா.49.

52. சோமசுந்தரனார். பொ. வே, பத்துப்பாட்டு (2), குறிஞ்சிப்பாட்டு, பா.அடி.25–26.

53. இளம்பூரணார் உரை, தொல்காப்பியம், பொருள், மெய், நூ.25.

54. சோமசுந்தரனார். பொ.வே, குறிஞ்சிப்பாட்டு, பா.அடி. 101–106.

55. இளம்பூரணார் உரை, தொல். பொருள், நூ.965.

56. புலியூர்கேசிகன் (உ.ஆ), சிலப்பதிகாரம், பா.4:39–41.

57. விசுவநாதன். அ., கலித்தொகை, பா. 55.

58. சோமசுந்தரனார். பொ. வே, திணைமாலை நூற்றைம்பது, நூ.பா. 1.

59. அறவாணன். க.ப, திருக்குறள்-125.

60. மாணிக்கவாசகன். ஞா, புறநானூறு, பா.284.

61. வேங்கடசாமிநாட்டார். ந.மு, மணிமேகலை, பா. 93–97.

62. பாலசுந்தரம் பிள்ளையவர்கள்.தி.சு, நாலடியார், பா.38.

63. மாணிக்கம். வ. சுப, தமிழ்க்காதல், ப.130.

64. இராமசாமி. பெரி. மு, நக்கீரர் ஓர் ஆய்வு, ப.126.

65. நடராசன். பி. ரா. பத்துப்பாட்டு, நெடுநல்வாடை, அடி.108–112.

66. மேலது, அடி. 8.

67. திருநாவுக்கரசு. சி., கம்பராமாயணம், ஆற்றுப்படலம், பா. 15.

68. மேலது, கார், பா.79.

69. சோமசுந்தரனார். பொ.வே, நெடுநல்வாடை, பா.அடி. 64.

70. மேலது, 185.

71. மேலது, 12.

72. நடராசன். பி.ரா, பத்துப்பாட்டு, சிறுபாண், அடி.256–258.

73. மேலது, மதுரைக்காஞ்சி, அடி. 535.

74. பாலசுப்பிரமணியன். கு.வெ., நற்றிணை, பா.370.

75. ஔவை துரைசாமிபிள்ளை. து, பதிற்றுப்பத்து, பா.52.

76. மாணிக்கவாசகன். ஞா, புறநானூறு, பா.9.

77. மோகன். இரா, பத்துப்பாட்டு (2), மதுரைக்காஞ்சி, பா.அடி.501–502.

78. மேலது, பட்டினப்பாலை, அடி.142–145.

79. சோமசுந்தரனார். பொ.வே, நெடுநல்வாடை, பா.அடி. 146–147.

80. வேங்கடசாமி நாட்டார். ந. மு, மணிமேகலை, பா.16:131.

81. மேலது, பா.53:12.

82. பரிமேலழகர் உரை, திருக்குறள்-776.

83. மாணிக்கவாசகன். ஞா, தொல்காப்பியம், பொருள். நூ. 1009.

84. புலியூர்கேசிகன். சிலப்பதிகாரம், பா. 34.

85. நாராயணவேலுப்பிள்ளை. எம், பத்துப்பாட்டு, நெடுநல்வாடை, அடி. 181–188.

86. அறவாணன். க. ப, திருக்குறள் - 71.

87. இளம்பூரணார் உரை, தொல், பொருள். புறத், நூ.18.

88. புலியூர்கேசிகன் (உ.ஆ), கலிங்கத்துப்பரணி, ப.124.

89. மாணிக்கம். அ, தமிழ்விடுதூது, கண்ணி. 193.

90. சோமசுந்தரனார்.பொ.வே, பத்துப்பாட்டு (1), சிறுபாண், பா.அடி. 42–46.

91. செயபால். இரா., அகம், பா.9: 15–16.

92. சோமசுந்தரனார்.பொ.வே, பட்டினப்பாலை, அடி. 20-28.

93. புலியூர்சேசிகன் (உ.ஆ), சிலப்பதிகாரம், பா.9:59–62.

94. பரிமேலழகர் உரை, திருக்குறள் - 261.

95. மேலது, 226.

96. வேங்கடசாமி நாட்டார். ந.மு, மணிமேகலை, பா.11: 13–16.

97. சோமசுந்தரனார். பொ. வே, பட்டினப்பாலை, பா.அடி. 75–77.

98. மாணிக்கவாசகன். ஞா, தொல், மரபு, நூ.1500.

99. அறவாணன். க.ப, திருக்குறள் - 756.

100. சோமசுந்தரனார். பொ.வே, பட்டினப்பாலை, பா.அடி. 160–171.

101. இளம்பூரணார் உரை, தொல்காப்பியம், புறத், நூ. 88.

102. சோமசுந்தரனார். பொ.வே, பத்துப்பாட்டு (2), பட்டினப்பாலை, பா.அடி.196–205.

103. மேலது, 218–220.

104. மேலது, 213–217.

105. நாகராசன். வி (உ.ஆ), குறுந்தொகை, பா. 267.

106. சோமசுந்தரனார் பொ.வே, பத்துப்பாட்டு (2), பட்டினப்பாலை, பா.அடி.299–301.

# இயல் – 5

## கட்டமைப்பியல் நோக்கில் சமூகம்

**தலைப்பு** **பக்க எண்**

# இயல் – 5

# கட்டமைப்பியல் நோக்கில் சமூகம்

தமிழ்மொழியில் தோன்றிய இலக்கண இலக்கியங்கள் தமிழர்களின் உயிர்மூச்சு என்றே கூறலாம். இலக்கியங்கள் பழங்கால மக்களின் வாழ்க்கை முறைகளையும், பண்பாடுகளையும், பழக்ககவழக்கங்களையும் வரலாறுகளையும் பிரதிபலிக்கின்றன. அவ்வகை இலக்கியங்கள் மக்களுக்கு இன்றியமையாத தேவையாக அமைந்துள்ளன. இலக்கியங்கள் பழங்கால மக்களின் கலைநயத்தையும் நாகரிகத்தையும் மக்களின் பல்துறை அறிவையும், சிந்தனைப் பாங்கினையும் நாம் தெளிவாக அறிந்து கொள்ள உதவுகின்றன. தமிழ் இலக்கியங்களுள் தொன்மையும் தலைமையும் வாய்ந்தவை சங்க இலக்கியங்களே. இவ்விலக்கியங்கள் சமூகத்திற்கு பல்வேறு முன்னேற்றக் கருத்துகளை எடுத்தியம்புகின்றன.

“இலக்கியம் வாழ்க்கையின் எதிரொலிகள். சமுதாயத்தின் வளர்ச்சியைக் காட்டும் மைல்கற்கள். மனித இலட்சியத்தின் உயிர்நாடி. சங்க இலக்கியம் தமிழரின் வாழ்க்கை நோக்கங்களை உணர்த்தும் மிகத்தெளிவான கண்ணாடி. தொல்காப்பியம் தமிழரின் வலக்கண் என்றால் சங்க இலக்கியம் தமிழரின் இடக்கண்”[1] என்று கடிகாசலம் குறிப்பிட்டுள்ளார். இலக்கியம் சமுதாயத்தின் செயல்பாடுகளை, எண்ணங்களை அதன் அமைப்பை எவ்வாறு எடுத்தியம்புகின்றது என்பதை இவ்வியல் ஆராய முற்படுகிறது.

## 5.1 சமுதாயம் - விளக்கம்

சமுதாயம் என்பது பல குடும்பங்களில் வாழும் மனிதர் பலரின் கூட்டமைப்பும் இணைப்புமாகும். தொடக்கத்தில் மக்கள் நாடோடிக் கூட்டமாக வாழ்ந்த நிலையில் குடும்பம் என்ற அமைப்பும் எவ்வித ஒழுங்கும் அம்மக்களிடம் இல்லை. ஆண் பெண் இருவருக்குமிடையே தொடர்பு மட்டுமே இருந்தது. ஆனால் குடும்பம் என்ற அமைப்பு இல்லாமல் போயிற்று. காலப்போக்கில் ஒழுங்குமுறை உருவான பொழுதுதான் திருமணம், குடும்பம் என்ற அமைப்புகள் ஏற்பட்டன.

ஒவ்வொரு காலக் கட்டத்திலும் தோன்றிய இலக்கியமானது, ஒவ்வொரு வகையான இலக்கியங்களைப் பிரதிபலித்த போதிலும் அவை நம்மைச் சுற்றியுள்ள சமுதாயத்தைப் பற்றியோ, சமுதாய நிகழ்வுகளைப் பற்றியோ, சமுதாயச் சிக்கல்களைப் பற்றியோ முழுமையாக எடுத்துரைக்கவில்லை. ஒப்பிலக்கண அறிஞர் ஹேரிலெவின் "இலக்கியத்திற்கும் சமுதாயத்திற்கும் இடையேயுள்ள உறவுகள் பரஸ்பரமானவை என்றும், இலக்கியம் சமுதாய காரணங்களின் விளைவு மட்டுமல்ல. சமுதாய விளைவுகளின் காரணமுமாகும்."[2] என்று கூறுகின்றார்.

சமூகம் என்ற இனிமையானச் சொல்லுக்கு கூட்டம், குழு, தொகுதி, சந்ததி ஆகிய பொருள்கள் உண்டு. ஒவ்வொரு மனிதனும் ஏனைய மனிதர்களுடன் கொண்டுள்ள சிக்கலான உறவு முறைகளைத் தான் சமூகம் என்று கூறுவர். ஒவ்வொரு நாளும் மனித சமுதாயத்தில் ஏதாவதொரு சூழ்நிலைத் தாக்கத்தாலும் மக்கள் உணர்விலும் வாழ்விலும் ஏற்படுகின்ற மாற்றங்களாலும் அச்சமுதாய சூழ்நிலை உருவாக்கிய வண்ணமே இருக்கின்றன. அச்சமுதாயம் பண்பாடுகளை உள்ளடக்கியதாக அமைந்துள்ளன.

## 5.2 பண்பாடு – சொற்பொருள் விளக்கம்

பண்பாடு என்னும் உயரிய சொல் தமிழ் மக்களுக்கே உயரிய தனிப்பட்ட சொல்லாகும். இச்சொல் 1937ல் டி.கே. சிதம்பரமுதலியார் தமிழுக்கு கொண்டு வந்த புதிய சொல்லே 'பண்பாடு' என்பதாகும். இச்சொல்லிற்கு திருந்துதல், செம்மைப்படுத்துதல், தகுதியாதல் என பல பொருள்கள் உண்டு. இத்தகைய பொருள்களைத்தான் சங்க இலக்கியங்கள் இயம்புகின்றன. சிறந்த வாழ்க்கைக்கு அடிப்படையாக அமையும் உள்ளப் பாங்கினையே 'பண்பாடு' என்று கூறுவர்.

பண்பாடு என்பதை ஆங்கிலத்தில் Culture என்று குறிப்பிடுவர். அத்தகைய பண்பாடு – ஒரு கூட்டுச் சொல்லாக அமைந்துள்ளன. ஆரம்பகாலம் முதல் பண்பு, பண்புடைமை, பண்புடையாளர் என்ற சொல் வழக்கிலுண்டே தவிர 'பண்பாடு' என்ற சொல் வழக்கில் இல்லை. இரண்டு அடிச்சொற்கள் சேர்ந்து ஒரு சொல்லாதல் தமிழில் உண்டு. அதன்படி பண்பு + படுதல் என்ற சொற்களின் விகுதிகள் குறைந்து பண் + படு என நின்று,

பின் வருமொழி நீண்டு ‘பண்பாடு’ என்றாயிற்று. செம்மைப்படுத்தப்பட்ட மானிட உணர்வுகளே பண்பாடு என்ற சொல்லின் பொருளாகும்.

பண் என்ற சொல்லின் வேர்ப்பொருள் ‘இசைவு’ என்றும் கூறுவர். இதை ‘பண்என்னாம் பாடற்கியையின்றேல்’ என்ற குறள் வழி அறிய முடிகிறது. மேடுபள்ளங்களோடு வலியதாய்க் கிடக்கும் நிலம் சமநிலையும் மென்மையும் பெற்ற போது நிலம் பண்பட்டது என்கிறோம். மனமும் அத்தகைய பக்குவ நிலையைப் பெறும்போது மனம் பண்பட்டது என்று கூறலாம். எனவே பண்பாடு என்பது மனத்தோடும் மனித சமுதாயத்தோடும் தொடர்புடைய சொல்லாக இருந்து, சமுதாயக் கட்டுக்கோப்புக்கும் சமுதாய முன்னேற்றத்திற்கு உயிர்நாடியாக விளங்குகின்றது. மேலும் முரண்பாடுகளையும், மோதல்களையும் அழிவுகளையும் தவிர்த்துச் சமுதாயத்தில் ஓர் இசைவு நிலையை உண்டாக்கி உண்மையான அமைதிக்கு அடித்தளமாக இருப்பது பண்பாடாகும். சுருக்கமாகக் கூறின், சமுதாய அமைதிக்கும் சமுதாய முன்னேற்றத்திற்கும் சமுதாய மேம்பாட்டிற்கும் முதன்மை தந்து சமுதாயத்தோடு தக்கவாறு இணங்கியும், ஒத்தும் இசைவாக வாழும் இயல்பே பண்பாடு என்பதை,

**“பண்என்னாம் பாடற்கு இயைபின்றேல் கண்என்னாம்**
**கண்ணோட்டம் இல்லாத கண்”**[3]

என்று வள்ளுவர் குறளின் மூலம் உணர்த்தியுள்ளார். அதாவது பண்பாட்டால் சங்ககால மக்களின் மனம் பண்பட்டதை உணரமுடிகிறது.

## 5.3 பண்பாடு என்பதற்கு அறிஞர்கள் கூறும் கருத்துக்கள்

உயரிய பண்பாடுகள் உலகம் முழுவதற்கும் பொதுவானதாகும். அத்தகைய பண்பாடு என்ற சொல்லிற்கு பல வகையில் அறிஞர்கள் பொருள் கூறுகின்றனர்.

“மக்களது அறிவு நலம், குணநலம், கொள்கை நலம், ஒழுக்க நலம், வாழ்க்கை நலம் முதலியன மேன்மேலும் திருந்தி வரும் நிலையே பண்பாடு”[4] என்று விளக்கம் அளிக்கிறார் பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளை.

“மாந்தர்தம் பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள், கலையுணர்வுகள், நீதிநெறிமுறைகள், வழிபாட்டு நெறிகள் முதலானவற்றில் அவர்தம் பண்பாடுகள் மிளிரும் என்றும், மக்களை மாக்களினின்றும் வேறுபடுத்திக்

காட்டுவதும் அவர்தம் பண்பாட்டுக் கூறுகளேயாகும்"[5] என்று சுந்தரமூர்த்தி கூறுகின்றார்.

"பண்பாட்டினை இருவழியில் அடைகின்றோம். ஒன்று தனிமனிதனாகத் திருத்தப்பட்டு அடைவது. மற்றொன்று சமூகத்தில் பரம்பரையாகப் பரவி நிற்கும் பண்பாட்டின் பயனாகத் தனிப் பயணமின்றி அடையும் பண்பாடு[6] என்று எல். கே. அக்னிபுத்ரன் கூறுகின்றார். "பண்பாடு எனப்படுவது அறிவு, நம்பிக்கை, கலைகள், அறநெறிகள், சட்டம், பழக்கவழக்கங்கள் மற்றும் மனிதனால் பெறப்பட்ட திறன்களும் பழக்கவழக்கங்களும் அடங்கிய சிக்கலான தொகுப்பாகும்."[7] என்கிறார் கி.பி. டெய்லர் அவர்களும்,

"ஒரு தலைமுறையினரிடமிருந்து அடுத்த தலைமுறையினால் பரிமாற்றம் செய்யக்கூடிய அனைத்தையும் பண்பாடு என்று கூறலாம் என்று - உட்ஸ்வொர்த் அவர்களும் குறிப்பிடுகின்றனர்."[8] "பண்பாடென்பது ஒரு சமூகத்தில் இருக்கின்ற தன் வாழ்வியலை அதனடிப்படையில் அமைத்துக்கொள்ள விரும்புகின்ற மூலாதாரமான மாண்புகள் பற்றிய உணர்வு"[9] என்று கா. தட்சிணாமூர்த்தி அவர்கள் விளக்கம் கூறியுள்ளார். இங்ஙனம் பண்பாடு என்ற சொல்லிற்கு அறிஞர்கள் பலரும் பல்வேறு பொருள்களைத் தருகின்றனர். பண்பாடு பல பொருள்களுக்கு உரியதேயாயினும் நிலத்தையும் மக்களின் உள்ளத்தைப் பற்றியுமே பெருவழக்காகப் பேசுகின்றன. ஆங்கிலத்திலும் Culture என்னும் பெயர்ச்சொல் சிறப்பாக நிலப்பண்பாட்டையே குறிப்பதாக அமைந்துள்ளன.

பண்பாட்டின் வளர்ச்சியில் பல படிநிலைகள் உள்ளன. தனிமனிதனுடைய உணர்வுகளும் செயல்களும் பழக்கவழக்கங்களும் பண்பாட்டு வளர்ச்சியுறுதலில் ஒரு நிலையாகும். இது தனிமனிதர்கள் ஒன்றாகக் கூடி வாழ்வதால் உருவாகும் ஒரு அமைப்பாகும். சமூகங்களின் பண்பட்ட முன்னேற்றம் என்பது மற்றொரு நிலையாகும். மக்கள் பலர் சேர்ந்து ஒரு சமுதாயமாகப் பின்னிப் பிணைந்து இயங்கும்பொழுது தான் சமூகங்கள் உருவாகும். வாழ்க்கை நெறி, பழக்க வழக்கங்கள், கலையுணர்வு, சிந்தனை முதிர்ச்சி ஆகிய அனைத்தும் இணைந்து ஒருவகைச் சமுதாயச் சிந்தனையாக வெளிப்படுவதே பண்பாடு என்னும் மூன்றாம் நிலையாகும். இம்மூன்று நிலைகளிலும் மனிதனின் உள்ளத்து உணர்வுகள் பண்பட்டு, பதப்பட்டு செம்மை நலமுறுவதே பண்பாடு என்று குறிப்பிடுவது தெளிவாகின்றது.

## 5.4 திருவள்ளுவர் உணர்த்தும் பண்பாடு

வள்ளுவர் அறிவு வளர்ச்சியைக் காட்டிலும் பண்பு வளர்ச்சிக்கு முக்கியத்துவம் அளிக்கின்றார். அரம் போலும் கூர்மையுடைய கல்வியறிவு உடையவர்கள் எனினும் மக்கட் பண்பு அற்றவர்கள் ஓரறிவு உடைய மரத்திற்கு ஒப்பானவர்கள் என்கிறார். மக்கட்பண்புடையோரையே சான்றோர் பெருந்தகையான், நயனுடையான் என்றெல்லாம் குறிப்பிடுவர். இவர்கள் தமக்கென வாழாது பிறர்க்கென வாழும் தன்மையினை உடையவர்கள். இத்தன்மையுடையவர்கள் தமக்கு ஒரு பழியெனில் இந்திரலோகத்தையே பெரினும் அஞ்சி ஒடுங்கி வேண்டேன் என்பார்கள். தமக்கு புகழ்எனின் உயிரையும் கொடுப்பார்கள். இத்தகு இயல்புடையவர்கள் பண்புடையவர்களேயாவர். இவர்கள் அஞ்ச வேண்டியவற்றிற்கு அஞ்சி அடக்கமே உருவாக இருப்பர். தம் உழைப்பு முழுவதையும் பிறருக்காகவே என கருதுவர். இந்திரனுடைய அமிழ்தமே கிடைப்பினும் அதை தனியே உண்ண மாட்டார்கள். இந்த உலகம் பண்புடையவர்களாலேயே வாழ்ந்து வருகின்றது. இப்பண்பு இல்லையென்றால் என்றோ உலகம் அழிந்திருக்கும் என்பதை,

> **"பண்புடையார் பட்டுண்டு உலகம் அ∴தின்றேல்**
>
> **மண்புக்கு மாய்வது மண்"**[10]

என்ற குறளில் கூறியுள்ளார். மனிதன் இவ்வுலகில் பிறக்கும் போது நல்ல தன்மைகளோடு தான் பிறக்கின்றான். காலங்கள் கடந்தோட வினைகள் சூழ்ந்து கொள்வதால் பண்பாடுடைய மனிதனாகவும், பண்பாடற்ற மனிதனாகவும் அவன் மாறுகிறான். வள்ளுவர் பண்பாடு, நாகரிகம் என்ற இரண்டையும் ஒரே பொருளில் கையாளுகின்றார். பண்புடையவர்கள் தம்மொடு நன்கு பழக்கமுடையவர்கள் நஞ்சைக் கொடுப்பினும் மறுக்காமல் வாங்கி உண்ணும் நிலையை,

> **"பெயக்கண்டும் நஞ்சுண் டமையாவர் நயத்தக்க**
>
> **நாகரிகம் வேண்டு பவர்"**[11]

என்று வள்ளுவம் குறிப்பிடுகின்றது. இவற்றிலிருந்து பண்பாடு சமூகத்தில் இன்றியமையாததாக கருதப்பட்டது என்பதையும், பண்புடைய மக்கள் பிறருக்கு நன்மையையே செய்பவர்களாகவும் இருந்துள்ளனர் என்பதையும் வள்ளுவர் வழியாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

## 5.5 நாகரிகம் - பண்பாடு

கோடிக்கணக்கான எண்ணத்துகள்கள் கொட்டிச் சிதறும் இடம் மனித மனம். தெளிந்த நீரோடையாக உள்ள மனித மனத்தில் சமுதாயச் சூழலால் பல்வேறு தீய எண்ணங்கள் என்ற அசுத்தங்கள் கலக்கின்றன. அதை அசுத்தங்கள் என்று அடையாளம் கண்ட மானிட மனங்கள் பண்பாடு என்ற சுத்தகரிப்புக் கருவி மூலம் நீக்கப்படுகின்றன. சில மனங்கள் நீக்க முயல்கின்றன. சில மனங்கள் நீக்க இயலாமல் தவிக்கின்றன.

மானிடம் தோன்றிய காலத்து வெறும் உணர்வுகளுடன் மட்டுமே இருந்தது. பின் அறிவு வளத்தால் உணர்வு பயன்படுத்தப்பட்டுப் பண்பாடு என்ற உணர்வாக மலர்ந்தது. இதன் அடிப்படையிலேயே மானிடப் பிறவிகள் உயர்வாக மதிக்கப்பட்டன. தமிழில் உள்ள சொற்களில் மிகவும் உயர்ந்த சொல் பண்பாடு என்பதாகும். இதனை நாகரீகம் என்றும் அழைப்பர்.

“நாகரிகம் என்பது மானிடத்தின் புறத்தோற்றத்தையும் பண்பாடு என்பது மானிடத்தின் அகத்தோற்றத்தையும் விளக்கிக் கூறும் சொற்களாகும். மானிடத்தின் புறத்தோற்றமாக உணவு, உடை, உறையுள், தொழில், கருவி, கலை, சமுதாய அமைப்பு போன்றனவும், அகத்தோற்றமான காதல், வீரம், கொடை, அன்பு, அறம், ஒழுக்கம், கடமை போன்றவற்றையும் உள்ளடக்கியதாகும்.”[12] என்று மா.பொ. பழனிசாமி குறிப்பிடுகின்றார்.

“நாகரிகம் என்பது திருந்திய வாழ்க்கை. அது எல்லாப் பொருள்களையும் தமக்கே பயன்படுத்துவது. பண்பாடு என்பது திருந்திய ஒழுக்கம். அது எல்லாப் பொருள்களையும் தமக்கும் பிறருக்கும் பயன்படுத்துவது”[13] என்று கு.வெ. பாலசுப்பிரமணியன் குறிப்பிடுகின்றார்.

மேலும், இலக்கணப் பிழையின்றிப் பேசுவதும், எல்லா வகையிலும் துப்புரவாயிருப்பதும், காற்றோட்டமுள்ளதும் உடல்நலத்திற்கு ஏற்றதுமான வீட்டிற்குடியிருப்பதும், நன்றாய் சமைத்து உண்பதும், பிறருக்குத் தீங்கு செய்யாமையும் நாகரிகக் கூறுகளாம். எளியாரிடத்து இனிமையாகப் பேசுவதும், புதிதாய் வந்த ஒழுக்கமுள்ள அயலாரை விருந்தோம்புவதும், இரப்போர்க்கு இடுவதும், இயன்றவரை பிறருக்குதவுவதும், கொள்கையும் மானமும் கெடின் உயிரை விடுவதும் பண்பாட்டுக் கூறுகளாம்”[14] என்று தேவநேயன் கூறுகின்றார். பொதுவாகப் பண்பாடுகள்,

- காதல்

- ❖ வீரம்
- ❖ கொடை
- ❖ அன்பு
- ❖ அருள்
- ❖ அறம்
- ❖ ஒழுக்கம்
- ❖ கடமை

போன்றவற்றை உள்ளடக்கியதாக அமைந்துள்ளன. நாகரிகம், பண்பாடு என்ற இரண்டும் வெவ்வேறு பொருளில் திருவள்ளுவர் கையாண்டுள்ளதைக் காண முடிகிறது.

## 5.6 சங்ககாலப் பண்பாடு

பண்பாட்டின் தோற்றுவாயாக அமைந்த காலமே சங்ககாலம். அதாவது சங்க காலத்தில் மக்கள் காதல், வீரம்,ஈகை போன்ற அனைத்து வகையான செயல்பாடுகளிலும் சிறந்து விளங்கினர். ஆடவர் பெண்டிர் பாகுபாடின்றி சமூகத்தில் அனைவரும் ஒத்த உரிமையுடையவராக வாழ்ந்தனர். இன்றைய காலம் வரை நம் தமிழரிடையே பண்பாடு சிறந்து விளங்குவதற்குக் காரணம் மக்களின் வாழ்வியல் நெறியாகும். இலக்கியத்தில் பண்பாட்டுக் கூறுகளின் தாக்கம் விரவிக் கிடக்கின்றன. சங்ககால மக்கள் பல்வேறு வகையான நம்பிக்கைகளையும், பழக்கவழக்கங்களையும் கையாண்டனர். அப்பழக்கவழக்கங்கள் இடத்திற்கு இடம் மாறுபடக் கூடியனவாக உள்ளன. சங்ககாலம் ‘பண்பாட்டுக் காலம்’ என்று கூறுமளவிற்கு பண்பாடுகள் விரவிக் காணப்படுகின்றன. இக்காலத்தில் திகழும் பண்பாடுகள் அனைத்தும் சங்ககாலத்தின் தொடர்ச்சியேயாகும். சங்ககாலத்தில் வாழ்ந்த மக்களின் பழக்கவழக்கங்களே பண்பாடாக மிளிர்கின்றன. இப்பண்பாடுகள்,

- ❖ காதல்
- ❖ வீரம்
- ❖ இல்வாழ்க்கை
- ❖ நம்பிக்கை
- ❖ பழக்கவழக்கங்கள்
- ❖ உணவு
- ❖ உடை
- ❖ உறையுள்

- ❖ தொழில்
- ❖ கலை

போன்றவற்றை உள்ளடக்கியதாக அமைந்துள்ளன.

## 5.7 காதல்

சங்ககாலச் சமூகத்தில் காதல் என்பது பிறவிதோறும் தொடர்ந்து வரும் ஓர் உயிர்ப்பினைப் புனைவதாகவும், மாற்றிக்கொள்ள இயலாததாகவும் அமைந்துள்ளது. பண்டைய அகவாழ்க்கையில் காதல் சிறந்த இடத்தினைப் பெற்றுள்ளது. ஆனால் அக்கால காதலரும், தோழரும், பெற்றோரும், ஊராரும் காதலைத் தடமாற்ற முனைந்திலர். எல்லா காலங்களிலும் எல்லா நாடுகளிலும் கவிஞர்களைக் கவர்ந்து வந்துள்ள பொருள் காதலாகும். மனிதன் தோன்றிய போதே அவர்களுக்குள்ளே எழுந்த ஒருவகை உணர்வே காதலாகும். ஓரறிவுயிர் முதல் ஆறறிவு வரையுள்ள அனைத்து உயிர்களிடமும் இவ்வுணர்வு இயல்பாகவே அமைந்துள்ளன.

“காதல் என்பது இரண்டு மனங்களின் கூட்டுறவாகும். இஃது உடற்பசி, உள்ளபசி, உயிர்ப்பசி, பிறவிப்பசி என்று நான்கு வகையில் அமைந்துள்ளன”[15] என்கிறார் வ.சுப. மாணிக்கம்.

“காதல் என்னும் சொல்லுக்கு அன்பு, காம இச்சை, பக்தி, வேட்கை, ஆவல், கொல்லுதல், தெறித்தல், ஆந்தையின் குரல் என பல பொருள்கள் உண்டு”[16] என தமிழ் - தமிழ் - ஆங்கில அகராதி குறிப்பிடுகின்றது. தலைவனும் தலைவியும் ஒருவரையொருவர் பார்த்துக் கொள்ளும் பார்வைக் குறிப்பே, இருவரும் மனத்தால் மட்டுமின்றி அறிவினாலும் புரிந்து கொள்வதற்கு உதவிபுரிகின்றன. இக்கருத்தை முன்னிறுத்தி,

**“நாட்டம் இரண்டும் அறிவு உடம்படுத்ததற்கு**
**கூட்டி உரைக்கும் குறிப்புரை ஆகும்”[17]**

என்ற நூற்பா வழி தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். காதலுக்கு இன்றியமையாதது கண்களே. இக்கண்கள் மூலமே காதல் வெளிப்பட்டதை அறியமுடிகிறது. சங்க இலக்கியங்களில் காதல் என்பதை அன்பு என்ற பொருளில் கையாளப்பட்டுள்ளது. அத்தகைய காதலானது திருமணத்திற்கு முன் ஏற்பட்டால் அது ‘களவு’ என்றும், திருமணத்திற்குப் பின் ஏற்பட்டால் அதை ‘கற்பு’ என்றும் தொல்காப்பியர் கூறுவர்.

அகத்தின் கண் தோன்றுவதே காதல். உள்ளத்துணர்வுகளை பிறருக்கு இதுவென கூற இயலாததாகிய ஓர் உணர்வே அகமென்றார் நச்சினார்க்கினியர். அத்தகைய அகத்தின்கண் தோன்றும் காதலை தொல்காப்பியர் கூறுமிடத்து,

**"வினைவயின் பிரிந்தோன் மீண்டு வருகாலை**
**இடைச்சுர மருங்கின் தவிர்தல் இல்லை"[18]**

என்பதன் வாயிலாக தொழில் காரணமாக பொருளீட்டவோ, போர்க்குறித்தோ, தூதாகவோ, கல்விக்காகவோ, தலைவியை விட்டுப் பிரிந்த தலைவன் தான் சென்ற வினை முடித்து திரும்பும் போது இடையில் எங்கும் தங்குதல் இல்லை என்று குறிப்பிடுகின்றார். தலைவன் இடையில் தங்காது விரைந்து வருவதற்குக் காரணம் தலைவியைக் காண வேண்டும் என்ற ஆவலாகும். இது தலைவன் தலைவிமேல் கொண்ட அன்பை வெளிப்படுத்துகிறது.

## 5.8 வீரம்

சங்க காலத்தில் காதலும் வீரமும் இரு கண்களாகப் போற்றப்பட்டன. அக்காலத்தில் காதலினும் வீரமே மிகச் சிறந்ததாகப் போற்றப்பட்டது. சங்ககால ஆடவர்கள் அனைவரும் வீரப் பண்புடையவராகவே காணப்பட்டனர். வீரத்தை வெளிப்படுத்துவதற்காக 'ஏறுதழுவல்' போன்ற வீர விளையாட்டுகளும் சங்ககாலத்தில் நடைபெற்றன. பகை வேந்தனுடன் போரிட்டு வெற்றிபெறும் தலைமகனே அனைவராலும் மதிக்கப்பட்டான். ஆடவர் மட்டுமல்லாது பெண்களும் வீரப்பண்புடையவர்களாகவே காணப்பட்டனர். தம் நாட்டிற்காக இளம் குழந்தையையே போருக்கு அனுப்பிய தாய்மார்களும் அக்காலத்தில் இருந்தனர். அக்காலத்தில் இளம் பருவத்திலிருந்தே போருக்குரிய அனைத்துப் பயிற்சிகளும் அளிக்கப்பட்டன. ஆடவர்களின் வீரத்தை வெளிப்படுத்தும் இடமாக 'போர்க்களம்' அமைந்துள்ளது. அப்போர் களத்தில் வீரர்கள் புறமுதுகிட்டு ஓடுவதை விரும்பாது, எதிர்த்து போர் செய்து வீரப்புண்படுவதையே விரும்பினர். முல்லைப்பாட்டானது தலைவன் போர்க்களத் தொழிலையே பெரிதும் விரும்பியவனாய் போர் முடியும் வரை போர் பற்றிய சிந்தனையோடு காணப்பட்டான் என்பதை,

**"மண்டமர் நசையொடு கண்படை பெறாஅது**

**எடுத்தெறி யெ ஃகம் பாய்தலிற் புண்கூர்ந்து**
**பிடிக்கணம் மறந்த வேழம் வேழத்துப்**
**பாம்புபதைப் பன்ன பரூஉக்கை துமியத்”[19]**

என்ற அடிகள் மூலம் குறிப்பிடுகின்றன. இதில் பகைவர்மேல் மிக்குச் செல்லும் போர் விருப்பத்தாலே உறக்கங் கொள்ளாமல், முன்னாட்களிலே பகைவர் எறிந்த வேல் நுழைந்தமையால் புண் மிகுந்து தம் பிடியானைகளை மறந்தொழிந்த களிற்றியானைகளை நினைந்தும் அடியுண்ட பாம்பு துடிக்குமாறு தலைவன் துடிதுடித்தான் எனக் குறிப்பிடுகின்றது. இவற்றிலிருந்து சங்ககால மக்கள் வீரத்தையே பெரிதும் விரும்பி, அதை அவர்தம் உயிராக கருதினர் என்பது புலப்படுகிறது.

## 5.9 இல்வாழ்க்கை

ஒத்த அன்புடைய தலைவனும் தலைவியும் இணைந்து கற்புநெறி வழுவாது நடத்தும் குடும்ப வாழ்க்கை சங்ககால மக்களால் சிறப்பாகக் கருதப்பட்டது. இதனை,

**“அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை**
**பண்பும் பயனும் அது”[20]**

என்று வள்ளுவர் விளக்குகின்றார். அதாவது தமிழர் பண்பாட்டிலேயே மிகவும் சிறப்பாகப் போற்றப்படுவது இல்லறப் பண்பாகும். சங்ககாலம் தொடங்கி இன்றும் தமிழரிடையே இப்பண்பாடு மிகச் சிறந்ததாக விளங்குகின்றது. இலக்கியங்கள் கற்பனையும், கனவும், பொய்யும் புனைவும் கலந்தவையாகும். இருப்பினும் பண்டையத் தமிழ்ச் சமுதாய நிகழ்வுகளைக் காட்டும் கண்ணாடியாகத் திகழ்கின்றன.

## 5.10 இல்லறம் என்னும் நல்லறம்

பண்டையத் தமிழர் திருமண வாழ்வை இல்லறம் என்று குறிப்பிட்டனர். அதில் இல்லம் பண்பாகவும், அறம் பயனாகவும் அமைவது இல்வாழ்க்கையாகும். தமிழரின் இல்லறக் கொள்கை அன்பும் அறமும் கலந்தது என்று கூறுவர். இல்லம் மனிதன் தங்குவதற்குரிய இடமாக மட்டுமல்லாது, மன அமைதியைத் தரக்கூடிய ஓர் இடமாகவும் விளங்குகிறது.

இல்லாள் என்பவள் கற்பு நெறி தவறாது, தன்னைக் காத்து தன் குடும்பத்தையும் பேணிக் காப்பவளாக இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. அத்தகைய இல்லாளின் சிறப்பினை வள்ளுவரும்,

**“தற்காத்து தற்கொண்டாற் பேணித் தகை சான்ற**

**சொற்காத்துச் சோர்விலாள் பெண்”**[21]

என்ற குறட்பா வழி குறிப்பிடுகின்றார். சங்ககாலம் முதற்கொண்டு தற்காலம் வரையிலும் இல்லத்தில் பெண்ணே இன்றியமையாதவளாகக் காணப்படுகிறாள் என்பதை இவற்றின் மூலம் அறியமுடிகின்றது.

‘‘ஒரு பெண் கல்வியறிவில் சமுதாயப் பண்புகளில் மேம்பட்டு விட்டால் அவள் வீடும், பின் நாடும் காலப்போக்கில் சமுதாயமே முன்னேற்றம் காணும்”[22] என்று க. ராதா கூறுகின்றார். நாடும் வீடும் முன்னேற வேண்டுமாயின் ஒவ்வொரு பெண்ணும் கல்வியறிவில் மட்டுமின்றி, நுட்பமான சிந்தனையிலும் மேம்பட்டிருக்க வேண்டும் என்பதை புலப்படுத்துகின்றது. மேலும் நாட்டின் முன்னேற்றத்திற்கு பெண்ணே முதன்மையானவைகளாகத் திகழ்கின்றாள் என்பதையும் அறிய முடிகிறது.

## 5.11 பழக்க வழக்கங்கள் - விளக்கம்

பழக்கம், வழக்கம் என்னும் இரு சொற்களின் இணைவே பழக்கவழக்கமாகும். பழக்கம் - பயிற்சி, வழக்கம் - ஒழுக்கம் என்று பொருள் கூறுவர். இதனடிப்படையில் பழக்கவழக்கம் என்பதை நோக்கும் பொழுது தனிமனிதனின் பயிற்சி அல்லது ஒழுகும் முறையினைப் பழக்கம் எனவும், இத்தனி மனிதச் செயற்பாடு பொதுமை நிலையில் அதாவது ஒருகுழு அல்லது ஒரு இனம் அல்லது ஒரு மதம் அல்லது ஒரு நாடு என்ற முறையில் பயிலப்படும் பொழுது வழக்கமெனவும் நின்று, இவை ஒருங்கிணைந்த நிலையில் பழக்க வழக்கமெனச் சுட்டப்படுகின்றன. பின்னர் இவை தலைமுறை தலைமுறையாகப் பின்பற்றப்படும் பொழுது மரபாக மலர்கின்றன.

‘‘பழக்க வழக்கங்கள் மனிதனின் வரலாற்றுக் காலம் தொடங்கி வேர்விட்டு வளர்ந்து வந்துள்ளன. மனித சமுதாயத்தினரின் வாழ்வோடு இயைந்து இணைந்துவரும் காரணத்தினால் மக்கள் வாழ்வியலில் பிரித்தெடுக்க இயலாத ஒரு நிலையை அடைந்துள்ளன”[23] என கே. பகவதி கூறுகின்றார். மனிதன் இயற்கையிலேயே தன் உயிருக்கும் உடலுக்கும் ஊறு நேரா வண்ணம் காத்துக் கொள்ளும் உணர்வுடையவன். அவனது நினைவுகளும் நடைமுறை வாழ்வும் இதனடிப்படையிலேயே அமைந்துள்ளன. இத்தகைய அவனது செயல்பாடுகளை நம்பிக்கைகள் என்றும், பழக்கவழக்கங்கள் என்றும் அழைக்கப்படுகின்றன. இவை மனிதனின் காலம், சூழல், எண்ணம் போன்ற பல நிலைகளுக்கேற்ப மாறுபடுகின்றன. சங்ககால

மகளிர் தன்னை அழகுபடுத்திக் கொள்வதை வழக்கமாகவே கொண்டிருந்தனர். அம்மகளிர்கள் சந்தனம், கஸ்தூரி போன்ற வாசனைப் பொருட்களைப் பயன்படுத்தினர். மேலும் அழகிய வாசனை மலர்மாலைகளையும் சூடிக்கொள்வதை வழக்கமாகக் கொண்டனர். ஆனால் அவர்கள் கூதிர் காலத்தில் ஓரிரு மலர்களை மட்டுமே சூடியிருந்தனர் என்பதை,

**“நீடிதழ்க் கண்ணி நீரலைக் கலாவ**

**மெய்க்கொள் பெரும்பணி நலியப் பலருடன்”[24]**

என்ற நெடுநல்வாடை அடிகள் குறிப்பிடுகின்றன. சங்க காலத்தில் பெண்கள் மட்டுமின்றி ஆண்களும் மலர் சூடும் பழக்கம் உடையவர்களாகவே திகழ்ந்தனர். மணமான பெண்களிடம் மட்டுமே மலர் சூடும் பழக்கம் இருந்தது என்பதையும், மணமாகப் பெண்கள் மலர் சூடும் வழக்கம் இல்லை என்பது இதன் வாயிலாக அறிய முடிகின்றது.

## 5.12 நம்பிக்கைகள்

பழமையான எல்லா இனங்களிலும் பல நம்பிக்கைகள் நிலவி வருகின்றன. அவற்றில் பல இன்று வரையிலும் ஆற்றலோடு வாழ்ந்து வருவது வியப்பிற்குரியதாகும். நன்மையின்பால் உள்ள ஆர்வமும் தீமையின்பால் உள்ள அச்சமும் பெரும்பான்மையான நம்பிக்கைக்கு அடிப்படையாக அமைகின்றன. மனிதனுடைய உலகியல் அறிவுக்கு எட்டாத ஐம்புலன்களுக்கும் அகப்படாத சில கேள்விகளுக்கும் விடைதேட முற்படும்போது மனிதன் சில நம்பிக்கைகளைப் பதிலாகப் பெறுகிறான். மனிதன் கொண்ட அத்தகைய நம்பிக்கைகள் பற்றிய ஆராய்ச்சி இன்னும் நடந்து கொண்டேயுள்ளது.

மனிதன் அளவுகடந்த ஆற்றலைக் காணும் போது மிரண்டு, பயந்து பணிந்து விடுகிறான். அதனை ஆக்கவோ, அடக்கி ஆளவோ இயலாத போதே அச்சம் உருவாகிறது. அவ்வச்சத்தின் விளைவாகத் தோன்றியதே நம்பிக்கையாகும். அந்த நம்பிக்கையின் வாயிலாக அளவில்லா நன்மையைப் பெறுகின்ற போது, நன்றிப் பெருக்கால் மனம் மகிழ்ந்து அச்செயலுக்குக் காரணமானவற்றைக் கைதொழுது போற்றுகிறான். எனவே அச்சமும் நன்றியுணர்வுமே வழிபாட்டிற்கு அடிப்படையாக அமைந்துள்ளன. பழந்தமிழர்கள் உலகப் பொருள்கள் சிலவற்றில் (மரம், மலை, நீர் முதலியன) தெய்வங்களும் பேய்களும் குடியிருப்பதாக எண்ணி அவற்றிற்குப்

பலியிடுதல் போன்ற சடங்குகளை இயற்றி வழிபாடுகள் செய்வதை இலக்கியங்களில் காண முடிகின்றது.

## 5.13 சமய வாழ்வு

சங்ககாலச் சமுதாயம் பெரிதும் இம்மை வாழ்வின் செம்மையிலும் இன்பத்திலும் நாட்டமுடையதாகவே இருந்தது எனினும் சமய வளர்ச்சி குறிப்பிடத்தக்க அளவில் ஏற்பட்டிருந்தது. ஆனால் சமயம் வெறும் வாழ்க்கை நெறியாக மட்டுமே இருந்தது. சிவனும் திருமாலும் அன்று வணங்கப்பட்டு வந்தாலும் சைவம் வைணவம் என்னும் சமயங்கள் அன்று உருவாகவில்லை. ஆனால் இவை உருவாதற்கு அடிப்படையான கோட்பாடுகள் தோன்றியிருந்தன. மேலும் பண்டையத் தமிழருக்கே உரிய நடுகல் வழிபாடும் வெறியாட்டும் செல்வாக்கு செலுத்தின. அத்தோடு ஆரிய நாகரிகக் கலப்பினால் வேத வேள்வியும் இடம்பெற்றிருந்தது. நகர்ப்புறங்களில் இருந்த மேன்மக்களிடமே ஆரிய சமயமும் அதன் சடங்குகளும் வேரூன்றியனவேயன்றி நாட்டுப்புற மக்களிடத்து செல்வாக்கு செலுத்திடவில்லை.

இம்மை, மறுமை, சொர்க்கம், நரகம், நிலையாமை, வீடுபேறு போன்றவை பற்றியும் சான்றோர்கள் சிந்தித்தனர். அக்காலத்தில் துறவும் போற்றப்பட்டது பேய் பிசாசுகள் பற்றிய அச்சமும் இடம் பெற்றிருந்தன. சிவன், திருமால், முருகன், பலராமன், கொற்றவை, திருமகள் போன்ற தெய்வங்கள் அன்று அறிமுகமாகி இருந்தன. ஆனாலும் சமணமும் பௌத்தமும் பரவியிருந்தன. ஆனால் வைதீகர்கள் அச்சமயங்களை எதிர்த்துள்ளனர் எனினும் சமயப் போராட்டங்கள் உருவாகவில்லை என்பது புலப்படுகிறது.

### 5.13.1 கோவில்களும் சமயப்பள்ளிகளும்

மதுரை மாநகரம் மிகச்சிறந்த நகரமாகக் கருதப்படுகிறது. இந்நகரத்தை கோவில் மாநகரம் என்றும், தூங்கா நகரம் என்றும் கூறுவதுண்டு. இம்மதுரையிலுள்ள சமயப்பள்ளிகள் பற்றி மருதனார் மிகவும் திறம்பட எடுத்துக்கூறியுள்ளார். இந்நகரில்,

- பௌத்தப்பள்ளி
- அந்தணர் பள்ளி
- அமண் பள்ளி

போன்ற சமயப்பள்ளிகள் இருந்ததை மதுரைக்காஞ்சி வாயிலாக ஆசிரியர் எடுத்துரைத்துள்ளார். பேரணிகலன்களையுடைய சிறுபிள்ளைகள் கூட்டத்தினுள் தம்மைப் பிரிந்து செல்லாதபடி தாய்மார்கள் அவர்களின் கையை தம் கையோடு பற்றினார்கள். அழகு பெற்றுத் திகழும் பேரிளம் பெண்டிர் பூசைக்கு வேண்டிய மலர், புகை முதலியவற்றோடு புத்தர் பெருமானை வழிபாடு செய்து, வாயாற் புகழ்ந்து பாடுகின்ற சிறந்து விளங்கும் பௌத்தப் பள்ளிகள் காணப்பட்டதை,

**"காமர் கவினிய பேரிளம் பெண்டிர்**
**பூவினர் புகையினர் தொழுவனர் பழிச்சிச்**
**சிறந்து புறங்காக்குங் கடவுட் பள்ளியும்"**[25]

என்ற வரிகள் மூலம் உணர்த்தப்படுகிறது. இதன்மூலம் பாண்டிய நாட்டில் புத்த சமயம் பரவி இருந்ததை அறிய முடிகிறது.

### 5.13.2 அந்தணர் பள்ளியும் அமண் பள்ளியும்

வேதங்களைக் கற்று, பின் கற்றதன்வழி நிற்பவர்கள் அந்தணர்கள். அவ்வாறு நிற்காதவர்களுக்கு நன்மை சிறிதுமின்றி துன்பமே வரும் என்பது அவர்களின் கொள்கையாகும். கற்க வேண்டியவற்றை குற்றமில்லாமல் கற்று பின் கற்றதன் வழியில் நிற்றல் வேண்டுமென்பதை,

**"கற்க கசடறக் கற்பவை கற்றபின்**
**நிற்க அதற்கும் தக"**[26]

என்ற குறட்பா வலியுறுத்துகிறது. அவ்வாறு சிறந்த வேதங்களைப் பொருள் விளங்க ஓதி, ஓதியதற்குத் தக ஒழுகி, நிலவுலகத்தில் வாழ்வராயினும் இறைவனோடு கலந்து உணர்வு ஒன்றாகி வீடுபேற்றினைப் பெற்றனர். பின்பு அறநெறியிற் தவறாதவராய் அனைத்து உயிர்களிடத்தும் நட்புடன் விளங்குகின்ற தன்மையுடைய அந்தணர் பள்ளிகள் இருந்ததாக (468-474) மதுரைக்காஞ்சி குறிப்பிடுகின்றன. அந்தணர் பள்ளிகள் மட்டுமின்றி அமண் (சமண) பள்ளிகளும் இருந்ததை,

**"கயங்கண் டன்ன வயங்குடை நகரத்துச்**
**செம்பியன் றன்ன செஞ்சுவர் புனைந்து**
**நோக்குவிசை தவிர்ப்ப மேக்குயர்ந் தோங்கி**

**இரும்பூது சான்ற நறும்பூஞ் சேக்கையுங்**

**குன்றுபல குழ்இப் பொலிவன தோன்ற"** [27]

எனவரும் அடிகளால் அறியமுடிகிறது. முக்கால நிகழ்வுகளை உணர்ந்து விரதங்களை மேற்கொண்டு பலரும் கல்வி அறிவினையுடையவரும், சான்றோர்கள் நெருங்கி நோன்பாற்றுவதற்கு குளிர்ச்சியுடைய அருக கடவுளின் திருக்கோயிலில் செம்பாற் செய்தற் போன்ற சுவர்களில் ஓவியம் தீட்டப்பெற்று பார்ப்பதற்கு வியப்பூட்டுகின்ற அமணப்பள்ளியும் இருந்ததை உணர்த்துகின்றன.

### 5.13.3 தவப்பள்ளிகள்

தவம் செய்வோர் தங்கும் பள்ளிகள் பற்றி பட்டினப்பாலை குறிப்பிடுகிறது.

**"தவப்பள்ளித் தாழ்காவின்**

**அவிர்சடை முனிவர் அங்கி வேட்கும்**

**ஆவுதி நறும்புகை முனைஇக் குயில்தம்**

**மாயிரும் பெடையோ டிரியல் போகி**

**பூதங் காக்கும் புகலருங் கடிநகர்த்**

**தூதணம் புறவொரு தூச்சிறச் சேர்க்கும்"** [28]

என்ற அடிகள் ஆழ்ந்த கிணறுகள் பொருந்திய முற்றங்களையுடைய பெரிய காளைகள் கட்டப்பட்டிருக்கின்ற பல கட்டடங்கள் அமைந்திருக்கின்றன. காவிரிப்பூம்பட்டினத்தில் சமணர்களும் புத்தர்களும் தவம் செய்யும் பள்ளிகள் பல இருந்தன. தாம் தங்கியிருக்கும் சோலைகளில் ஒளிவிடுகின்ற சடையையுடைய முனிவர்கள் நெருப்பில் யாகம் செய்வதனால் மேலே வெண்மையான புகை எழுந்தன. அப்புகையைக்கண்டு அஞ்சி ஆண்டு குயில்கள் தமது பெண் குயிலுடன் அந்த சோலையை விட்டுப் பறந்தோடி மற்றவர்கள் புதுவதற்குரிய பூதங்கள் காத்துக் கொண்டிருக்கும் பாதுகாப்பான பாழடைந்த கூட்டத்திற்குள் புகுந்து அங்கே தங்கியிருக்கின்ற தூதுணம் புறாக்களுடன் தானும் வசித்துக் கொண்டிருக்கும் என்பதிலிருந்து பழங்காலத்தில் தவப்பள்ளிகள் இருந்ததைக் காணமுடிகிறது.

## 5.14 நானிலத் தெய்வ வழிபாடுகள்

தொல்காப்பியர் நிலங்களை நான்காகப் பிரித்து அந்நிலங்களுக்கு உரிய தெய்வங்களையும் குறிப்பிட்டுள்ளார். முல்லை நிலத்திற்கு

மாயோனையும், குறிஞ்சி நிலத்திற்கு சேயோனையும், மருத நிலத்திற்கு வேந்தனையும், நெய்தல் நிலத்திற்கு வருணனையும் குறிப்பிட்டுள்ளார்.

நிலத்திற்கேற்பவும் சூழ்நிலைக்கேற்பவும் மக்களின் உணர்ச்சிகள் அமைவது இயல்பாகும். ஆதலால் அவற்றுக்கேற்ப நிலவழிபாடுகள் அமைந்துள்ளன. இவ்வழிபாடுகள் பற்றி திரு.வி.க கூறுகையில்,''குறிஞ்சி மக்கள் மலைமீது நின்று கதிரவன் கடலினின்றும் எழும் இயற்கை எழிற்காட்சியைக் காலையிற் கண்டு களித்தனர். அவர்களுக்கு அக்காட்சி நீலமயில் மீது செவ்வேள் இருப்பது போல தோன்றியது. அவ்வியற்கை வழிபாடே முருக வழிபாடாக மலர்ந்தது''[29] என்கிறார். மலைதெய்வம் என்பதற்கேற்ப முருகன் கோயில்கள் பெரும்பாலும் மலையின்கண் இருப்பதைக் காணலாம். குறவரின் வேட்டைக்குரிய வேலே முருகனின் படைக்கருவியாக உள்ளன. குறிஞ்சிநில பறவை மயிலே முருகனின் ஊர்தி குறமகள் வள்ளியே முருகனின் மனைவி. முருகனின் படையலுக்குரிய பொருள் தேனும் திணையுமாகும். இத்தன்மையுடைய இறைவனைப் பற்றி கா.சு.பிள்ளை கூறும்போது, ''கடற்பரப்பில் காலையிலே தோன்றும் இளஞாயிரே செவ்வேளாகிய முருகன் என்றும், கடும் பகலில் வெம்மையுற்ற கதிரே சிவன் என்றும் குறிப்பிட்டுள்ளர்.'' [30] தமிழர்கள் வணங்கிய தெய்வங்களில் மிகவும் பழமையானது சேயோன் என்னும் முருக வழிபாடாகும். இவ்வழிபாடு பின்னாளில் வடவரின் கார்த்திகேயனாகக் கருதப்பட்டான் என்பது குறிப்பிடத்தக்கது. முருகன் வீரக் கடவுளாக, போர்க்கடவுளாக சங்க நூல்களிலே புகழப்படுகிறார். 'வெல்போர்ச் சேஎய்', 'கடம்பமர் நெடுவேள்', 'திருத்தகு சேஎய்', 'செருவெம் சேஎய்', 'செருமிகு சேஎய்' என்று பலவாறாகப் புகழப்படுவதைக் காணமுடிகின்றன.

### 5.14.1 திருமால் வழிபாடு

மாயோன் எனப்படும் திருமால் முல்லை நிலத்து ஆயர்களால் வணங்கப்பட்ட தெய்வமாகும். மாயக் கிருஷ்ணனுக்கும் மாயோனுக்கும் தொடர்பில்லை என்றும் கூறுவர். கிருஷ்ண என்னும் வடசொல்லுக்குக் கருமை என்பது பொருளாகும். இச்சொல்லுக்கு ஆரிய மொழியில் வேறுபெயரில்லை. மாயோன், மால், விண்டு என்பன ஒருபொருட் சொற்களாகும். விண்டு என்னும் சொல்லுக்கு முகில், வானம், திருமால் என்னும் பொருள்கள் உண்டு. ''விண் - விண்டு என்பதை ஆரியர்கள் விஷ்ணு என திரித்துக் கொண்டனர் என்றும் இச்சொல் ஆரியத்தில் கதிரவனைக் குறித்தது என்றும் கதிரவனின் காலை, நண்பகல், மாலைச் செலவுகளையே திருமால் மூன்றுலகத்தையும்

அளந்தததாகக் கற்பித்தனர்'' [31] என்றும் பாவணார் கூறுகின்றார். திருமாலுக்குரிய ஆரிய பெயராகிய 'விஷ்ணு' என்பது சங்க நூல்களில் இடம்பெறவில்லை. ஆனால் மால், மாயோன் என்னும் பெயர்கள் மட்டுமே முல்லைப்பாட்டில் இடம்பெறுகின்றன.

**''நனந்தலை உலகம் வளைஇ நேமியொடு**
**வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை**
**நீர்செல நிமிர்ந்த மாஅல்''** [32]

இவற்றையெல்லாம் நோக்கும் போது திருமால் வழிபாடு சங்ககாலத்திலேயே இருந்தமை தெளிவாகின்றது. காட்டில் மலர்ந்த காயாம்பூ திருமாலின் நிறத்தை நினைவூட்டியதால் சிறப்பினதாகக் கருதப்பட்டது. அதேப்போல் அரசர்களைத் திருமாலோடு ஒப்பிட்டுப் பாராட்டுவது 'பூவை நிலை' எனப் புகழப்பட்டது. முல்லை நில ஆயர்களின் தொழில், உணவு முதலியவை அவர்தம் தெய்வமான மாயோனுக்கும் உரியனவாயின. கண்ணன் மாடு மேய்த்ததும், குழலூதியதும், வெண்ணெய் உண்டதும் நப்பின்னை ஆய்ச்சியை மணந்தது போன்றவையனைத்தும் முல்லைநிலத் தொடர்பினவேயாகும் என்பதை இதில் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

### 5.14.2 வருணன் வழிபாடு

நெய்தல் நிலப் பரதவர் வலைவளம் வாய்க்கத் தம் இல்லத்தே சுறாமீன் கோட்டினை நட்டுக் கடல் தெய்வமாகிய வருணனை வழிபட்டனர். அப்பொழுது தாழை மலர் சூடியும், பனங்கள் அருந்தியும், கடலில் மீன் பிடிக்க செல்லாது மகிழ்ந்திருந்தனர். வருணனை 'ஆரியக் கடவுள்' என்றும் கூறுவர். இந்திர வழிபாடு போலவே வருணன் வழிபாடும் தமிழகத்தே மறைந்தது.

''சமயம் மனிதனுக்கும் அவனுக்கு அப்பாற்பட்ட ஒரு சக்திக்கும் அல்லது பரிபூரணத்துவத்துக்கும் இடையே ஒரு தொடர்பை ஏற்படுத்துகின்ற ஒரு அமைப்பாகும். சுருக்கமாக கூறின், மனிதனுக்கும் கடவுளுக்கும் தொடர்பு ஏற்படுத்திக் கொள்ளப்படும் ஒரு கருவி'' [33] என்று கூறுவார் எல்.கே. அக்னிபுத்ரன். இவ்வகையான சமயங்கள் அனைத்தும் மனிதனை நல்வழிபடுத்துவதற்காகவே தோன்றியனவாகும். ஆனால் மனிதனின் மனமோ, அறிவோ அதன் தெய்வீகத் தன்மையை உணர்வதில்லை, சமயமானது

அதன் நம்பிக்கை முறைகளில் எளிதில் அறிந்து கொள்ள இயலாத நிலையில் உள்ளது என்பதை உணரமுடிகின்றது.

### 5.14.3 கொற்றவை வழிபாடு

பாலை நில தெய்வமாக கொற்றவையைக் குறிப்பிடுவர். இக்கொற்றவையே பெண்தெய்வங்களுள் ஒன்றான ‘காளிதேவி’ என்றும் கூறுவர். வஞ்சித் திணையின் துறைகளுள் ஒன்றாக கொற்றவை என்னும் காளிதேவியைப் புகழ்ந்துபாடும் விதமாக,

**“குன்றாச் சிறப்பின் கொற்ற வள்ளை”**[34]

என்று தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். தெய்வத்தை வழிபடுவதன் வாயிலாக தாம் எண்ணிய செயல் நிறைவடையும் என்று மக்கள் நம்பினர். தலைவன் போருக்குச் சென்று, அங்கு தம் கடமையையே பெரிதாக எண்ணி, பாசறையில் போர் பற்றிய சிந்தனைகளோடு இருக்கிறான். அதே வேளையில் அரண்மனையில் இருக்கும் மகளிர்கள் தலைவன் போரில் வெற்றிப் பெற்று திரும்பி வரவேண்டுமென்று போர்த் தெய்வமாகிய கொற்றவையை வேண்டுவதாக,

**“புலப்பொடு வதியும் நலம்கிளார் அரிவைக்கு**
**இன்னா அரும்படர் தீர, விறல்தந்து**
**இன்னே முடிகதில் அம்ம”**[35]

என்ற நெடுநல்வாடை அடிகள் குறிப்பிடுகின்றன. சங்கப் பாடல்கள் கொற்றவையைப் போர்த்தெய்வம் என்று குறிப்பிடுகின்றன. ஆனால் இக்காலத்தில் கொற்றவையை காவல் தெய்வமாக வழிபட்டு வருவதைக் காண முடிகின்றது.

### 5.14.4 பொது வழிபாடு

பொதுவாக அனைவராலும் ஏற்றுக் கொள்ளக்கூடிய வழிபாடே பொது வழிபாடு என்று கூறலாம். ஒவ்வொரு சமய மக்களும் அவரவர்க்குரிய வழிபாட்டு முறைகளைக் கையாண்டனர். சங்ககால மக்கள் ஏதேனும் தொழிலைத் துவங்கும் முன் தெய்வத்தை வணங்கி பின் தொழிலைத் தொடங்கியதாக,

**“தேளம் கொண்டு, தெய்வம் நோக்கி**

**பெருபெயர் மன்னர்க்கு ஒப்பமனை வகுத்து”**[36]

என்ற வரிகள் குறிப்பிடுகின்றன. புதிதாக அரண்மனைக் கட்டும் பணித் துவங்கும் நேரத்தில் நான்கு திசைகளிலும் உள்ள காவல் தெய்வங்களை வழிபட்டனர் என்பது புலனாகிறது. மேலும்,

**“மதி சேர்ந்த மக வெண்மீன்**
**உருகெழு திறல் உயர்கோட்டத்து”**[37]

என்ற வரிகளிலிருந்து மக்கள் தெய்வங்களை மட்டுமல்லாமல், பொய்கை (அல்லது) குளம், கோவில் போன்றவற்றையும் வழிபடுவது வழக்கமாகவே கொண்டிருந்தனர் என்பதை உணரமுடிகின்றது.

### 5.14.5 மாலை நேர வழிபாடு

வழிபாடுகளிலேயே மிகவும் சிறந்த வழிபாடாகக் கருதப்படுவது மாலைநேர வழிபாடாகும். மாலை நேரத்தில் இறைவனை வழிபடுவதன் மூலம் தம் இல்லம் சிறப்படையும் எனவும், எண்ணிய செயல் வெற்றியடையும் எனவும் மக்கள் நம்பினர். அவ்வகையான மாலை நேர வழிபாட்டை சங்க அக இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன. மாலை நேரத்தில் மகளிர்கள் இரும்பினால் செய்யப்பட்ட விளக்கில் நெய்தொய்ந்த திரியைக் கொளுத்தி நெல்லையும் மலரையும் தூவி கைக்கூப்பி தங்கள் இல்லில் இருக்கும் தெய்வத்தை வணங்கியதாக,

**“இரும்புசெய் விளக்கின் ஈர்ந்தரிக் கொளீஇ**
**நெல்லு மலருந் தூஉய் கைதொழுது**
**மல்லல் ஆவணம் மாலை யயர”**[38]

என்ற வரிகள் சுட்டுகின்றன. இவ்வழிபாடு பெண்களுக்குரியதாகவே போற்றப்படுகிறது. இம்மாலை நேர வழிபாடு மக்களிடம் இன்றும் தொன்றுதொட்டு வழிபட்டு வருவதைக் காணமுடிகிறது.

### 5.14.6 நடுகல் வழிபாடு

பண்டைத் தமிழரிடம் வேரூன்றியிருந்த வழிபாடுகளில் மிகவும் குறிப்பிடத்தக்கது இறந்தோர்க்கு நடப்பட்ட கற்களை வணங்கும் நெறியாகும். போரில் இறந்துபட்ட வீரர்களின் நினைவினைப் போற்றும் வண்ணம் அவர்களின் பெயரையும், பெருமைகளையும், பெற்ற வெற்றியினையும் பொறித்து கல்நட்டு வணங்கும் மரபே ‘நடுகல் வழிபாடாகும். தொல்காப்பியர்

வெட்சித்திணையின் ஒரு கூறாக காட்சி, கால் கோள், நீர்ப்படை, நடுகல், பெரும்படை, வாழ்த்து என ஆறுநிலைகளைக் குறிப்பிட்டுள்ளார். சங்கச் செய்யுட்களில் காணப்படும் நடுகல் பற்றிய குறிப்புகளில் பல வெட்சித் திணையோடு தொடர்புடையனவாகவே உள்ளன. ஆநிரையை மீட்டு அம்முயற்சியில் உயிர்துறந்த வீரர்களே பாராட்டப்பட்டுள்ளனர். ஆக்கள் நாட்டின் பொருளாதாரத்தில் சிறப்பிடம் பெற்றிருந்தது.

“நாட்டின் பொருளாதாரத்திற்குப் பகைவரால் ஏற்பட்ட தீங்கிலிருந்து காப்பாற்றுவதற்கு உயிர்விட்ட வீரர்களைப் போற்றியது வியப்புக்குரிய செய்தியன்று”[39] என்று அ. தட்சிணாமூர்த்தி கூறுகின்றார்.

நடுகற்களைச் சுற்றி பரதவர்கள் வேலைநட்டுக் கேடயங்களை நிறுத்தி வைத்து வழிபாடு செய்தனர் என்று பட்டினப்பாலை குறிப்பிடுகின்றது. இதனையே,

**“கிடுகு நிரைத்து எஃகூன்றி**

**நடுகல்லின் அரண்போல”**[40]

என்ற வரிகள் சுட்டுகின்றன. இப்பொழுது தமிழ்நாட்டில் வணங்கப்பெறும் பல வீரத்தெய்வங்கள் நடுகல் வழிபாட்டிலிருந்து தோன்றியவையாகும். சாம்பான், இருளன், சன்னாசி, மதுரைவீரன் போன்ற காவல் தெய்வங்கள் இவ்வகையின என்பதில் ஐயமில்லை.

### 5.14.7 கடற்தெய்வ வழிபாடு

கடற்கரையில் வாழும் பரதவர்கள் கடலை தெய்வமாக வழிபடுதலுண்டு. அவர்கள் முழுநிலா நாளிலே மீன்பிடிக்க கடலுக்குச் செல்லாது, மீனும் இறைச்சியும் படைத்துக் கடற்தெய்வத்தை வணங்குவதை வழக்கமாகக் கொண்டிருந்தனர். சுறா மீனின் கொம்பினை மணலிலே நட்டு, அதன்மேல் தெய்வம் ஏறியதாகக் கருதி அதை வழிபட்டனர். பின்பு மாலைகளைச் சூடிக்கொண்டு பனங்கள்ளையும் நெற்கள்ளையும் உண்டு மகிழ்ந்து அக்கடற்தெய்வத்திற்கு விழா எடுப்பது வழக்கம். உவா (பௌர்ணமி) நாளிலே இவ்விழா நடைபெறும் என்பதனை,

**“சினைச் சுறவின் கோடுநட்டு**

**மனைச் சேர்த்திய வல்லணங்கினான்**

**மடற்றாழை மலர் மலைந்தும்**

**பிணர்ப் பெண்ணைப் பிழிமாந்தியும்**

**புன்றலை யிரும் பரதவர்**

**பைந்தழைமா மகளிரொடு**

**பாயிரும் பனிக்கடல் வேட்டஞ் செல்லாது**

**உவவு மடிந்து உண்டாடியும்"[41]**

என்ற பட்டினப்பாலை அடிகள் உணர்த்துகின்றன. உவா நாளில் கடலில் கொந்தளிப்பு அதிகம் இருக்கும் என்பதனால் பரதவர்கள் கடலுக்கு செல்வதில்லை. மற்ற நாட்களில் மீன்பிடிக்க அப்பரதவர்கள் கடலுக்குச் சென்றால் பெண்கள் கடற்தெய்வத்திற்கு விளக்கேற்றி வழிபட்டனர் என்பதை பட்டினப்பாலை வழியாக புலனாகிறது. சங்ககாலம் முதற்கொண்டு தற்காலம் வரையிலும் இவ்வழிபாட்டு முறைகள் நிகழ்ந்து கொண்டேயுள்ளன என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

### 5.14.8 கந்துடைத் தெய்வம்

பழங்கால மக்கள் கற்களில் தெய்வம் இருப்பதாகக் கருதி அக்கற்களை வணங்கினர். அத்தெய்வமே 'கந்துடை தெய்வம்' எனப்பட்டது.

**"கொண்டி மகளிர் உண்டுறை மூழ்கி**

**அந்தி மாட்டிய நந்தா விளக்கின்**

**மலரணி மெழுக்கம் ஏறிப் பலர்தொழ**

**வம்பலர் சேக்கும் கந்துடைப் பொதியில்"[42]**

என்ற வரிகளிலிருந்து பொதியில் எனப்பட்ட மன்றங்களின் ஒரு மேடையில் இத்தகு கந்துகள் இருந்தன என்பதையும் கொண்டி மகளிர்கள் குளிர்ந்த நீராற் மன்றத்தினை மெழுகி, அந்தி காலத்தில் பல்வேறு மலர்களால் அணிசெய்து விளக்கேற்றி வழிபட்டனர் என்பதையும் அறிய முடிகிறது.

## 5.15 நிமித்தமும் சடங்குமுறைகளும்

நம்பிக்கையின் வாயிலாக பழங்கால மக்களிடம் நிமித்தமும் சடங்கு முறைகளும் தோன்றின. ஒரு செயலின் தொடக்கத்தில் பிறர் சொல்லும் சொற்களைச் சகுனமாக கருதுவதுண்டு. இவற்றை 'நற்சொல்' என்றும்,'விரிச்சி' என்றும் கூறுவர். பகைவர் நாட்டிற் புகுந்து ஆக்களைக் கவரும்முன் வெட்சி மறவர் விரிச்சி கேட்பர். இதனைத் தொல்காப்பியர் 'பாக்கத்து விரிச்சி' என்று குறிப்பிட்டுள்ளார்.

**“நாழி கொண்ட நறுவீமுல்லை**

**அரும்பவிழ் அலரி தூஉய்க் கைதொழுது**

**பெருமுது பெண்டிர் விரிச்சி நிற்ப”[43]**

என்ற முல்லைப்பாட்டு வரிகள் முதுபெண்டிர் நாழியில் நெல்லை எடுத்துச் சென்று களத்தில் இட்டு, நீரும் பூவும் சொறிந்து விரிச்சி கேட்டனர் என்பதை சுட்டுகின்றன.

## 5.16 வெறியாட்டு

தமிழரின் வழிபாட்டு முறைகளில் மிகவும் பழமையானது வெறியாட்டு எனும் சடங்கு முறைகளாகும். மனிதர்மேல் தெய்வம் ஏறிவருவதுண்டு என்ற நம்பிக்கையின் அடிப்படையில் இச்சடங்கு முறைகள் தோன்றின. இன்றும் கோவில்களில் பூசாரிகள் சாமியாடுவதைக் காண்கின்றோம். இவ்வெறியாடல் சங்காலத்தில் முருகனோடு தொடர்புடையதாகக் கருதப்பட்டது. முருகனுக்குரிய வேலினைக் கையில் ஏந்தி ஆடியோன் ‘வேலன்’ எனப்பட்டான். தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே இவ்வெறியாட்டு பெருவழக்காக இருந்தது என்பதை,

**“வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்**

**வெறியாட்டு அயர்ந்த காந்தளும்”[44]**

என்ற நூற்பா வாயிலாக அறியலாம். இடுக்கண் யாவற்றிற்கும் முருகனே காரணமென்று கூறுவது வேலனது இயல்பாகும். மகளின் மெலிவுக்குக் காரணம் அறிய தாய் ஊர்வேலனை அழைத்து குறி கேட்பாள். அவ்வேலன் சில சடங்குகளை இயற்றி முருகனே அவள் மெலிவுக்கு காரணம் என்று கூறுவதாக இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. இதனையே,

**“செறிதொடி முன்கை கூப்பிச் செவ்வேல்**

**வெறியாடு மகளிரொடு செறியத் தாஅய்க்”[45]**

என்ற பட்டினப்பாலை அடிகளும்,

**“விறல்இழை நெகிழ்த்த வீவருங் கடுநோய்**

**அகலுள் ஆங்கண் அறியுநர் வினாயும்**

**பரவியுந் தொழுதும் விரவுமலர் தூயும்**

**வேறுபல் லுருவிற் கடவுட்பேணி**

**நறையும் விரையும் ஒச்சி"**[46]

என்ற குறிஞ்சிப்பாட்டு வரிகளும் சுட்டுகின்றன. இவ்வரிகளில் மெலிவுக்குக் காரணான அத்தெய்வத்தை செவிலித்தாய் போற்றி வாழ்த்தியும், வணங்கியும், மலர்தூவியும், அகில் சந்தனம் முதலான மணப்பொருள்களை செலுத்தியும் வழிபட்டாள் என்பதை அறிய முடிகிறது.

## 5.17 உணவு முறைகள்

மனிதன் உயிர்வாழ இன்றியமையாத பொருள் உணவாகும். பண்டைய மனிதனது முதல் தொழிலே உணவு தேடலாயிருந்தது. அவன் இயற்கையாய்க் கிடந்த காய்களையும், விதைகளையும், கிழங்குகளையும் உணவாக உண்டான். பின்னர் பறவைகளையும், விலங்குகளையும் வேட்டையாடி அவற்றின் இறைச்சியை பதப்படுத்தாமலே உண்டு வந்தான். அறிவும் ஆராய்ச்சியும் பெருகப் பெருகத் தீயை உண்டாக்கக் கற்றுக் கொண்டான். அதன் பின்னரே பச்சையாய் உண்டு வந்த பொருள்களைப் பக்குவப்படுத்தி உண்ணத் தொடங்கினான். உணவு வாயிலாக சமுதாய வளர்ச்சியும் வளர்ந்தது. பின் குடும்பமாக சேர்ந்து வாழ்ந்து, பயிர்த் தொழிலை செய்ய முற்பட்டனர். உணவுப் பொருள்களை உண்டாக்கி உண்ணும் முறைகள் மாறமாற உணவுடன் சுவையும் நாகரிகமும் பிறவும் வளரத் தொடங்கின.

இவ்வுணவு முறைகள் நிலங்களுக்கேற்பவும், சூழலுக்கேற்பவும் வேறுபடுகின்றன. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற ஐவகை நிலங்களிலும் வாழும் மக்கள் அவரவர் நிலங்களில் விளையும் காய்கறிகள், கிழங்கு வகைகள், தானியங்கள் போன்றவற்றை உணவாக உட்கொண்டனர். குறிஞ்சி நிலமக்கள் தேனையும், கிழங்கையும் உணவாக உட்கொண்டனர். இவர்கள் பிற நிலத்தார்க்கும் விற்று அவர்களுக்கு வேண்டிய மீன் மற்றும் நெய்யை வாங்கி சென்றார்கள். மலையின் அடிவாரத்தில் இருந்த சிற்றூர்களில் வாழ்ந்த மக்கள் தினைச்சோறும் நெய்யில் வெந்த இறைச்சியும் உண்டார்கள். இவர்கள் பலாக்கொட்டை, மா, நீர்மோர் ஆகியவற்றைக் கொண்டு தயாரித்த குழம்பையும் மூங்கிலரிசி சோற்றையும் உண்டனர். குறிஞ்சி நில மக்கள் சிறப்பு நாள்களில் நெய்மிக்க உணவை உண்டனர். என்பதை,

**"பைந்நிணம் ஒழுகிய நெய்ம்மலி அடிசில்"**[47]

என்ற குறிஞ்சிப்பாட்டு அடிகள் உணர்த்துகின்றன. இந்நில உணவு முறைகள் இரண்டு நிலைகளை உடையன.

1. காய்கனிகள் முதலிய மரக்கறி உணவினை உட்கொள்ளும் நிலை
2. விலங்கை வீழ்த்திப் பதமாக்கி உண்ணும் நிலை போன்றவையாகும்.

எளிதாகக் கிடைத்தவற்றைப் பெற்று உண்ட மனிதன் அவை கிடைத்திடாத போது வேட்டம் போந்து விலங்குகளைக் கொன்று அவற்றின் இறைச்சியை உண்ணத் தலைப்பட்டான். குறிப்பாக, குறிஞ்சி நிலம் உழவர் உழாமலேயே மிக்க பயன் தருவதாகத் திகழ்ந்தது. நெல், பலா, வள்ளிக்கிழங்கு, தேன் முதலியவை இயற்கையில் எளிதாக கிடைத்தன. பொதுவாக அந்நிலத்தில் தேனும் கிழங்குமே அதிகமாகக் கிடைத்தன. "தொண்டை நாட்டு பாலைநில மக்கள் புல்லரிசியைச் சேர்த்து நிலவுரலிற் குற்றி சமைத்த உணவை உப்புக் கண்டத்தோடு உண்டார்கள். அவர்கள் விருந்தினர்க்குத் தேக்கிலையில் உணவு படைத்தார்கள். மேட்டு நிலத்தில் விளைந்த ஈச்சங்கொட்டைப் போன்ற நெல்லரிசிச் சோற்றையும் உடும்பின் பொறியலையும் உண்டார்கள்" [48] என மா. இராசமாணிக்கனார் கூறுகின்றார். மேலும்,

**"கொலை கடிந்தும் களவு நீக்கியும்**
**அமரர்ப் பேணியும் ஆவுதி அருந்தியும்**
**நல்ஆனொடு பகடு ஓம்பியும்**
**நான்மறையோர் புகழ்பரப்பியும்**
**பண்ணியம் அட்டியும் பசும்பதம் கொடுத்தும்**
**புண்ணியம் முட்டாத் தண்நிழல் வாழ்க்கை**
**கொடுமேழி நசை உழவர்"**[49]

இவ்வரிகள் காவிரிப் பூம்பட்டனத்தில் வாழ்ந்த வேளாளர், களவுத் தொழிலை ஒழித்தும், கொலைத் தொழிலை வெறுத்தும், தேவர்களைப் போற்றியும், யாகங்களில் பலியிட்டும், பசுக்களோடு எருதுகளைக் காப்பாற்றியும், நான்கு வேதங்களையும் அறிந்த அந்தணர்களின் புகழைப் பரவும்படி செய்தும், விருந்தினர்களுக்குப் பலகாரங்கள் செய்து சிறந்த உணவை அளித்தனர் என்பதை உணர்த்துகின்றன.

## 5.18 உடைகள்

மனிதனை உயர்த்திக் காட்ட ஆடைகள் இன்றியமையாததாகும். 'ஆடையில்லா மனிதன் அரை மனிதன்' என்னும் பழமொழி மனிதனை உயர்த்திக் காட்டவே பயன்பட்டது. பழங்காலத்தில் மனிதன் ஆடையின்றி காட்டுமிராண்டிகளாய்த் திரிந்து கொண்டிருந்தான். பின்பு காலப்போக்கில் தழைகளையும் மரப்பட்டைகளையும் விலங்குகளின் தோள்களையும் உடைகளாக உடுக்கத் தொடங்கினர். பின்பே நெசவுத் தொழிலைக் கண்டறிந்து பருத்தி ஆடைகளையும் பட்டாடைகளையும் உடுத்தினர். மக்களது அறிவு வளர வளர, வசதிகள் பெருக பெருக அவர்களுடைய வாழ்க்கை வீடு முதலிய பலவற்றிலும் உயர்ந்தாற் போன்று, உடை வகையிலும் நாகரிகம் வளரலாயிற்று.

"ஆப்பிரிக்காவில் நிலநடுக்கோட்டையடுத்த இடங்களில் ஆடவர் மரவுரியை உடுக்கின்றனர். பெண்டிர் பனை ஓலைகளில் செய்த சிறுபாவாடையை அணிகின்றனர். பாலினீசியாவில் ஆடவர் மரவுரியை உடுக்கின்றனர். பெண்டிர் மரப்பட்டையாலாகிய பாவாடை அல்லது வகிர்ந்து பின்னிய இலையாலாகிய ஆடைகளை அணிகின்றனர். ஆஸ்திரேலியப் பழங்குடிகள் மரப்பட்டையாலாகிய ஒரு கச்சையை உடுக்கின்றனர். ஆப்பிரிக்காவிலுள்ள மக்கள் முக்கோண வடிவமான ஒரு தோலை கால்களுக்கிடையில் கோர்த்து இடுப்பைச் சுற்றி முடிந்து கொள்கின்றார்கள். அவர்களுடைய பெண்டிர் ஒரு கச்சையை அணிகின்றனர். வடஅமெரிக்க இந்தியர் ஆட்டுத் தோள்களையும் மாட்டுத் தோள்களையும் உடுக்கின்றனர்"[50] என்று மா. இராசமாணிக்கனார் கூறுகின்றார்.

## 5.19 உடைகளின் வகைகள்

சங்ககால மக்கள் பலவகையான உடைகள் அணிந்திருந்தனர். ஆனால் இவர்கள் என்னென்ன உடைகளை அணிந்திருந்தனர் என்பதைத் திட்டவட்டமாக அறிய இயலவில்லை. இருப்பினும் பத்துப்பாட்டு அகநூல்களில் ஆங்காங்கு கூறப்பட்டுள்ள விபரங்களிலிருந்து அக்கால மக்கள் பயன்படுத்திய பலவகை உடைகளின் பெயர்களை வகைப்படுத்தலாம். அவைகளை,

- தழை ஆடை
- உயர்ந்த வகை ஆடை என இரண்டாகப் பிரிக்கலாம்.

### 5.19.1 தழை ஆடை

நெய்தல் நிலமகள் தளிர்கள், தழைகள், மலர்கள் இவற்றாலாகிய தழையுடையை அணிந்திருந்தனர். காவிரிப்பூம்பட்டினத்துப் பரதவரின் சேரிப் பெண்டிர் இத்தழையுடையை அணிந்திருந்ததை,

**"பைந்தழைமா மகளிரொடு"[51]**

என்ற பட்டினப்பாலையடிகள் குறிப்பிடுகின்றது. இதனினின்று சங்ககால மகளிர் தழையுடை அணிந்திருந்ததை அறிய முடிகிறது.

### 5.19.2 துகில் - கலிங்கம்

அரசி கணவன் தன்னைப் பிரியாதிருக்கையில் பூத்தொழிலையுடைய துகிலை உடுத்தினாள் என்றும், கணவனைப் பிரிந்த காலத்தில் மாசேறிய நூலாற் செய்த கலிங்கத்தை உடுத்தியிருந்தாள் என்றும் நெடுநல்வாடை குறிப்பிடுகின்றது.

**"பூந்துகில் மரீஇய ஏந்துகோட்டு அல்குல்**
**அம்மாசு ஊர்ந்த அவர்நூல் கலிங்கம்"[52]**

என குறிப்பிடுவதால் துகில் என்பது ஒருவகை ஆடை என்பதும், கலிங்கம் என்பது மற்றொரு வகை ஆடை என்பதும் தெளிவாகின்றன. துகில் என்பதற்கு 'மேலாடை' என்று நச்சினார்க்கினியர் விளக்கம் கூறுவதையும் காண முடிகிறது.

## 5.20 உயர்ந்த வகை ஆடைகள்

சங்க காலத்தில் சேரி மக்கள் ஒரு வகையான ஆடைகளையும், அரசர் குடும்பத்தினர் ஒரு வகையான ஆடையையும் அணிந்திருந்தனர்.

**"புடைவீழ் அந்துகில் இடவயின் தழீஇ"[53]**

இதில் பாசறையில் தங்கியிருந்த பாண்டியன் புண்பட்ட தன் படை வீரரை இரவிற்காணச் சென்றான். அப்பொழுது அவனது இடத்தோளினின்றும் அழகிய விலை மதிப்பு மிக்க துகில் நழுவி விழுந்தது. பாண்டியன் அதனை இடப்பக்கத்தே அணைத்துக் கொண்டதாக குறிப்பிடுகின்றது. மேலும் பட்டினத்து (மாமல்லபுரத்து) செல்வ மகளிர், பனி, மாசு போன்ற மிக நுண்ணிய துகிலை உடுத்தியிருந்தனர். அவர்கள் பகல் நேரத்தில்

பட்டுடைகளையும், இராக்காலத்தில் மென்மையான துகிலையும் உடுத்தியதாக,

**"பட்டுநீக்கித் துகில் உடுத்தும்"** [54]

என்ற வரிகள் குறிப்பிடுகின்றது. செல்வ மகளிர் இரவில் ஒருவகை. ஆடையும், பகலில் ஒருவகையான மென்மையான ஆடையையும் அணிந்திருந்தனர் என்பது தெளிவாகிறது.

### 5.20.1 கச்சு

கச்சு என்பது ஆடை வகைகளுள் ஒன்றாகும். குறிஞ்சி நிலத் தலைமகன் நுண்ணிய வேலைபாடமைந்த கச்சு என்ற ஆடையை அணிந்திருந்ததாக,

**"நுண்வினைக் கச்சைத் தயக்கறக் கட்டி"** [55]

என்ற அடியும்,

**"அம்பணைத் தடைஇய மென்தோள் முகிழ்முலை**
**வம்பு விசித்து யாத்த வாங்குசாய் நுசுப்பின்"** [56]

என்ற அடிகளும் குறிப்பிடுகின்றன. இங்கு வம்பு என்ற சொல்லுக்கு கச்சு என்பது பொருளாகும். இதில் உயர்ந்தவகை ஆடையான இக்கச்சை அரசமாதேவி தம்மார்பில் இறுகக் கட்டியிருந்ததாக நெடுநல்வாடை உணர்த்துகின்றது.

### 5.20.2 படம் - மெய்ப்பை

சங்ககாலத்தில் படம் என்றழைக்கப்பட்ட ஆடை தற்காலத்தில் சட்டை எனப் பெயர் பெற்றது.

**"படம்புகும் மிலேச்சர்"** [57]

என்ற வரிகளிலிருந்து மிலேச்சர் என்று கூறப்படுபவர் அயல்நாட்டினர் என்பதையும் அவர்களில் சிலர் பாசறையில் அரசனது இருக்கையைக் காத்து வந்தனர் என்பதையும் உணர்த்தப்படுகின்றன. மேலும் 'மிலேச்சர்' என்பவர் ஊமையர் என்பதும் அவர்கள் சட்டை அணிந்திருந்தனர் என்பதும் புலப்படுகிறது. சங்க காலத்தில் யவனர் தமிழகத்துடன் வாணிகம் செய்தனர். அவருட்சிலர் மதுரை, பூம்புகார், வஞ்சி போன்ற தமிழரசர் தலைநகரங்களிலும், துறைமுகப்பட்டினங்களிலும் தங்கியிருந்தனர். அந்த

யவனர் வடிம்பு தாழ்ந்து தம் புடவையை அரையில் அணிந்திருந்தனர். இதனை,

**“மத்திகை வளைஇய மறிந்துவீங்கு நெறிவுடை**
**மெய்ப்பை புக்க வெருவருந் தோற்றத்து**
**வலிபுணர் யாக்கை வன்கண் யவனர்”**[58]

என்ற முல்லைப்பாட்டடிகள் சுட்டுகின்றன. சங்க காலத்தில் ஆண்கள் மேலாடை அணியும் வழக்கம் இல்லை. ஆயினும் அயல்நாட்டிலிருந்து வந்தவர்கள் (மிலேச்சர்) சட்டை அணிந்திருந்ததாக இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. மனிதன் காலம் செல்லச் செல்லத் தான் உடுத்திய உடைகளின் பயன்பாடுகள் சிறப்பியல்புகள் மற்றும் தனித்துவம் ஆகியவற்றை உணர்ந்து அவற்றை உடலுக்கு பாதுகாப்பு அளிக்கும் நோக்கில் உடைகளை உருவாக்குகின்றான். இன்றும் ஒருசில பகுதிகளில் உலகத்தோடு ஒட்டாது, நாகரிக முதிர்ச்சி பெறாது தனித்து வாழும் மக்கள் இயற்கையின் தாக்குதல்களைப் பொருட்படுத்தாமல் ஆதமனிதர்கள் போல திரிவதைக் காண்கின்றோம். எல்லா மனிதர்களும் இத்தகைய காலத்திற்கேற்றவாறு உடை உடுத்துவதில்லை. உடையில் நாகரிக முதன்மை அடைந்தவர்களும், வாழ்க்கை தரத்தில் உயர்ந்தவர்களும், உடைகளை தங்களுக்கேற்றவாறு அணிந்து கொண்டனர் என்பதை இலக்கியங்கள் வாயிலாக அறிந்து கொள்ள முடிகின்றது. மேலும் பழங்காலத்தில் அனைவரும் ஒரே மாதிரியாக உடைகள் அணிவதில்லை. சாதாரண மக்கள் பருத்தி நூலால் செய்யப்பட்ட ஒருவகை ஆடையும், செல்வ செழிப்புடன் வாழும் மக்கள், அரசன், அரசியர் போன்றோர் மணிகள் பதிக்கப்பட்ட உயர்ந்த வகை ஆடையும் அணிந்திருந்தனர் என்பது இலக்கியங்கள் வழி புலப்படுகின்றன.

## 5.21 அணிகலன்கள்

அழகுக்கு அழகு சேர்ப்பான அணிகளாகும். பண்டையத் தமிழர் அடிமுதல் முடிவரை அனைத்து உறுப்புகளிலும் அணிகலன்களைப் பூண்டனர். அவர்கள் தாம் ஈட்டிய தேடிக்குவித்த பொன்னையும் பொருளையும் வைத்து பல அணிகலன்களைச் செய்து, அணிந்து கொண்டு அழகுக்கு அழகு சேர்த்தனர். சமூகத்தில் ஆடையை வைத்து ஒருவனை மதிப்பிடுதல் போன்று அணிகலன்களை வைத்துக்கொண்டு ஒருவனை மதிப்பிட்டு வந்தனர். சங்க காலத்தில் பொன்னால் செய்யப்பட்ட அணிகலன்களில் உயர்வகையான

பவளம், முத்து, மாணிக்கம் என பலவகையான கற்கள் பதிக்கப்பட்டிருந்தன. அக்காலத்தில் மக்கள்அணிந்திருந்த அணிகலன்களை பற்றி கீழ்க்கண்டவாறு காணமுடிகிறது. அவை,

- தலையணி
- கழுத்தணி
- காதணி
- கையணி
- விரலணி
- இடையணி
- காலணி போன்றவையாகும்.

### 5.21.1 தலையணிகள்

சங்ககால ஆடவரும் பெண்டிரும் தம் கூந்தலில் பலவகையான மலர்களையும், கலன்களையும் அணிந்திருந்தனர். இவர்கள் முதலில் வாடும் மலர்களை அணிந்து, காலப்போக்கில் வாடா மாலையான பொன்னால் செய்யப்பட்ட மாலையையும், சிறுசிறு கலன்களையும் சூடலாயினர்.

**“படலைக் கண்ணி பரேரெறுழ்த் திணித்தோள்”** [59]

இங்குள்ள ‘படலைக் கண்ணி’ என்பதற்கு தழை விரவிப் புனைந்த தலையில் சூடும் ஒருவகையான மாலை என்பது பொருளாகும். அதாவது தாமரை, குவளை, கழுநீர் போன்ற மலர்களோடு அதன் இலைகளையும் கலந்து தொடுத்த மாலையையும் ஆடவர்கள் தலையிலும், தோளிலும் சூடிக் கொண்டனர் என்பதைக் காண முடிகிறது. பழங்காலம் முதல் தற்காலம் வரையில் மகளிர்கள் பூச்சூடும் வழக்கம் உள்ளது. அக்காலத்தில் பெண்கள் பலவகையான மலர்களைத் தொடுத்து கூந்தலில் சூடி அழகுடன் விளங்கினர் என்பதை,

**“கொய்தழை தைஇப்**

**பல்வே றுருவின் வனப்பமை கோதையெம்”** [60]

என்ற வரிகளும்,

**“கூந்தல் மகளிர் கோதை புனையார்**

**பல்லிருங் கூந்தல் சின்மலர் பெய்ம்மார்”** [61]

என்ற வரிகளும் சுட்டுகின்றன. மலர் என்றால் மங்கலம் என்பது பொருளாகும். அவ்வகையில் மகளிர்கள் பல்வகை மலர்களை தம் கூந்தலில் சூடி மகிழ்ந்த அவர்கள், குளிர் மிகுதியால் தம் கூந்தலில் குளிர்ந்த மலர் மாலைகளை இட்டு முடியாமல், மங்கலம் எனக் கருதிய ஒருசில மலர்களை மட்டுமே

சூடினர் என்பதை நெடுநல்வாடை குறிப்பிடுகிறது. இதிலிருந்து அக்கால மணமான பெண்கள் மட்டுமே மலர் சூடினர் என்பது தெளிவாகிறது.

### 5.21.2 கழுத்தணிகள்

ஆடவர் பெண்டிர் என இருசாராரும் கழுத்தில் அணிகளை அணிந்திருந்தனர். கழுத்தணிகளாக மலர் மாலைகளும், கலன்களும் பயன்பட்டன. அக்கலன்கள் நுட்பமான வேலைத் திறனுடையவையாக இருந்தன. சில அணிகள் பொன்னால் செய்யப்பட்டு வைரங்கள் இழைக்கப்பெற்றிருந்தன. பழங்காலத்தில் ஆடவர், பெண்டிர் இருவரும் தழையுடன் கட்டிய மலர் மாலைகளை சூடியிருந்தனர்.

**“நகைதாழ் கண்ணி நல்வலந்திருத்தி”** [62]

என்ற அடிகள் ஆண்கள் அழகான இளந்தழைகளுடன் தொடுக்கப்பட்ட மலர்மாலைகளை வெற்றிப் பெறுவதற்கு அடையாளமாக சூடியிருந்தனர் என்பதை எடுத்துரைக்கின்றது.

### 5.21.3 கையணிகள்

ஆடவர், பெண்டிர், சிறுவர்கள் என அனைவரும் விரும்பி அணியும் ஒருவகை அணியே கையணியாகும். இவ்வணிகளை கடகம், தொடி என்றழைப்பர். சாதாரண மக்கள் முதற்கொண்டு அரசகுலப் பெண்டிர் வரை சங்கு வளையல்களை அணிந்திருந்தனர். தொடி என்றழைக்கப்படும் இவ்வளையல்களை முன் கையில் அணிவது வழக்கமாகும்.

**“குறுந்தொடி முன்கைக் கூந்தலஞ் சிறுபுறத்து”** [63]

என்ற முல்லைப்பாட்டடிகள் பெண்டிர் தன் அழகிய கைகளிலே குறுகிய வளையலை அணிந்து அழகுக்கு அழகு சேர்த்தனர் என்பதைச் சுட்டுகின்றது.

### 5.21.4 விரலணிகள்

கைவிரல்களில் மோதிரங்கள் அணிவது இருபாலார்க்கும் உரியதாகும். விரலில் பகுவாய் மோதிரம் அணிந்தனர் என்ற கருத்தினை,

**“வாளைப் பகுவாய் கடுப்ப வணக்குறுத்துச்**
**செவ்விரற் கொளீஇய செங்கேழ் விளக்கத்து”** [64]

என்ற வரிகள் குறிப்பிடுகின்றன. இது மீன்வாய் திறப்பது போன்ற வடிவுடையதாகும். இதனை **‘முடக்கு மோதிரம்’** என்றும் கூறுவர். பழங்காலத்தில் விரலில் அணியும் இம்மோதிரம் பல வகையாக இருந்தது

என்பதையும், மக்கள் அதனை விரும்பி அணிந்து மகிழ்ந்தனர் என்பதையும் இலக்கியங்கள் வாயிலாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

### 5.21.5 காதணிகள்

காதில் அணியப்பட்ட அணிகலன்களுக்குப் பல பெயர்கள் தரப்பட்டுள்ளன. எனினும் அவைகள் பொதுவாக **'குழை'** என்ற பெயராலேயே அழைக்கப்பட்டன. இவ்வணிகளை காதில் எளிமையாக அணியவும் கழற்றவும் இயலும்.

**"நேரிழை மகளிர் உணங்குணர்க் கவரும்**

**கோழி யெறிந்த கொடுங்காற் கனங்குழை"** [65]

பெண் வீட்டு முற்றத்தில் உலர்த்தியிருந்த தானியத்தை உண்ண வந்த கோழியை தன் காதில் அணிந்திருந்த குழையை கழற்றி வீசி விரட்டினாள் என்று இலக்கியங்கள் கூறுகின்றன. இதனை நோக்கும் போது பழங்கால மக்கள் செல்வ செழிப்புடன் வாழ்ந்ததால் தம் உடல் உறுப்புகளின் மீது பல்வேறு அணிகலன்கள்அணிந்திருந்தாக இலக்கியங்கள் வழியாக அறிகின்றோம். மேலும், பெண்கள் காதுகளில் 'குழை' என்ற அணியையும், கையில் 'தொடி' என்ற அணியும் கைவிரலில் 'நெளி' என்ற அணியும் அணிந்திருந்ததை உணரமுடிகிறது.

## 5.22 உறைவிடம்

பண்டைய மனிதன் உறையுளை நாடாது, திரிந்த காலம் சாலப் பழமையானது. உணவு, உடை, உறையுள் என்பவற்றில் உணவுக்கு முதலிடம் தந்த மனிதன் உடையணியக் கற்றுக்கொண்டான். பின் அவனுக்கு ஒரு இருப்பிடம் தேவைப்பட்டது. முதலில் மறைவிடங்களில் தங்கி விலங்குகளிடமிருந்து தன்னைக் காத்துக் கொள்ளப் பழகிய மனிதன், பறவையின் கூடுகளையும், விலங்குகள் வாழ்ந்த குகைகளையும் கண்டு அவற்றைப் போன்ற உறைவிடங்களில் தானும் வாழலாம் என்பதை உணர்ந்தான். பழங்காலத்தில் மலையில் வாழ்ந்த மக்கள் குகையிலும், பிளவுகளிலும் மரப்பொந்துகளிலும் வாழ்ந்தனர். பின்னர் விலங்கின் தோல், புல், மரம், தழை, கல் முதலியவற்றைப் பயன்படுத்தி தம் உறையுளை அமைக்கத் தலைப்பட்டனர்.

குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய ஐவகை நிலங்களிலும் சிற்றூர்களிலும், பேரூர்களிலும் வாழும் மக்கள் தங்கள்

உறைவிடங்களை எவ்வாறு அமைத்துக் கொண்டனர் என்பதைக் கீழ்க்கண்டவாறு காணலாம்.

மலையும் மலை சார்ந்த இடமுமாகிய குறிஞ்சி நிலத்தில் தினை முதலிய பயிர்களைத் தின்னவரும் யானை, பன்றி முதலிய விலங்குகளையும், கிளி முதலிய பறவைகளையும் விரட்டுவதற்காகக் கானவர் உயர்ந்த மரக்கிளைகளில் பரண் அமைத்து இருந்தனர். இம்மக்கள் குறுகிய கால்களை நட்டுத் தினையரிந்த தாளால் வேய்ந்த குடிலில் வாழ்ந்தனர் என்பதை,

**"இருவி வேய்ந்த குறுங்காற் குரம்பைப்**
**பிணையோர் நோக்கின் மனையோள் மடுப்பத்"** [66]

என்ற குறிஞ்சிப்பாட்டு வரிகள் புலப்படுத்துகின்றன. இவ்வுறைவிடம் மக்கள் வாழும் நிலங்களுக்கேற்ப மாறுபடும் என்பது குறிப்பிடத்தக்கது.

உணவுப் பொருள்களைப் பயிர் செய்ய இயலாத நீர் வளமற்ற நிலம் பாலை நிலமாகும். பாலை நிலத்தில் வெப்பம் மிகுதியால் நன்னீர் கிடைத்தல் அரிதாகும். எனவே விளைச்சல் இன்மையால் பாலை நில மக்களுட் சிலர் அங்குள்ள பறவைகளையும் விலங்குகளையும் வேட்டையாடுவர். சிலர் ஆறலைக் கள்வராகிப் பிழைப்பர். அவர்தம் இல்லங்கள் சிறு குடில்களேயாகும். வெயிற்காலத்தில் அவ்வில்லங்களில் வாழ்வோர் வெப்பம் மிகுதியால் துன்புறுவர். அக்குடில்கள் வேலின் முனையை ஒத்த கூர்மையான முனை கொண்ட ஈந்தினுடைய இலையால் வேயப்பட்டவையாக இருந்தன. பெருவழிகளைக் காவல் புரிந்த எயினர் வாழ்ந்த இல்லங்களும் சிறுகுடில்களேயாகும். அவை குழைகளால் வேயப்பட்டவை. அவற்றில் வாழ்ந்த மக்கள் மான் தோலையே படுக்கையாகக் கொண்டு வாழ்ந்ததாக இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

முல்லை நிலத்தில் வாழ்ந்த மக்கள் ஆடுமாடுகளை மேய்த்தனர். இம்முல்லை நில மக்கள் **'ஆயர்கள்'** எனப்பட்டனர். அவர்கள் வாழ்ந்த குடில்கள் வரகுத் தட்டையால் வேயப்பட்டவையாகும். மேலும் சில குடில்கள் தழைகளால் வேயப்பட்டிருந்தது என்பதை,

**"உவலைக் கூரை ஒழுகிய"** [67]

என்று முல்லைப்பாட்டு அடிகள் இயம்புகின்றது. இக்குடிலின் கால்களில் ஆட்டு மறிகள் நின்று தின்னத்தக்க தழைகள் கட்டப்பட்டிருந்தன. குடிலின் வாயில் மிகவும் சிறியதாக அமைக்கப்பட்டிருந்தது. இதன் முற்றத்தில் முளைகள் பதிக்கப்பட்டு அவற்றில் நெடிய தாம்புகள் கட்டப்பட்டு, அத்தாம்புகள் ஆடுமாடுகளைக் கட்டவும் பயன்பட்டதாக அறிகின்றோம். முல்லை நிலத்துச் சிற்றூர்களில் உழுதுண்பாரும் வாழ்ந்து வந்தனர். அவர்கள் வாழ்ந்த இல்லத்தின் முற்றத்தில் பிடி நின்றாற் போன்ற வரகு முதலிய கூல வகைகள் வைக்கப்பெறும் குதிர்களும், அங்கு கலப்பையும் கொட்டில்களும் இருந்தன. இக்கொட்டிலின் ஒரு பகுதியில் எருதுகள் கட்டப்பட்டிருந்தன. இங்ஙனம் ஆயர் வாழ்ந்த இல்லங்கள் அமைக்கப்பட்டதை இவ்விலக்கியங்கள் உணர்த்துகின்றன.

மருத நிலமக்கள் செல்வ செழிப்புடன் வாழ்ந்தனர். நீரும், பசுமையான வயல்களும் தோட்டங்களும், தோப்புகளும் சோலைகளும் நிறைந்துள்ள இடமே மருத நிலமாகும். இந்நில மக்கள் உழவர் என்றழைக்கப்பட்டனர். உழவர்கள் வயல்களில் தங்கிப் பயிர்களைக் காவல் புரிய புதிய வைக்கோலால் வேய்ந்த குவிந்த குடிலை அமைத்துக்கொண்டனர்.

**“விலங்குபகை யல்லது கலங்குபகை யறியாக்**
**கொழும்பல்குடிச் செழும் பாக்கத்துக்**
**குறும்பல்லூர்”** [68]

என்ற வரிகள் உழவர்கள் விலங்கு பகை மட்டுமல்லாது வேறு எந்த பகையும் இன்றி மகிழ்ச்சியுடன் அக்குடிலில் வாழ்ந்தனர் என்பதை புலப்படுத்துகிறது. தென்னந்தோப்புகளுக்கு இடையில் மருதநிலச் சிற்றூர்கள் பல அமைந்திருந்தன. முடையப்பட்ட தென்னை ஓலைகள் வேய்ந்த வீடுகள் அவ்வூர்களில் இருந்தன. வீட்டு முற்றத்தில் மஞ்சள் பயிரிடப்பட்டிருந்தது. மணம் நாறிய பூந்தோட்டம் அவ்வீட்டின் பின்னே இருந்தது. மருதநிலப் பகுதிகளில் மறையவர்கள் வாழ்ந்து வந்தனர். வீட்டின் முன்புறம் பந்தல் அமைக்கப்பட்டிருந்தது. அவ்வீட்டைச் சுற்றி முள்வேலியும் அமைக்கப்பட்டன.

இம்மருத நிலத்தில் வலை வீசி மீன்பிடித்து வாழ்ந்தவர்கள் ‘வலையர்’ எனப்பட்டனர். அவர்கள் வஞ்சிமரக் கொம்புகளையும் காஞ்சிமரக் கொம்புகளையும் கலந்து நட்டு வேழக்கோலை வரிசையாக நிரைத்துத் தழை நாரால் கட்டித் தருப்பைப் புல்லாலே வேயப்பட்ட குறுகிய இறப்பையுடைய குடில்களில் வாழ்ந்தனர். அவர்களது குடிலின் முற்றத்தில் மீனை வாரி

எடுக்கும் பறிகள் இருந்தன. குடிலையடுத்து வளைந்த காலையுடைய புன்னை மரக்கொம்புகள் அமைந்த பந்தல் இருந்தது. அப்பந்தலின் மீது சுரக்கொடி முதலிய படர்கொடிகள் படர்ந்து காய்களோடு விளங்கின. இங்ஙனம் மருத நிலத்தில் பல்வகைப்பட்ட மக்களும் தங்களுக்கென ஒரு குடிலை அமைத்துக்கொண்டு வாழ்ந்ததை இலக்கியங்கள் வாயிலாக உணர்த்தப்படுகிறது.

நெய்தல் நிலமக்கள் மீன்பிடித்தலைத் தம் தொழிலாகக் கொண்டு வாழ்ந்தனர். காவிரிப்பூம்பட்டினத்துக் கடற்கரையில் வாழ்ந்த பரதவர்கள் தாழ்ந்த கூரையைக் கொண்ட குடில்களில் வாழ்ந்தனர். அக்கூரையில் நீண்ட தூண்டிற் காம்புகள் சொருகி வைக்கப்பட்டதை,

**“நெடுந் தூண்டிலிற் காழ் சேர்த்தி**
**குறுங்கூரைக் குடிநாப்பண்”** [69]

என்ற பட்டினப்பாலை வரிகள் சுட்டுகின்றன. அக்குடிலின் முற்றத்தில் மீன் பிடிக்க உதவும் வலைகள் காயவைக்கப்பட்டிருப்பதையும் இதன் வாயிலாக உணர முடிகின்றது.

## 5.23 நகரத்து இல்லங்கள்

நகரங்களில் இருந்த பலவகை இல்லங்களைப் பற்றியக் குறிப்புகள் இலக்கியங்களில் காணப்படுகின்றன. தம் வீட்டைக் கட்ட விரும்புவோர் கால்கோள் நட நல்ல நாளையும் நேரத்தையும் தேர்ந்தெடுத்தனர். இவ்வாறு நாளையும் வேளையும் தேர்ந்தெடுக்க அவர்கள் சோதிடரின் உதவியை நாடினர். மனையை ஒரு நீண்ட நூலைக் கொண்டு வரையறை செய்வர். அதன்பிறகு தரையை கூடம், முன்வாயில் என்ற பகுதிகொளகப் பிரிக்கப்படும். முன்வாயிலில் இரு கதவுகளிருக்கும். கதவுகளை ஆணிகளையும் இரும்புகளையும் கொண்டு செய்து அவற்றில் இருக்கும் பள்ளங்களைச் செந்நிற அரக்கால் நிரப்புவர். குவளை மலரையொத்தக் கைப்பிடிகள் அக்கதவுகளை அணி செய்யும். கடுக்காய் பசலையால் மேற்பூச்சுப் பூசப்பட்டு எண்ணெய்யால் பளபளப்பேற்றியதை,

**“போதவிழ் குவளைப் புதுப்பிடி கால்மைத்துத்**
**தாளொடு குயின்ற போராமை புணர்ப்பிற்**
**கைவல் கம்மியன் முடுக்கலிற் புரைதீர்ந்து**
**ஐயவி யப்பிய நெய்யணி நெடுநிலை”** [70]

என்ற அடிகள் குறிப்பிடுகின்றன. இவ்வரசனின் உறைவிடம் ‘கோவில்’ என்றழைக்கப்பட்டது. செல்வா் இல்லங்களில் இளவேனிற் காலத்தில் துயிலும் படுக்கைக்குத் தென்றற்காற்றைத் தரும் ‘சாலோகம்’ (சாளரம்) அமைக்கப்பட்டிருந்தது. செல்வ மகளிா் அங்கு நின்று தானியங்களைத் தின்னவரும் கோழிகளை விரட்டினா் என்பதை இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன.

**“அகனகா் வியன் முற்றத்து”** [71]

**“பொற்காற் புதல்வா் புரவியின் றுருட்டும்**
**முக்காற் சிறுதோ் முன்வழி விலக்கும்”** [72]

இவ்வடிகள் செல்வப் பிள்ளைகள் மூன்று உருகளைக் கொண்ட சிறுதேரை உருட்டி விளையாடுவதற்கேற்றபடி செல்வா் வீடுகளில் அகன்றமுற்றம் இருந்ததாகக் குறிப்பிடுகின்றது. காவிரிப்பூம்பட்டினத்து மருவூா்ப் பாக்கத்தில் கடற்கரைக்கு அண்மையில் உயா்ந்த மாடங்களைக் கொண்ட வளமனைகள் இருந்ததாகவும், அவற்றில் விளக்குகள் இரவு முழுவதும் எரிந்து கொண்டிருந்ததாகவும், விடியற்காலையில் கடலில் மீன் பிடிக்கச் சென்ற பூம்புகாா் பரதவருக்கு அவ்விளக்குகள் துணைபுரிந்ததாகவும் பட்டினப்பாலை (அடி – 112-115) குறிப்பிடுகின்றது. மேலும்,

**“குறுந்தொடை நெடும் படிக்காற்**
**கொடுந் திண்ணைப் ப.்றகைப்பிற்**
**புழைவாயிற் போகிடைகழி**
**மழைதோயும் உயா் மாடத்து”** [73]

என்ற வரிகளினின்று காவிரிப்பூம்பட்டினத்துப் பெரிய மாளிகைகளில் மாடத்திற்குச் செல்லத்தக்க அணுகிய படிகளையுடைய நெடிய ஏணிகளும், அதில் பல கட்டுகள் இருந்ததையும், இத்தகைய வள மனைகளில் விருந்திற்கு வந்தவா் முதலில் மாடத்துத் தலைவாயிலில் நெருங்கியிருந்து பின் விருந்துண்டனா் என்பதையும் அறிய முடிகிறது.

## 5.24 விளையாட்டுக்கள்

மனிதனுக்கு விளையாட்டுக்கள் இன்றியமையாதனவாய் திகழ்கின்றன. சிறுவா் முதல் முதியவா் வரை அனைவரும் விரும்பக்கூடிய ஒன்று விளையாட்டாகும். இவ்விளையாட்டுக்கள் உடல் ஆரோக்கியத்திற்கும், மன மகிழ்ச்சிக்கும் பயன்பட்டன. ஆனால் இவ்விளையாட்டுகள் ஆண்களுக்கும்,

பெண்களுக்கும் ஏற்ப வேறுபட்டிருந்தன. மகளிர்கள் பூக்கொய்தல், சுனை நீராடல், பந்தடித்தல், ஊஞ்சலாடல், பாடல் கேட்டல் போன்ற விளையாட்டுகளையும், குழந்தைகள் சிற்றில் சிதைத்தல், சிறுபறையடித்தல், சிறுதேர் உருட்டல் போன்ற விளையாட்டுகளையும், ஆண்கள் ‘ஏறுதழுவல்’ போன்றவிளையாட்டுகளையும் விரும்பினர். மகளிர் விரும்பிய விளையாட்டுகளை குறிஞ்சிப்பாட்டு,

**“அண்ணல் நெடுங்கோட் டிழிதரு தெண்ணீர்**

**அவிர்துகில் புரையும் அவ்வெள் ளருவித்**

**தவிர்வில் வேட்கையேந் தண்டா தாடிப்**

**………………………………………………...**

**எரியவிர் உருவின் அங்குழைச் செயலைத்**

**தாதுபடு தண்ணிழல் இருந்தனவாக”** [74]

என்ற வரிகளில் குறிஞ்சிநில மகளிர் சுனையில் நீராடியதையும், அங்குள்ள மலை அருவிகளில் விளையாடி, தம் மனதுக்கு விருப்பமானவற்றைப் பாடிக்கொண்டே கூந்தலை உலத்தியதையும் கோடற்பூ, ஆம்பற்பூ, குறிஞ்சிப்பூ முதலிய தொண்ணூற்று ஒன்பது மலர்களைப் பறித்து பாறையில் குவித்து, பல மலர்களை மாலைகளாகக் கட்டி தம் கழுத்திலே சூடிக்கொண்டு விளையாடியதையும் அறிய முடிகின்றது. சோழநாட்டு ஊர்களில் சிறுவர்கள் குதிரை பூட்டாமல் கையால் உருட்டும் மூன்று உருளைகளையுடைய சிறுதேரினை வைத்து விளையாடினர் என்பதையும் இலக்கியங்கள் புலப்படுத்துகின்றன.

**“வரிமணல் அகன்திட்டை**

**கருந்தொழிற் கலிமாக்கள்**

**கடலிறவின் சூடுதின்றும்**

**வயலாமைப் புழக்குண்டும்**

**வறளடும்பின் மலர்மலைந்தும்**

**புனலாம்பற் பூச்சூடியும்”** [75]

பூம்புகார் நகரத்தில் மீனவர்கள் கடலின்கண் தோன்றிய இறால் மீனின் இறைச்சியைத்தின்றும், மணலிலே படர்ந்த அடம்பம் பூவைத் தலையிலே கட்டியும், நீரில் நின்ற ஆம்பற்பூவைப் பறித்து சூடிக்கொண்டு விளையாடியதைக் குறிப்பிடுகின்றன. மேலும் பரதவர்கள் விளையாடிய பல்வேறு விளையாட்டுகளாக,

"புன்றலை இரும் பரதவர்
பைந்தழைமா மகளிரொடு
பாயிரும் பனிக்கடல் வேட்டஞ்செல்லாது,
உவவுமடிந் துண்டாடியும்
……………………………………
……………………………………..
அலவ னாட்டியும் உரவுத்திரை உழக்கியும்
பாவை சூழ்ந்தும் பல்பொறி மருண்டும்
அகலாக் காதலொடு பகல் விளையாடிப்"[76]

என்ற பட்டினப்பாலையடிகள் குறிப்பிடுகின்றன. கடலிடைச் சென்று மீன் பிடித்து வாழ்ந்த பரதவர் உவா நாளில் மீன் பிடிக்கச் செல்லார். அதற்கு மாறாக ஆடியும் பாடியும் பொழுதைக் கழித்தனர். அவர்கள் தங்கள் மகளிரோடு கூடி மணல் முற்றத்தில் சுறாவின் கொம்பை நட்டு வெண்டாளி மலர் மாலையினையும் தாழை மலரையும் சூடிப் பனங்கள்ளையும் நெற்கள்ளையும் உண்டு விளையாடினார்கள். பின் காவிரிக் கடலொடு கலக்கும் இடத்தில் கடலாடியும், உடம்பிற்படிந்த உப்பு போகும்படி காவிரியில் நீராடி, அங்குள்ள நண்டுகளைப் பிடித்து விளையாடினர். மேலும் பாவைகளைப் பண்ணி விளையாடியும், ஐம்பொறிகளால் நுகரும் பொருட்களை நுகர்ந்து மயங்கியும், நீங்கா விருப்பத்துடனே பகற்பொழுதெல்லாம் விளையாடியதாக பட்டினப்பாலை உணர்த்துகின்றது.

## 5.25 வானியல் அறிவு

மனித இனம் போற்றுகின்ற அறிவுத் துறைகளுள் ஒன்று வானியலறிவாகும். வானியல் ஆராய்ச்சியில் பன்னெடுங்காலமாகத் தமிழர் ஈடுபட்டு பல சாதனைகளைப் புரிந்துள்ளனர் என உலகப்பேரறிஞர்கள் பலர் பாராட்டியுள்ளனர். அறிஞர் சிலேட்டர் என்பவர் "தமிழருடைய வானநூற் கணித முறையே வழக்கிலுள்ள எல்லா கணிதங்களிலும் நிதானமானது" [77] என்று கூறியுள்ளார்.

தொல்காப்பியத்திலும் சங்க நூல்களிலும் காணப்படும் வானியற் செய்திகள் உருப்பெறுவதற்குப் பல்லாயிரம் ஆண்டுகள் ஆகியிருக்கலாம் என்பதில் சிறிதும் ஐயமில்லை. ஆரியரோடு தமிழர் உறவு கொள்வதற்கு முன்பே தமிழர் வானியல் அறிவு கொண்டிருந்தனர். தமிழகத்துப் பரதவர்கள்

திங்களின் நிலையைக் கண்டு காலத்தைக் கணித்தனர் என்றும், தமிழகத்து உழவர்கள் சூரியன், திங்கள் இவற்றின் இயக்கத்தையும், பருவ காலங்களையும் அறிந்திருந்தனர் என்பதை இலக்கியங்கள் நமக்குப் புலப்படுத்துகின்றன.

### 5.25.1 கணியர்

தமிழ் நாட்டில் வானியலிலும் அதனடிப்படையில் எழுந்த சோதிடத்திலும் வல்ல அறிஞர்கள் அறிவர், கணி, கணியன் என்றெல்லாம் அழைக்கப்பட்டனர். கணியன் பூங்குன்றன், பக்குடுக்கை நன்கணியார், கணிமேதாவியார் என்போர் புலவர்களாக விளங்கியுள்ளனர். அரசனுடைய அவையில் பெருங்கணிகன் இருந்ததை சிலப்பதிகாரம் குறிப்பிடுகிறது. நாழிகை வட்டில் கொண்டு காலத்தைக் கணிப்போர், நாழிகைக் கணக்கர் எனப்பட்டனர். மூவகைக் காலமும் நெறியினாற் உணர்த்தும் அறிவர்களைத் தொல்காப்பியம் குறிப்பிடுவதைக் காணமுடிகிறது.

### 5.25.2 நாண்மீனும் கோள்மீனும்

தாமே ஒளிவிடக்கூடியன **'நாண்மீன்கள்'** என்றும், ஞாயிற்றிடமிருந்து கடன்பெற்று ஒளிர்வன **'கோள்மீன்கள்'** என்றும் கூறுவர். ஞாயிற்றின் ஒளியைக் கொண்டு ஒளிர்வன ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி என்பனவாம். இராகுவும் கேதுவும் **'இராக்கோள்கள் (அ) நிழற்கோள்கள்'** என்று கூறுவர். பண்டையத் தமிழர் ஞாயிறு நாண்மீன் எனினும் அதனைக் கோள் மீன்களோடு சேர்த்துக் குறிப்பிட்டனர். மண்ணும் ஒரு கோளாதலாலும் அது ஞாயிற்றைச் சுற்றி வருதலாலும் அதன் சுழற்சியைக் கணக்கிட அதற்கு நேர் எதிரியிலிருக்கும் ஞாயிற்றின் போக்கும் கணக்கிடப் பெறுகிறது. ஆகையால் திங்களாகிய கோள்மீன் ஒவ்வொரு நாளும் நிற்கும் நிலையே நாண்மீனாகும். அம்மீன் ஞாயிற்றோடு சேர்வதும், பிரிந்து எதிர்பக்கம் சேர்வதும் நிகழ்கையில் அதன் ஒளி நாளுக்கு நாள் வளர்ந்து முழு வட்டமாக மாறும்.

**"வசையில் புகழ் வயங்கு வெண்மீன்**

**திசை திரிந்து தெற்கேகினும்"** [78]

அதாவது குற்றமில்லாத புகழையுடைய வெள்ளிக்கோள் தான் நிற்றற்குரிய வடதிசையில் செல்லாது, தென்திசையில் செல்கின்றது என்று

பட்டினப்பாலை குறிப்பிடுகின்றது. மேலும் வானியலறிவு நிரம்பபெற்ற பட்டினப்பாலை,

**“நீனிற விசும்பின் வலனேர்பு திரிதரும்**

**நாண்மீன் விராய கோண்போல”** [79]

என்ற வரிகளில் குறிப்பிடுகின்றது. நாண்மீன் கோள்மீன் பற்றிக் குறிப்புகள் சங்க அக இலக்கியங்களில் சில காணப்படுகின்றன. அகன்ற மன்றத்தில் ஆட்டுக்கிடாய்களும் சிவலைப் பறவைகளும் விளையாடும் காட்சி நீலவானில் நாள்மீனும் கோள்மீனும் விரவியது போல் இருந்ததாக குறிப்பிடுவதைக் காணமுடிகிறது.

## 5.26 தொழில்கள்

சமூகத்தில் தொழில்கள் மிகச் சிறந்ததாகக் கருதப்படுகின்றது. நாட்டில் மக்கள் செய்யும் தொழிலின் பொருட்டே அந்நாட்டின் முன்னேற்றம் காணப்படுகிறது. அத்தொழில்கள் உடல் உழைப்பின் பொருட்டோ, அறிவு சார்ந்தோ அமைந்திருந்தன. இத்தொழில்கள் இல்லையேல் நாட்டின் முன்னேற்றம் இல்லை என்று கூறலாம். சங்க காலத்தில் நிலத்தின் அடிப்படையிலும், அறிவின் அடிப்படையிலும் தொழில்கள் அமைந்திருந்தன.

### 5.26.1 தொழில்கள் வரையறை

உழைப்பு என்பது பெயர்ச்சொல்லாக அமைந்து ஒரு செயல் அல்லது தொழிலைக் குறிக்கின்றது. உழைத்தல் என்பது வினைச் சொல்லாக அமைந்து தொழில் செய்தலைக் குறிக்கின்றது. பொதுவாக உழைப்பவர் இனம் என்பது தொழிலாளர்களையே குறித்தது. பொருளியல் பேரறிஞராகிய மார்சல் உழைப்பிற்கு பின்வரும் இலக்கணம் கூறுகிறார்.

**“உழைப்பு என்பது மூளையையோ, உடலையோ**

**முழுவதுமாகவோ பகுதியாகவோ வருத்தி ஏதோ**

**ஒன்றைப் படைப்பதற்காகச் செய்கின்ற செயலைக்**

**குறிக்கும். ஆனால் அந்த செயலிலிருந்து கிடைக்கும்**

**மகிழ்ச்சியை உழைப்பு உள்ளடக்காது”** [80]

இவ்விலக்கணத்தின்படி உழைப்பு எல்லா வகையான தொழில் திறமைகளையும் உள்ளடக்கியதாக அமைந்துள்ளது. கல்வியறிவில்லாத தொழிலாளர்களின் உற்பத்தி முயற்சிகளும் கைத்தொழில்கள், நீதிபதிகள்,

எழுத்தாளர்கள், வேளாண்மைத்தொழிலாளர்கள், வணிகர்கள், நுண்கலைஞர்கள், இலக்கிய அறிஞர்கள், மருத்துவர்கள், அறிவியல் வல்லுநர்கள், நிர்வாகிகள் ஆகியோரின் பணிமுயற்சிகளும் மார்சலின் உழைப்பு என்பதன் இலக்கணத்தினுள் அடங்குகின்றன. இவ்வாறு உழைப்பு என்பது உடல்சார்ந்த மற்றும் அறிவு சார்ந்த அனைத்துத் தொழில்களுக்கும் எடுக்கப்படும் முயற்சிகளைக் குறிக்கின்றது. இவ்வாறு படிப்படியாக சங்ககால தொழில்கள் வளர்ச்சியடைந்துள்ளதை இலக்கியங்கள் உணர்த்துகின்றன.

## 5.27 தொழில்கள் வகைகள்

பழங்கால மக்கள் ஈடுபட்டுள்ள தொழில்களை இரண்டு வகையாக பகுக்கப்படுகிறது. அவை,

1. நிலம்சார்த் தொழில்கள்
2. நிலம்சாராத் தொழில்கள் என்பனவாகும்.

### 5.27.1 நிலம்சார்த் தொழில்கள்

பண்டையத் தமிழர் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐவகையாக நிலங்களைப் பகுத்தனர். அவ்வகை நிலங்களில் நிலத்திற்கேற்பவும் சூழ்நிலைக்கேற்பவும் மக்களின் தொழில்கள் வேறுபட்டிருந்தன. குறிஞ்சிநில மக்கள் மலைச்சரிவுப் பகுதிகளையும், மலைமீது சமநிலமாயுள்ள பகுதியையும் விளைநிலமாக்குதல், மலைநெல், தினை முதலிய கூல வகைகளை விதைத்தல், தினைப் புனங்களைக் காத்தல், தேனெடுத்தல், கிழங்கு வகைகளைப் பயிராக்குதல், வேட்டையாடுதல் போன்ற தொழில்களில் ஈடுபட்டிருந்தனர்.

பாலைநில மக்கள் பிற நிலங்களிலுள்ள ஆனிரைகளைக் கவர்தல், வழிப்பறிச் செய்தல் ஆகிய தொழில்களில் ஈடுபட்டனர். முல்லைநில மக்கள் சாமை, வரகு போன்றவற்றை விதைத்தல், கால்நடைகளை மேய்த்தல், பால், தயிர், மோர், வெண்ணெய், நெய் போன்றவற்றை விற்கும் தொழில் போன்றவற்றில் ஈடுபட்டனர். முல்லை நிலத்தில் அதாவது நீர்வளமும் நிலவளமும் குறைந்த புன்செய் நிலப்பகுதியில் மக்கள் ஆடு, மாடு வளர்ப்பதைத் தம் பெருந்தொழிலாகக் கொண்டிருந்தனர். அவர்கள் பசுக்களை பெருஞ்செல்வமாகக் கருதினர். ஓர் அரசன் மற்றொரு அரசனின் செல்வத்தைக் கவர்ந்து கொள்ள விரும்பினால் முதலில் அவன் நாட்டம் பசுக்கள் மீதே விழும். இதனை **‘நிரைகவர்தல்’** என்பர். முதல் நிலையில் பயிர்களை விளைவிப்பது மட்டுமின்றிக் கால்நடைகளை வளர்ப்பதும்

வேளாண்மைத் தொழிலின் ஒரு கூறாயிருந்தது. நாளடைவில் முல்லை நிலத்தார்க்குரிய தொழிலாக அமைந்தது. இவ்வாறு ஆடு மாடுகள் மேய்த்தலைத் தொழிலாகக் கொண்ட மக்கள் ஆயர், கோவர், இடையர் என்ற பெயரால் அழைக்கப்பட்டனர். வலிய கையை உடைய இடையன் ஆடு மாடுகளை மேய்க்கச் செல்வான். மாலைப்பொழுதில் மனையிடத்தே கட்டப்பட்டிருக்கின்ற தம் கன்றுகளை நினைந்து பால் சுரந்து பருத்த மடியை உடையனவாய் மணிகள் ஒலிக்க, ஆக்கள் விரைந்து படரினும் கோவலர் மெத்தென இயங்கி இசையூதிக் கொண்டே பின்னே செல்வர். இதே கருத்தமைந்த முல்லைப்பாட்டில்,

**"நெடுங்கோற் கோவலர் பின்னின் றுய்த்தர**
**இன்னே வருகுவர் தாயர்"**[81]

எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இவற்றிலிருந்து கோவலர்கள் நெடுங்கோலைக் கொண்டு பசுக்களை மேய்த்து வந்தனர் என்பது புலப்படுகிறது.

மருதநில மக்கள் வயல்களை உழுதல், நெல் விதைத்தல், நாற்று நடுதல், களை எடுத்தல், வயல்களுக்கு நீர் பாய்ச்சுதல், அறுவடை செய்தல், கடா விடுதல் போன்ற பயிர்த்தொழில் தொடர்பான தொழில்களில் ஈடுபட்டனர். வளமார்ந்த மருதநில மக்கள் மற்ற நில மக்களைக் காட்டில் நாகரிகத்தில் மேம்பட்டவர்களாகத் திகழ்ந்தனர். அவர்களை உழவர், உழத்தியர், கடையர், கடைசியர் போன்ற பெயர்களால் அழைத்தனர். நீர்வளமும் நில வளமும் நிறைந்த மருத நிலப்பரப்பில் கரும்பு விளைவிக்கப்பட்டது. இடமகன்ற வயல்களைப் பாத்தி பாத்தியாகப் பிரித்து கரும்பு நடப்பட்டன. இவ்வாறு நடப்படும் கரும்பு சில வேளைகளில் வளர்ச்சி குன்றிப்போதலும் அழிந்து போதலும் உண்டு. இக்கரும்பின் மலர்களை சங்க இலக்கியத்தில் **'வெண்பூ'** என்றும் **'வான்பூ'** என்றும் அழைத்தனர். கரும்புகள் பருத்தும் கணுக்கள் திரண்டும் மிக உயர்ந்தும் வளர்ந்தன. கரும்பு இன்ன காலத்தில் விளையக்கூடியது என்று குறிப்பிடப்படவில்லை. நீர்வளம் மிக்கிருந்தால் ஆண்டு முழுதும் தொடர்ந்து பயன்தரக்கூடிய பயிராய் கரும்பு விளங்குகின்றது. அறுவடைக்குப் பின்னும் அதன் கட்டையே மீண்டும் பயிராக வளரும் தன்மையுடையது. இவ்வாறு ஓரிருமுறை பயிர்செய்த பிறகு அடியோடு அக்கட்டைகளை அகழ்ந்தெடுத்து மீண்டும் கரும்பு பயிரிடுவதுண்டு. இக்கரும்பைப் பற்றி,

**"கார்க் கரும்பின் கமழாலை"**[82]

என்ற பட்டினப்பாலை அடி குறிப்பிடுவதிலிருந்து கரும்பு, கழைக் கரும்பு, கழனிக் கரும்பு, கார்க்கரும்பு போன்ற பெயர்களில் குறிப்பிடப்பட்டுள்ளதைக் காண முடிகின்றது.

### 5.27.1.1 பயிர்த் தொழிலுக்கு வேண்டிய கருவிகள்

சங்க காலத்தில் பயிர்த்தொழில் செழிப்புடன் வளம்பெற, உழவர் சமுதாயத்தின் தளர்விலா உழைப்பே மூலதனமாக அமைந்தது. மனித ஆற்றலுக்கு அப்பாற்பட்டவைகளுக்கு கால்நடைகள் பயன்படுத்தப்பட்டன. வேளாண்மையோடு இயைபுடைய தொழிலாக உழவர்களே கால்நடைகளை வளர்த்துக் காத்தனர். உழவு வேலைகள் யாவற்றிற்கும் கால்நடைகள் இன்றியமையாதனவாகும். உழுதல், களத்தில் போர் அடித்தல், விளைந்த தானியங்களை ஏற்றிச்செல்லல் முதலான வேலைகளுக்கு இவை பயன்பட்டன. ஆடு மாடு இவற்றின் சாணம் எருவாக பயன்பட்டன. இவ்வகையானப் பயிர்த்தொழிலுக்கு என்னென்ன கருவிகள் பயன்பட்ட என்பதை இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன.

### 5.27.1.2 குளிர், தட்டை, தழல்

புன்செய் பயிர்களாகிய தினை, வரகு ஆகியவை நன்றாகச் செழித்து வளர்ந்தும் அவற்றிலுள்ள மணிகளை உண்ணவரும் பறவைகளை விரட்ட குளிர், தட்டை போன்ற கருவிகளைப் பயன்படுத்துவர். குளிர் என்பது கிளிகளை விரட்ட மூங்கிலை வீணைபோல் கட்டி ஒலி எழுப்பும் ஒருவகை கருவியாகும். கிளிகளை விரட்டப் பயன்படுத்தும் மற்றொரு கருவி தட்டையாகும். தட்டப்படுவதால் அதற்கு **'தட்டை'** எனப்பெயர் பெற்றது. மூங்கிலைக் கண்ணுக்குக் கண் உள்ளாக நறுக்கிப் பலவாகப் பிளந்து ஓசை உண்டாகுமாறு தட்டப்படும் ஒருவகை கருவியென்று,

**"தழலுந் தட்டையுங் குளிரும் பிறவும்**
**கிளிகடி மரபின"**[83]

என்ற வரிகளில் குறிஞ்சிப்பாட்டு இயம்புகின்றது. இத்தழலை **'கவண்'** என்றும் கூறுவர். தழல் என்பது கையால் சுற்றும் பொழுது தன்னிடத்துப் பிறக்கும் ஓசையால் கிளி முதலியவற்றை ஓட்டும் தன்மையுடையக் கருவியென்பது இதன்வழி அறியமுடிகின்றது. நெய்தல் நில மக்கள் ஓடம், மிதவை, படகு முதலியவற்றை அமைத்தல், மீன் பிடித்தல், உப்பை விளைவித்தல், மீன் விற்றல், மீன்களை உப்பிட்டுப் பதப்படுத்தல், அவற்றை விற்றல் போன்ற தொழில்களில் ஈடுபட்டிருந்தனர். இந்நெய்தல் நில மக்களை நுளையர்,

பரதவா், வலைஞா் என்று பலவாறாக அழைத்தனா். இவா்கள் படகுகளில் ஏறி மீன் பிடிக்கச் சென்றதாக இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

**“நெடுங்கால் மாடத் தொள்ளெரி நோக்கிக்**

**கொடுந்திமிற் பரதவா் குரூஉச்சுடா் எண்ணவும்”[84]**

என்ற பட்டினப்பாலை வரிகள் மூலம் இப்பரதவா்கள் உவா நாளன்று கடல் கொந்தளிப்பு ஏற்படும் எனக்கருதி அந்நாளிலே மீன் பிடிக்கச் செல்லாா். அவ்வாறில்லாது உவா நாளிலும் மீன் பிடிக்கச் சென்ற பரதவா்கள் பட்டினத்து மாடங்களிலே எரியும் ஒரு சில விளக்குகளை எண்ணிக் கொண்டே யாமத்தை இன்பமாக களித்தனா் என்பதை உணா்த்துகின்றன. இவ்வைந்து நிலமக்களும் தங்களுக்குத் தெரிந்த நெசவுத் தொழில், தைக்குந்தொழில், சலவைத்தொழல், விசிறி செய்யும் தொழில், ஓவியத்தொழில், வாணிபத் தொழில் போன்ற தொழில்களில் ஈடுபட்டனா் என்பதை சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

### 5.27.1.3 வேட்டையாடுதல்

ஆதிகாலத்தில் மனிதன் விலங்கோடு விலங்காக வாழ்ந்த காலத்தே விலங்கைத் தாக்கி வீழ்த்தி வாழ முற்பட்ட நிலையில் வேட்டைத் தொழில் தோன்றியிருத்தல் வேண்டும். சங்க காலத்தில் வேட்டைத்தொழில் மிகவும் சிறப்பாகப் பேணப்பட்டது. வேட்டைக்குச் செல்வோா் அதற்குத் தேவையான பல்வேறு கருவிகளுடன் சென்றதாக,

**“செம்பொறிக் கேற்ற வீங்கிறைத் தடக்கையின்**

**வண்ண வரிவில் லேந்தி அம்பு தெரிந்து**

**நுண்வினைக் கச்சைத் தயக்கறக் கட்டி**

**…………………………………………**

**…………………………………………..**

**முளைவாள் எயிற்ற வள்ளுகிா் ஞமலி**

**திளையாக் கண்ண வளைகுபு நெரிதர”[85]**

என்ற பாடலடிகள் குறிப்பிடுகின்றன. காட்டில் எல்லா திசைகளிலும் அலைந்து வேட்டையாடுதற்குரிய விலங்குகள் உள்ள இடத்தை அறிதலும். சரியான இடமறிந்து வலை விரித்தலும், வலையில் சிக்கியவுடன் அஞ்சாது பயந்து தாக்குதலுமே வேட்டைத் தொழிலுக்குரிய கூறுகளென்று மிக அழகாக கபிலா் குறிஞ்சிப்பாட்டில் சித்தரித்துள்ளதை காணமுடிகின்றது.

### 5.27.2 கலையியல் தொழில்கள்

உள்ளத்திற்கு உவகை அளிக்கும் நுட்பமான தொழில்களைக் கலை என்ற சொல்லால் வழங்குதல் மரபாகும். ஓவியம், சிற்பம், கட்டிடம், இசை, நடனம் என்பனவற்றை நுண்கலைகள் என்று கூறுவர். இவ்வகையான நுண்கலைகளில் சங்ககாலத் தமிழர் சிறந்திருந்தனர். கலை கலையாகவே போற்றப்பட்டாலும் வாழ்வில் வளம்பெறச் சில நேரங்களில் அவரவர் அறிந்த கலை தொழில்கள் பயன்பட்டன. பின் அதுவே கலைத்தொழில் எனப்பட்டது. மேலும் கலையும் தொழில் திறனும் ஒன்றோடு ஒன்று இயைந்து வாழ்பவை. இவ்வாறு இணைந்து இயங்குவதால் தான் எக்காலத்து வழக்கில் தோன்றிய நுண்கலைகளாக இருப்பினும் அவை இன்றும் போற்றப்படுகின்றன. இந்த அடிப்படையில் தான் பழந்தமிழர் சமுதாயத்தில் வழக்கிலிருந்த எழில்மிகு கலையியல் தொழில்களைப் பின்வருமாறு காணலாம்.

#### 5.27.2.1 ஓவியத்தொழில்

இயற்கையோடு இயைந்து வாழ்ந்த பண்டையத் தமிழர் தாம் சுவைத்த முருகியல் இன்பத்தை ஓவியமாகத் தீட்டி மகிழ்ந்தனர். **'போலச் செய்தல்'** அடிப்படையில் தம் உள்ளங்கவர்ந்த வண்ண மலர்கள், மரஞ்செடி கொடிகள், பறவை, விலங்கு, வானம் போன்றவற்றின் உருவங்களை வரைந்து பார்த்து அவ்வவற்றிற்குரிய வண்ணங்களையும் கொடுக்கத் தூண்டியது. தாம் பார்த்து மகிழ்ந்த இயற்கைக் கோலங்களை குறிப்பிடத்தக்க நிகழ்ச்சிகளைச் சங்கத் தமிழ்ப் புலவர்கள் சொல்லோவியமாகப் புனைந்தனர்.

**"வினை ஓவத்து"** [86]

இவ்வடிகள் சங்கத் தமிழ் இலக்கியங்களில் ஓவியம், ஓவம், ஓவு என்ற சொற்கள் காணப்படுவதை குறிப்பிடுகின்றன. இவற்றினின்று பழங்காலத்தில் ஓவியத் தொழில் இருந்தமை நமக்குப் புலப்படுகின்றது.

#### 5.27.2.2 பொம்மை செய்யும் தொழில்

கள்ளமில்லா உள்ளங்களில் மகிழ்ச்சியை அளிப்பவை விளையாட்டுப் பொருட்களாகும். குழந்தைகளுக்கு உணவு, உடை ஆகியவற்றோடு விளையாட்டுப் பொருட்களும் இன்றியமையாதனவாய் உள்ளன. பண்டையத் தமிழரின் குழந்தைகள் விளையாடிய விளையாட்டுப் பொருட்கள், இன்றைய வழக்கிலிருக்கும் பல்வேறு விளையாட்டுப் பொருட்களுக்கு முன்னோடியாய் அமைந்துள்ளன.

#### 5.27.2.3 மரப்பொம்மைகள் (வண்டி, தேர், யானை)

குழந்தைகளின் விருப்பத்திற்கும், சமுதாயத்தில் அக்குழந்தைகளின் பெற்றோருக்கு இருக்கின்ற தகுதிக்கு ஏற்றவாறு பொம்மைகளும் வேறுபட்டன.

**"பொற்காற் புதல்வர் புரவியின் றுருட்டும்**

**முக்காற் சிறுதேர்"** [87]

அதாவது சிறுகுழந்தைகள் நடைபயில நடைவண்டிகள் இருந்ததாகவும், அவ்வண்டிகள் மூன்று உருளைகளையுடைய தேர் போன்று காட்சியளித்ததாகவும் பட்டினப்பாலை குறிப்பிடுகின்றது.

### 5.27.2.4 கயிறு திரித்தல்

பழந்தமிழர் பொருட்களைப் பிணித்துக் கட்டுவதற்கு கயிற்றினைப் பயன்படுத்தினர். சங்க இலக்கியப் பாடல்களில் பல இடங்களில் கயிறு அல்லது தாம்பு பயன்பட்டதற்கான சான்றுகள் காணப்படுகின்றன.

**"சிறுதாம்பு தொடுத்த பசலைக்கன்று"** [88]

இவ்வடிகள் சிறுதாம்பினால் இளங்கன்றானது கட்டப்பட்டது என்பதை சுட்டுகிறது. முல்லை நில மக்கள் தாம் மேய்க்கும் ஆடு மாடுகளை கட்டுவதற்கு கயிற்றினைப் பயன்படுத்தினர். மேலும் அவர்கள் தயிரைக் கடைவதற்கும், மருத நில மக்கள் நெற்கதிரை பிணித்து கட்டுதற்கும் கயிற்றினைப் பயன்படுத்தினர் என்பதையும் இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. குதிரை, யானை முதலியவற்றை கயிற்றால் பிணித்து கட்டினர் என்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

### 5.27.2.5 நெசவுத் தொழில்

மக்கள் சமுதாயத்திற்கு உணவினை அடுத்து இன்றியமையாதது ஆடையாகும். விலங்குகளைப் போல அன்றி, உடலை மறைத்தற்குரிய உடையினை அணிந்து மானத்துடன் வாழும் முறை மக்கள் வாழ்க்கையின் சிறப்பியல்பாகும். நாகரிகம் வளராத மிகப் பழங்காலத்தே மக்கள் தழை ஆடைகளையும், மரப்பட்டைகளையும், மான், புலி முதலியவற்றின் தோலினையும் உடுத்தினர் நாளடைவில் மக்கள் நுண்ணறிவின் திறத்தால் பருத்தியின் பஞ்சினை நூலாக நூற்று, ஆடையாக நெய்து அணியத் தொடங்கிய காலமே மனிதனின் வரலாற்றில் ஒரு புதிய திருப்பமான காலமாகும். அப்புதிய முயற்சியின் விளைவால் தொடங்கிய தொழிலினையே நாம் **'நெசவுத்தொழில்'** என்று கூறுகின்றோம்.

**“கூழை விரித்தல் காதொன்று களைதல்**
**ஊழணி தைவரல் உடைபெயர்த்து டுத்தலோ**
**டூழி நான்கே இரண்டென மொழிப”** [89]

என்ற தொல்காப்பிய நூற்பாவில் ஆடையைப் பற்றியக் குறிப்புகள் காணப்படுகின்றன. இந்நூற்பாவிலிருந்து நெசவுத் தொழிலின் தொன்மையை நாம் நன்கு அறிய முடிகின்றது.

## 5.28 வணிகம்

தமிழர்களின் பெருமையையும் மனித வாழ்க்கையின் மாண்பையும் பறைசாற்றும் இலக்கியங்களாகச் சங்க இலக்கியங்கள் திகழ்கின்றன. **‘நாடென்ப நாடா வளத்தன்’** என்று வள்ளுவர் நாட்டின் குறிக்கோளைக் கூறியிருப்பினும், ஒரு நாடு தன் மக்களுக்கு வேண்டிய யாவற்றையும் பெற்றிருத்தல் இயலாது. எனவே ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டிற்கும் ஒரு ஊரிலிருந்து மற்றொரு ஊருக்கும் பொருள் பரிமாற்றம் நிகழ வேண்டியிருந்தது. இந்நிலை தொடர்ந்து ஒழுங்காக நடைபெறச் செய்வது தான் வாணிபமாகும். ஒரு நாட்டின் பொருளாதார வளத்திற்கு முதுகெலும்பாக விளங்குவது வாணிபமாகும். பழங்கால மக்கள் எங்ஙனம் வாணிபம் செய்தனர் என்பதை இலக்கியங்கள் எடுத்துக்காட்டுகின்றன. சங்ககால வாணிபம் இன்றைய வாணிபத்திற்கு வழிகாட்டிகளாக அமைந்துள்ளன.

### 5.28.1 வணிகம் - சொற்பொருள் விளக்கம்

உற்பத்திப் பொருட்களை வாங்கிவிற்கும் தொழிலை குறிக்க வணிகம், வாணிகம், வியாபாரம் ஆகிய சொற்கள் கையாளப்படுகின்றன.

“இலாப நோக்கில் பொருட்களை வாங்கி விற்கும் தொழில் என க்ரியாவின் தற்காலத் தமிழகராதியும் ‘சொட்டு வியாபாரம்’ என்று கதிரைவேற் பிள்ளையின் தமிழ்மொழி அகராதியும் வணிகம் என்ற சொல்லுக்குப் பொருள் தருகின்றன.” [90] தொல்காப்பியர் காலத்திலேயே **‘வணிகம்’** என்ற சொல் பயன்பாட்டில் இருந்தமையை,

**“வைசிகன் பெறுமே வாணிக வாழ்க்கை”** [91]

என்ற நூற்பா உணர்த்துகின்றது. மேலும்,

“உள்நாட்டு வாணிகத்தில் கூட்டம் கூட்டமாக ஈடுபடுவோர் மாசாத்துவான் என்று அழைக்கப்பட்டனர். ‘சாத்து’ என்பது ஓர் இடம் விட்டு

வேறுஇடம் பெயரும் வணிகக் குழுவைக் குறிப்பதாகும். சாத்தன், சாத்தனார் என்னும் சங்ககாலப் பெயர்கள் வணிக அடிப்படையில் வழங்கப்படுபவையே''[92] என்று க.ப.அறவாணன் குறிப்பிடுகின்றார். பண்டையக் காலத்தில் வணிகமே சிறந்திருந்தது என்பதையும், அவ்வணிகம் நாட்டின் பொருளாதாரத்திற்கு முதுகெலும்பாக அமைந்தது என்பதையும் இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. இவ்வணிகத்தை இரண்டு வகைகளாகப் பகுக்கலாம். அவை,

1. உள்நாட்டு வாணிபம்
2. வெளிநாட்டு வாணிபம்

என்பனவாகும். நம் நாட்டிற்குள்ளேயே செய்யும் வாணிபம் உள்நாட்டு வாணிபம் என்றும், பிற நாடுகளுக்கிடையே நிகழும் வாணிபத்தை வெளிநாட்டு வாணிபம் என்றும் கூறுவர்.

### 5.28.2 பண்டமாற்று முறை

சங்ககால மக்கள் தங்களுக்கிடையே தேவைக்கும் மிதமிஞ்சிய பொருட்களைப் பிறருக்குக் கொடுத்தும், பிறரிடமிருந்து தாம் பெற்றும் வாழ்ந்து வந்தார்கள். இவர்களின் தொடக்ககால வணிகம் பண்டமாற்று முறைகளின் அடிப்படையிலேயே நடைபெற்றன. ஒவ்வொரு நிலத்திலும் வாழ்ந்த மக்கள் தங்களுக்கிடையே பண்டங்களை மாற்றிக் கொண்டு வாழ்ந்தனர். பண்டையக் காலத்தில் வணிகளர்கள் ஆறு, கடல், கடலின் கழிமுகம் ஆகியவற்றின் வழியாக பல இடங்களுக்கு ஓடங்களில் சென்று உப்பு, நெல் ஆகியவற்றைப் பண்டமாற்றுப் பொருளாகக் கொண்டு வாணிகம் செய்தனர். இத்தகைய படகுகள் ஒன்றன் பின் ஒன்றாக கடலிலுள்ள திட்டுப் பகுதிகளில் கட்டப்பட்டிருப்பதை,

**"வெள்ளை யுப்பின் கொள்ளை சாற்றி**
**நெல்லோடு வந்த வல்வாய்ப் ப∴றி"**[93]

என்ற வரிகள் புலப்படுத்துகின்றன. பூம்புகார்த் துறைமுகத்தில் கப்பல்கள் பல நிற்பது பார்ப்பதற்கு களிறுகள் கூட்டமாய்யிருப்பது போன்று காட்சியளிப்பதாக ஆசிரியர் குறிப்பிட்டள்ளார். "பழங்காலத்துத் தமிழர் தரை வழியாகவும், கடல் வழியாகவும் பாரத நாடு முழுவதும் சென்று வாணிகம் செய்தார்கள். உஞ்சை (உஞ்சையினி) கலிங்கப்பட்டினம், காசி (வாரணாசி), பாடலி (பாடலிபுரம்) முதலான இடங்களிலும் கடல் கடந்த நாடுகளாகிய காழகம் (பர்மா தேசம்), அருமணவன் (Ramanna), தக்கோலம் (Takkola)

கிடாரம் (கடாரம்), சாவகம் (கிழக்கிந்தியத் தீவுகள்) முதலான இடங்களுக்குச் சென்று வாணிகஞ் செய்தனர்'' [94] என்று அ. சிவக்கண்ணன் கூறுகின்றார். தமிழக வாணிகர் அயல் நாடுகளுக்குச் சென்று வாணிபம் செய்ததைப் போலவே, அயல்நாட்டு வாணிகரும் தமிழகத்திற்கு வந்து வாணிகம் செய்தார்கள். அக்காலத்தில் வாணிகத்தில் புகழ்பெற்ற காவிரிப்பூம்பட்டினத்துத் துறைமுகத்தில் அயல்நாடுகளிலிருந்து கப்பலோட்டி வந்த வேறு மொழிகளைப் பேசிய மக்கள் தங்கியிருந்ததை,

**“மொழிபல பெருகிய பழதீர் தேஎத்துப்**
**புலம்பெயர் மாக்கள் கலந்தினி துறையும்**
**முட்டாச் சிறப்பின் பட்டினம்”** [95]

என்ற வரிகளில் பட்டினப்பாலை குறிப்பிடுகின்றது. இதன் வாயிலாக பிற நாடுகளிலிருந்து நம் நாட்டில் வணிகர்கள் தங்கி வாணிகம் செய்ததை அறிய முடிகிறது.

### 5.28.3 ஏற்றுமதியும் இறக்குமதியும்

சோழநாட்டின் வளத்தையும், காவிரிப்பூம்பட்டினத்தின் வணிகச் சிறப்பையும் எடுத்துக்கூறும் பட்டினப்பாலை இன்றைய வணிகர்களுக்கு ஒரு வழிகாட்டியாக விளங்குகின்றது. கடலில் தாம் முகந்த நீரை மலையில் சொரிவதற்காகவும், மலையில் சொரிந்த நீரை மீண்டும் கடலில் சேர்ப்பதற்காவும் மேகங்கள் மழைக் காலத்தில் இடையராது செய்யும் தொழிலைப் போலக் கடலிலிருந்து காவிரிப்பூம்பட்டினத்திற்கும் அங்கிருந்து வெளிநாடுகளுக்கும் ஏற்றுமதி இறக்குமதி செய்ததை,

**“வான்முகந்த நீர் மலைப்பொழியவும்**
**மலைப்பொழிந்த நீர் கடற்பரப்பவும்**
**மாரிபெய்யும் பருவம்போல**
**நீரினின்று நிலத்தேற்றவும்**
**நிலத்தினின்று நீர்ப்பரப்பவும்**
**அளந்தறியாப் பலபண்டம்”** [96]

என்ற வரிகள் தெரிவிக்கின்றன. பல நாடுகளில் மொழிகள் தோன்றுவதற்கு முன்பும், பல மொழிகளுக்குப் பேச்சு வழக்குத் தவிர எழுத்து வழக்கு இல்லாத காலத்தும் பலர் காட்டுமிராண்டிகளாய்த் திரிந்த நேரத்திலும் தமிழர் தரணி போற்றும் வணிகத்தைச் செய்தனர் என்பதை அறிய முடிகிறது. மூட்டை மூட்டையாய் பண்டங்கள் மலைபோல் குவிந்திருந்தனர் என்பதை,

**“மதிநிறைந்த மலிபண்டம்**

**பொதிமூடைப் போரேறி**
**மழையாடு சிமைய மால்வரைக் கவாஅன்**
**வரையாடு வருடைத் தோற்றம் போல"**[97]

என்று பட்டினப்பாலை கூறுகின்றது. மூடை என்பதற்கு மூட்டை என்பது பொருளாகும். இதனை விவரித்துக் கூறுமிடத்து,

**"செல்லா நல்லிசை யமரர் காப்பின்**
**நீரின் வந்த கருங்கறி மூடையும்**
**வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்**
**குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்**
**……………………………………...**
**……………………………………...**
**நீர்நாப் பண்ணு நிலத்தின் மேலும்**
**ஏமாப்ப இனிதுதுஞ்சி"**[98]

என்று குறிப்பிடுகிறது. இதிலிருந்து கிரேக்கம், எகிப்து, சுமேரியா, பாபிலோனியா போன்ற நாடுகளோடு தமிழர் வாணிகத் தொடர்பு கொண்டிருந்தனர் என்பது தெளிவாகின்றது.

### 5.28.4 வணிகர்களின் நடுவுநிலைமை

**"வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணி**
**பிறவும் தமபோற் செயின்"**[99]

என்ற குறள் பிறரையும் தான்போலவே நினைத்து நடுநிலைமையோடு வாணிகம் செய்யும் மரபைக் கூறுகின்றது. அதுபோலவே சங்க காலத்தில் வணிகர்கள் நடுநிலைமையோடு வாணிபம் செய்ததை,

**"கொள்வதுஉ மிகைகொளாது கொடுப்பதூஉங் குறைகொள்ளது**
**பல்பண்டம் பகர்ந்து வீசும்"**[100]

என்ற வரிகள் மூலம் தம்முடைய பண்டங்களையும், பிறருடைய பண்டங்களையும் சமமாகக் கருதி தாம் கொள்ளும் கால் மிகையாகக் கொள்ளாமலும், தாம் கொடுக்குங்கால் கொள்ளும் பொருளுக்குக் குறையக் கொடாமலும் நடுநிலைமையோடு வாணிபம் செய்ததை அறிய முடிகின்றது. உழவர்களின் நீண்ட நுகத்தடியின் நடுவில் தைக்கப்பட்டுள்ள பகலாணி போல நடுநிலைமையோடு வாணிகம் செய்ததை இலக்கியங்கள் வழி அறிய முடிகின்றது.

## 5.29 அட்டில் சாலைகள்

தானத்தில் சிறந்தது அன்னதானம் என்ற பொன் மொழிக்கேற்ப அக்காலம் முதல் இக்காலம் வரையிலும் கோயில்களிலும், மடங்களிலும் அன்னதானம் வழங்கப்பட்டு வருகின்றன. சங்க காலத்தில் வறுமையால் வாடுபவர்களுக்கும், துறவிகளுக்கும், வேறு ஊரில் இருந்து வருபவர்களுக்கும் உணவு வழங்கி அவர்களின் களைப்பைப் போக்குகின்ற வகையில் அரசர்கள் பல அன்னச்சத்திரங்கள் அமைத்ததை,

**"அறநிலைஇய அகனட்டிற்**
**சோறுவாக்கிய கொழுங்கஞ்சி**
**யாறுபோலப் பரந்தொழுகி"**[101]

என்ற வரிகள் புலப்படுத்துகின்றன. இவ்வன்னச் சத்திரங்களில் தினந்தோறும் உணவு சமைக்கப்படுவதால் சோறு வடித்த கஞ்சி ஆறுபோல ஓடிப்பரவியது என்பதை இவ்வரிகள் எடுத்துரைக்கின்றன. இச்சத்திரத்தின் மூலம் பலர் நன்மையடைந்ததையும் அறியமுடிகின்றன.

## 5.30. தொகுப்புரை

- ❖ சமூகம் என்ற சொல்லுக்கு கூட்டம், குழு, தொகுதி, சந்ததி ஆகிய பொருள்கள் சங்க இலக்கியத்தில் குறிப்பிடப்பட்டுள்ளன.
- ❖ தனிமனிதனுடைய உணர்வுகளும் செயல்களும், பழக்க வழக்கங்களும் பண்பாட்டு வளர்ச்சியுறுதலில் ஒரு முக்கிய நிலைகளாக இலக்கியங்கள் அமைந்துள்ளன.
- ❖ பத்துப்பாட்டு நூல்களில் பண்பாட்டுக் கூறுகளின் தாக்கம் விரவிக் கிடக்கின்றன. சங்ககால மக்கள் பல்வேறு வகையான நம்பிக்கைகளையும், பழக்கவழக்கங்களையும் கையாண்டனர். அப்பழக்க வழக்கங்கள் இடத்திற்கு இடம் மாறுபடக்கூடியதாக அமைந்துள்ளன.
- ❖ தலைவியைப் பிரிந்த தலைவன் வினை முடிந்ததும் திரும்பும் வழியில் இடையில் எங்கும் தங்காமல் தலைவியைக் காண விரைந்து வந்தான் என்று அன்பின் ஆழத்தை முல்லைப்பாட்டு அழகாகச் சித்தரித்துள்ளது.
- ❖ தலைவன் போர்களத்தொழிலையே பெரிதும் விரும்பியவனாய் போர் முடியும் வரை வேறு எவ்வித சிந்தனையுமின்றி போர் பற்றிய சிந்தனையோடு காணப்பட்டான் என்று போரின் சிறப்பினை முல்லைப்பாட்டு தெளிவாக எடுத்துரைக்கின்றது.
- ❖ திருமாலுக்குரிய ஆரிய பெயராகிய விஷ்ணு என்பது சங்க நூல்களில் இடம்பெறவில்லை. ஆனால் மால், மாயோன் என்னும் பெயர்கள் மட்டுமே இடம் பெற்றுள்ளதை சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.

- ❖ சங்ககால மக்கள் பெரும்பாலும் ஏதேனும் ஒரு தொழிலைத் துவங்கும் முன் தெய்வத்தை வணங்கி பின் தொழிலைத் தொடங்கியதாக நெடுநல்வாடை மூலம் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.
- ❖ மாலை வழிபாடு, கடல் தெய்வ வழிபாடு, கந்துடைத் தெய்வ வழிபாடு, தெய்வ வழிபாடு போன்ற வழிபாடுகள் சங்க காலத்தில் இருந்தமையை பத்துப்பாட்டு மூலமாக விளக்கப்பட்டுள்ளன.
- ❖ மக்களின் உணவு முறைகள் நிலத்திற்கு நிலம் மாறுபட்டு இருந்தது. அவர்கள் நிலத்தில் விளையும் பொருட்களையே பெரும்பாலும் உண்டனர் என்பதையும் குறிப்பிடப்பட்டுள்ளன.
- ❖ சங்ககாலத்தில் சேரி பெண்கள் ஒருவகையான தழை ஆடையையும், செல்வ மகளிர்கள் உயர்ந்த வகை ஆடைகளையும் அணிந்தனர். ஆண்கள் மேலாடை அணியும் வழக்கம் இல்லை. ஆனால் அயல்நாட்டிலிருந்து வந்த யவனர் போன்றோர் சட்டை அணிந்திருந்ததாக முல்லைப்பாட்டு வாயிலாக சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.
- ❖ பழங்காலத்தில் ஆண்களும் பெண்களும் தலையில் மலர்மாலையையும், கையணியான கடகம், தொடி போன்றவற்றையும், பெண்டிர் சங்கு போன்ற வளையலையும், மோதிரம், குழை, நெளி போன்ற அணிகலன்களையும் பயன்படுத்தியமையை கூறப்பட்டுள்ளன.
- ❖ சாதாரண மக்கள் தழை வேய்ந்த குடிசைகளிலும், அரச குடும்பத்தினர் உயர்ந்த மனைகளிலும் வாழ்ந்து வந்தனர். காவிரிப்பூம்பட்டினத்து மருவூர்ப் பாக்கத்தில் கடற்கரைக்கு அண்மையில் உள்ள மாடங்களில் இரவு முழவதும் விளக்க எரிந்து கொண்டிருந்ததாகவும், விடியற்காலையில் கடலில் மீன் பிடிக்க சென்ற பூம்புகார் பரதவருக்கு அவ்விளக்குகள் துணைபுரிந்ததாகவும் பட்டினப்பாலையில் சிறப்பாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன.
- ❖ குறிஞ்சி நிலத்தில் 99 வகை மலர்கள் இருந்ததையும் அதை பெண்கள் கழுத்தில் அணிந்து கொண்டு விளையாடியதையும் குறிஞ்சிப்பாட்டு புலப்படுத்துகிறது.
- ❖ சங்ககால மக்கள் அந்தந்த நிலத்தில் உள்ள தொழில்களான தினை விதைத்தல், தேன் எடுத்தல், கிழங்கு அகழ்தல், ஆநிரை மேய்த்தல், உழவுத்தொழில், மீன்பிடித்தல், வழிப்பறி செய்தல் போன்ற தொழில்களோடு, ஐவகை நிலத்தாரும் அவரவர்களுக்குத் தெரிந்த ஓவியத்தொழில், பொம்மைசெய்யும் தொழில், கயிறு திரிக்கும் தொழில், நெசவுத் தொழில் போன்ற தொழில்களில் ஈடுபட்டதாக பத்துப்பாட்டில் குறிப்பிடப்பட்டுள்ளன.

- சங்ககாலத்தில் வாணிபம் சிறந்த முறையில் நடைபெற்றதையும், அவ்வாறு நடைபெறும் போது வணிகர்கள் உழவர்களின் நீண்ட நுகத்தடியின் நடுவில் தைக்கப்பட்டுள்ள பகலாணி போல நடுநிலைமையோடு வாணிபம் செய்ததையும் பட்டினப்பாலை புலப்படுத்துகின்றன.
- தானத்தல் சிறந்த தானம் அன்னதானம் என்ற பழமொழியினை மெய்ப்பிக்கும் வகையில் அரசன் பல்வேறு அன்னச்சத்திரங்களை அமைத்ததையும் அதனால் பலர் பயனடைந்ததையும் இலக்கியங்கள் குறிப்பிட்டுள்ளன. இவ்வாறு சங்ககால சமூகத்தில் பல சிறந்த பண்பாடுகள் நிறைந்ததை இவ்வியலில் தெளிவாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

# பின்குறிப்புகள்

1. கடிகாசலம் (ப.ஆ), சங்க இலக்கியம் கவிதையியல் நோக்கு சிந்தனைப் பின்புல மதிப்பீடு, ப. 61.
2. நடராசன். தி.சு, திறனாய்வுக்கலை, ப. 51.
3. பரிமேலழகர் உரை, திருக்குறள் - 573.
4. பழனிச்சாமி. மா. பொ, இலக்கியக்கதிர், ப. 19.
5. சுந்தரமூர்த்தி. இ, இலக்கியமும் பண்பாடும், ப.32.
6. அக்னிபுத்ரன். எல்.கே, இலக்கியமும் சமூகவியல் கோட்பாடும், ப. 191.
7. சாமிநாதன், சங்க இலக்கிய மேற்கோள்கள், ப.30.
8. திருநாவுக்கரசு. க. த, தமிழ்ப்பண்பாடு, ப.1.
9. தட்சிணாமூர்த்தி.க இந்தியாவின் தேசியப் பண்பாடு, ப. 4.
10. பரிமேழலகர் உரை. திருக்குறள் - 996.
11. மேலது, 580.
12. பழனிச்சாமி. ம. பொ, இலக்கியக்கதிர், ப. 20.
13. பாலசுப்பிரமணியன். கு.வெ, சங்க இலக்கியத்தில் சமூக அமைப்புகள், ப. 5.
14. தேவநேயன். ஞா,பண்டைத் தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப.1.
15. மாணிக்கம். வ. சுப, தமிழ்க்காதல், முகவுரை, ப. 5.
16. சுரா ஆசிரியர்குழாம், தமிழ் - தமிழ் - ஆங்கில அகராதி, ப. 309.
17. மாணிக்கவாசகன். ஞா, தொல்காப்பியம், நூ. 1039.
18. மேலது, நூ. 1138.
19. நாராயணவேலுப்பிள்ளை. எம், பத்துப்பாட்டு - 1 முல்லைப்பாட்டு,பா.அடி 67-70.
20. பரிமேலழகர் உரை, திருக்குறள் - 45.
21. மேலது – 56.
22. ராதா. க, அக இலக்கியத்தில் பெண்ணாளுமை, ப. 6.
23. பகவதி. கே, தமிழர் ஆடைகள், ப.20.
24. நாராயண வேலுப்பிள்ளை. எம், பத்துப்பாட்டு (தொகுதி. 2) நெடுநல்வாடை, பா.அடி
25. சோமசுந்தரனார். பொ.வே, மதுரைக்காஞ்சி, பா.அடி. 465-67.
26. பரிமேலழகர் உரை, திருக்குறள். 391.
27. சோமசுந்தரனார். பொ.வே, மதுரைக்காஞ்சி, பா.அடி. 484-88.
28. மேலது, பட்டினப்பாலை, பா.அடி, 53-58.
29. கடிகாசலம் (ப.ஆ), சங்க இலக்கிய கவிதையியல் நோக்கு சிந்தனைப் பின்புல மதிப்பீடு, ப. 192.
30. தட்சிணாமூர்த்தி. அ, தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப. 194.
31. மேலது, ப. 198.

32. சோமசுந்தரனார். பொ.வே, முல்லைப்பாட்டு, பா.அடி 1-3.
33. அக்னிபுத்ரன். எல்.கே, செம்மொழி இலக்கியமும் சமூகவியல் கோட்பாடும், ப. 25.
34. இளம்பூரணார் உரை, தொல்காப்பியம், பொருள் நூ. 65.
35. நாராயண வேலுப்பிள்ளை. எம், பத்துப்பாட்டு (தொகுதி. 2), நெடுநல்வாடை. பா.அடி.166-168.
36. மேலது, 77-78.
37. சோமசுந்தரனார். பொ.வே, பத்துப்பாட்டு (தொகுதி.2) பட்டினப்பாலை, பா.அடி.35-36.
38. மேலது, நெடுநல். பா.அடி 42-44.
39. தட்சிணாமூர்த்தி. அ, தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப. 186.
40. நடராசன். பி. ரா, பத்துப்பாட்டு, பட்டினப்பாலை, 78-79.
41. மேலது, 86-93.
42. மேலது, 246-249.
43. சோமசுந்தரனார். பொ. வே, முல்லைப்பாட்டு. பா.அடி 6-11.
44. இளம்பூரணார் உரை, தொல்காப்பியம். பொருள், நூ. 60.
45. நாராயண வேலுப்பிள்ளை. எம், பட்டினப்பாலை. பா.அடி 154-155.
46. மோகன். இரா (உ.ஆ) பத்துப்பாட்டு தொகுதி (2), குறிஞ்சிப்பாட்டு. பா.அடி 3-7.
47. மேலது, பா.அடி – 204.
48. இராசமாணிக்கனார். மா, பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப. 435.
49. சோமசுந்தரனார். பொ. வே, பட்டினப்பாலை, பா.அடி 199-205.
50. இராசமாணிக்கனார். மா, பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப. 445.
51. சோமசுந்தரனார். பொ. வே, பட்டினப்பாலை. பா.அடி 91.
52. மேலது, நெடுநல்வாடை, பா.அடி 45-46.
53. மேலது, நெடுநல்வாடை, பா.அடி 181.
54. மேலது, பட்டினப்பாலை, பா.அடி 107.
55. நாராயண வேலுப்பிள்ளை.எம், குறிஞ்சிப்பாட்டு, பா.அடி.125.
56. நடராசன். பி. ரா, பத்துப்பாட்டு, நெடுநல்வாடை, பா.அடி 49-50.
57. சோமசுந்தரனார், பொ. வே, முல்லைப்பாட்டு, பா.அடி 66.
58. மேலது, பா.அடி 59 – 61.
59. மோகன். இரா (உ.ஆ), பத்துப்பாட்டு, நெடுநல்வாடை. பா.அடி 31.
60. நடராசன். பி. ரா, பத்துப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, பா.அடி 102 – 203.
61. மோகன். இரா (உ.ஆ), பத்துப்பாட்டு, நெடுநல்வாடை, பா.அடி 53-54.
62. சோமசுந்தரனார்.பொ. வே, முல்லைப்பாட்டு, பா.அடி 78.
63. மேலது – 41.
64. மோகன். இரா (உ.ஆ), பத்துப்பாட்டு. 2, நெடுநல்வாடை, பா.அடி 143-144.
65. சோமசுந்தரனார். பொ. வே, பட்டினப்பாலை, பா.அடி 22-23.
66. நடராசன். பி. ரா, பத்துப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, பா.அடி 53-54.

67. சோமசுந்தரனார், பொ. வே, முல்லைப்பாட்டு, பா.அடி 26.
68. நாராயண வேலுப்பிள்ளை, பத்துப்பாட்டு (2), பட்டினப்பாலை, பா.அடி 26-28.
69. மேலது, பா.அடி 80-81.
70. நடராசன். பி. ரா, பத்துப்பாட்டு, நெடுநல்வாடை, பா.அடி 83-86.
71. நாராயண வேலுப்பிள்ளை. எம், பத்துப்பாட்டு (2), பட்டினப்பாலை. பா.அடி 20.
72. மேலது, பா.அடி 24-25.
73. மேலது, பா.அடி 142 – 145.
74. நடராசன். பி.ரா, பத்துப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, பா.அடி 56-106.
75. நாராயண வேலுப்பிள்ளை. எம், பத்துப்பாட்டு (2), பட்டினப்பாலை, பா.அடி 61-66.
76. மேலது, பா.அடி 90-103.
77. தட்சிணாமூர்த்தி. அ, தமிழர் கலையும் பண்பாடும், பா.அடி ப. 166.
78. சோமசுந்தரனார். பொ. வே, பட்டினப்பாலை, பா.அடி 1-2.
79. மேலது, பா.அடி 67-68.
80. சசிவல்லி. வி. சி, பண்டைத் தமிழர் தொழில்கள், ப. 36.
81. சோமசுந்தரனார். பொ. வே, முல்லைப்பாட்டு, பா.அடி 15-16.
82. மோகன். இரா, பத்துப்பாட்டு (2), பட்டினப்பாலை, பா.அடி 9.
83. நடராசன். பி. ரா, பத்துப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, பா.அடி 42-43.
84. நாராயண வேலுப்பிள்ளை. எம், பத்துப்பாட்டு (2), பட்டினப்பாலை, பா.அடி.111-112.
85. நடராசன். பி. ரா, பத்துப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, 123-132.
86. மோகன். இரா (ப.ஆ), பத்துப்பாட்டு (2) பட்டினப்பாலை, பா.அடி 49.
87. மேலது, பா.அடி 24-25.
88. சோமசுந்தரனார். பொ. வே, முல்லைப்பாட்டு, பா.அடி 12.
89. இளம்பூரணார் உரை, தொல்காப்பியம், பொருள். நூ. 258.
90. பழனிச்சாமி. பொ. மா, இலக்கியக் கதிர், ப. 75.
91. இளம்பூரணார் உரை, தொல்காப்பியம், பொருள், நூ. 622.
92. பழனிச்சாமி.பொ.மா, இலக்கியக் கதிர், ப. 180.
93. நாராயண வேலுப்பிள்ளை. எம், பத்துப்பாட்டு, பட்டினப்பாலை, பா.அடி 29-30.
94. பழனிச்சாமி. பொ. மா, இலக்கியக் கதிர், ப. 180.
95. நாராயண வேலுப்பிள்ளை. எம், பத்துப்பாட்டு, பட்டினப்பாலை, பா.அடி 216-218.
96. மேலது, பா.அடி 126-131.
97. மேலது, பா.அடி 136-139.
98. மேலது, பா.அடி 184-195.
99. பரிமேலழகர் உரை, திருக்குறள்- 120.
100. நடராசன். பி. ரா, பத்துப்பாட்டு, பட்டினப்பாலை, பா.அடி 210-11.
101. மேலது, பா.அடி 43-45.

# முடிவுரை

- இலக்கியங்கள் சங்ககால மக்களின் வாழ்க்கை நெறிமுறைகளை எடுத்தியம்புவதோடு, மக்களை நல்வழிப்படுத்துவதாகவும் அமைந்துள்ளதை காண முடிகிறது.
- அகம், புறம் என்று இரண்டாக பகுக்கப்பட்டுள்ள சங்க இலக்கியங்களில் அக இலக்கியம் மக்களை சமூகச் சூழலோடு ஒன்றி வாழ வைப்பதாகவும், புற இலக்கியங்கள் வீரம், கொடை போன்றவற்றை வெளிப்படுத்துவதாகவும் அமைந்துள்ளன.
- பழங்கால இலக்கியங்கள் ஓலைகளில் எழுதப்பட்டமையால் அவை விரைவில் அழிந்து வருவதைஅறிந்த சான்றோர் பெருமக்கள் அவைகளை ஏடுகளில் பதிக்கும் பணியில் ஈடுபட்டனர். அவ்வாறு பதிப்பிக்கும் போது நூலாசிரியரின் மூலநூலில் உள்ள சொற்களை மாற்றாது அவ்வாறே பதிப்பிக்க வேண்டும் என்ற நெறிமுறைகளைக் கடைப்பிடித்தும், ஐயம் ஏற்படுவதாக இருப்பின் அவ்வப் பக்கங்களின் கீழ் உரிய விளக்கங்களை அளித்தும் பதிப்பித்ததை இலக்கியங்கள் வாயிலாக புலப்படுகின்றன.
- பதிப்புகளுள் மிகவும் பழமையான பதிப்பாக 1812-ல் வெளியிடப்பட்ட திருக்குறள் பதிப்பும், 1847-ஆம் ஆண்டு மகாலிங்கய்யரால பதிப்பிக்கப்பட்ட தொல்காப்பிய எழுத்ததிகார பதிப்பும், 1851—ல் ஆறுமுக நாவலரால் பதிப்பிக்கப்பட்ட திருமுருகாற்றுப்படையும் மிகச்சிறந்த பதிப்புகளாக வெளியிட்டுள்ளதைக் காண முடிகிறது.
- பத்துப்பாட்டை ஏட்டுச்சுவடிகளிலிருந்து உ.வே. சாமிநாதையர் தான் 1889-ல் முதன் முதலில் பதிப்பித்தார் என்பதைச் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.
- பல்வேறு நோக்குடன் பத்துப்பாட்டு நூல்கள் வெளியிடப்பட்டு இருப்பினும் இது தொல்காப்பிய மரபினைப் பின்பற்றியே பாடப்பட்டுள்ளதைக் காண முடிகிறது.
- முல்லைப்பாட்டு, பட்டினப்பாலை, குறிஞ்சிப்பாட்டு போன்ற நூல்கள் திணை அடிப்படையிலும், மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை போன்றவை பாடுபொருள் அடிப்படையிலும் அமைக்கப்பட்டுள்ளதைத் தெளிவாக கூறப்பட்டுள்ளன.
- கைக்கிளை, பெருந்திணைப் பாடல்கள் பத்துப்பாட்டு அகநூல்களில் முற்றிலும் இடம்பெறவில்லை. ஆனால் பாடல்கள் அனைத்தும் அன்பின் ஐந்திணையைச் சார்ந்தே அமைந்துள்ளதைக் காண முடிகிறது.
- குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் போன்ற திணைப் பெயர்கள் பெரும்பாலும் அந்தந்த நிலத்தில் பூக்கும் பூக்களின் தன்மை அடிப்படையிலும், பாலை என்ற பெயர் நிலத்தின் தன்மை

அடிப்படையிலும் பெயர் வைக்கப்பட்டுள்ளமையைச் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.

- பொழுதை அறிந்து நேரத்தைக் கணக்கிடுவதற்கு நாழிகை வட்டிலும், நேரத்தை கணிக்க நாழிகைக் கணக்கர்களும் சங்காலத்தில் இருந்தமையைக் காணமுடிகிறது.
- கானவர்கள் தினைப்புனங் காக்கும் போது, அதை உண்ண வரும் விலங்குகளை விரட்ட குளிர், தட்டை போன்ற கருவிகள் பயன்பட்டதை குறிஞ்சிப்பாட்டு தெளிவாக எடுத்துரைக்கின்றது.
- பிரிவு அவலம் ஐந்து திணைகளிலும் குறிப்பிடப்பட்டிருந்தாலும் முல்லைப்பாடல்களில் மிகவும் அழுத்தமாகவே புனையப்பட்டுள்ளன.
- மன்னன் புலவருக்கும், பாணருக்கும், பாடினிக்கும் தேர், யானை முதலான பல பரிசுகளை வழங்கியதை மதுரைக்காஞ்சி வாயிலாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன.
- பகைவரை வென்றதற்கு அடையாளமாக வெற்றிப்பெற்ற வேந்தனின் பாசறையில் வெற்றிக் களிப்புத் தோன்ற முரசு முழங்கியதை முல்லைப்பாட்டு வாயிலாக தெளிவாக விளக்கப்பட்டுள்ளது.
- சங்கச் சான்றோர்கள் இயற்கையை வருணிப்பதில் வல்லவர்கள். அவர்கள் தாம் பாட எண்ணிய கருத்துக்களில் மலை, அருவி, சூரியன், மழை, மரம், செடி, கொடி, மலர் போன்ற பல்வேறு இயற்கை நிகழ்வுகளை உவமையாகக் கூறி, செய்யுட்களை இயற்றியிருப்பதை உணர முடிகிறது.
- கூதிர்காலத்தில் இடைவிடாது மழைப்பெய்து, பின் சிறுசிறு துளிகளை மெல்லத் தூவுகின்ற காட்சியானது, வானைப் பிளந்து கொண்டு வெண்மையான முத்துக்கள் உதிர்வதைப் போன்று மழை பெய்வதாக வருணித்துள்ளமையை நக்கீரர் பாடல் வாயிலாக எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.
- தமிழர்களின் வாழ்வில் மலர்கள் சிறந்த இடத்தைப் பெற்றுள்ளன. மலரும் இடத்திற்கு ஏற்ப கோட்டுப்பூ, கொடிப்பூ, நிலப்பூ, நீர்ப்பூ என பாகுபாடு செய்யப்பட்டன.
- இம்மலர்கள் மங்கலப் பொருளாகவும், வழிபாட்டுப் பொருளாகவும் வாழ்வில் பயன்படுத்தப்பட்டு வருகின்றது. இம்மங்கலப் பொருளான மலர் இல்லையென்றால் வாழ்வில் நிகழ்ச்சிகள் நிறைவுறுவதில்லை. அதனால்தான் புலவர்கள் பல இடங்கிளல் பல கோணங்களில் மலர்களை வருணித்துள்ளனர். மேலும் 99 வகையான மலர்களை பற்றி குறிஞ்சிப்பாட்டு விவரிப்பதையும் காணமுடிகிறது.
- புலவர்கள் தலைவனின் தோற்றத்தை வருணிக்கும் போது, அழகிய வில்லைக் கையில் ஏந்தியும், வேலைபாடமைந்த ஆடையினைத் தம் இடுப்பில் கட்டியும் அழகிய வீரக்கழல்களை அணிந்து கொண்டு வருவது

முருகனோ என்று வியக்கும்படி இருந்ததாக வருணித்துள்ளதை உறுதிப்படுத்தப்பட்டுள்ளன.

❖ மழைத்துளியையே உணவாக உட்கொள்கின்ற வானம்பாடியே மழைத்துளியைப் பெறாது புலம்பும்படி வானம் மழைப் பெய்யாது பொய்ப்பினும் காவிரிப்பூம்பட்டினத்தில் நீர்வளம் வற்றாது என காவிரியின் வளத்தினை பட்டினப்பாலை குறிப்பிடுகின்றது.

❖ காவிரிப்பூம்பட்டினத்து மக்கள் பயன்பெறும் வகையில் அமைக்கப்பட்ட அட்டில் சாலைகளில் ஆக்கிய சோற்றின் கொளுத்த கஞ்சியானது ஆறுபோல் ஓடியதாகவும், அங்குள்ள காளைகள் ஒன்றோடொன்று சண்டையிடுவதால் அவ்விடம் சேறாகி, புழுதி பரந்து அப்புழுதி அரண்மனையில் படிவதால் அரண்மனை பார்ப்பதற்கு தீட்டப்பட்ட ஓவியம் போல காணப்படுவதாக பட்டினப்பாலை எடுத்துரைக்கின்றது.

❖ புலவர்கள் ஒரு செய்யுளை இயற்றும் போது தொடர்ச்சியாக ஒரே கருத்தை மட்டும் கூறாது, இடையிடையே பல்வேறு கருத்துக்களைக் கூறி, இறுதியில் தாம் கூற நினைக்கும் கருத்தை சிறப்பாக எடுத்தியம்பியுள்ளதை பத்துப்பாட்டு வாயிலாக உணர்த்தப்பட்டுள்ளது.

❖ முல்லைப்பாட்டு 103 அடிகளைப் பெற்று பத்துப்பாட்டில் சிறிய பாடலாக இருப்பினும் இது, தான் கூற வந்த கருத்தை மட்டுமே கூறாமல் முதலில் தலைவியின் ஆற்றாமையையும், பின் தலைவனின் பாசறை நிலையையும் மீண்டும் தலைவியின் துயர நிலையையும், மீண்டும் தலைவனின் நிலையையும் மாறிமாறி கூறப்பட்டு இறுதியில் தலைவனின் தேரில் பூட்டிய மணியோசை ஒலிப்பதைக் கேட்டு தலைவி மகிழ்ச்சியடைவதாக இப்பாடல் முடிவு பெற்றுள்ளதைக் காண முடிகிறது.

❖ மதுரைக்காஞ்சி 782 அடிகளைக்கொண்டு ஒரே பாடலாக இருப்பினும் இது நெடுஞ்செழியனுக்கு நிலையாமையை எடுத்துக் கூறுவதோடு மட்டுமல்லாது, இடையிடையே மதுரையின் பல்வேறு சிறப்புகளையும் நெடுஞ்செழியன் போரின் திறம், படையின் சிறப்பு பகைவர் நாட்டை கைபற்றியமை போன்ற பல செயல்களை விவரிப்பதாக அமைந்துள்ளதை தெளிவாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

❖ குறிஞ்சிப்பாட்டு தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்பதாகப் பாடப்பட்டுள்ளது. இது நாடகப் பண்புடையதாகவும், ஒருநாள் நிகழ்ச்சியைத் தெளிவாக எடுத்துக்கூறுவதாகவும் அமைந்து தலைவன் இரவுக் குறியில் வருவதால் ஏற்படும் துன்பத்தை எடுத்துக் கூறுவதாக நிறைவு பெற்றுள்ளதை அறியமுடிகிறது.

❖ நெடுநல்வாடையானது, இருவேறு மனநிலைகளைப் புலப்படுத்துவதாக அமைந்துள்ளது. அதாவது பாடலின் தொடக்கத்தில் கூதிர்காலத்தில் மக்கள், பறவை, விலங்குகளின் நிலையையும், பின் தலைவனைப் பிரிந்த தலைவிக்கு வாடை நெடியவாடையாகவும், போரில் போர் பற்றிய

எண்ணங்களோடு உள்ள தலைவனுக்கு வாடை நல்ல வாடையாகவும் இருப்பதை சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.

- 301 அடிகளைக்கொண்ட பட்டினப்பாலையின் தொடக்கம் காவிரியின் சிறப்புகளை வருணிப்பதாகவும், இடையில் சோழ நாட்டின் சிறப்புகள், அங்குள்ள தோட்டங்கள், நாட்டப்பட்டிருக்கும் கொடிகளின் சிறப்புகள் போன்றவற்றையெல்லாம் கூறி இவ்வாறு வளம் நிறைந்த பட்டினமே பெறினும் தன் தலைவியை விட்டுப் பிரியேன் என்று தன் நெஞ்சிக்கு கூறுவதாக பாடல் அமைந்துள்ளன. இப்பாடலின் தொடக்கம் முதல் புறச்செய்திகளே காணப்பட்டாலும் இறுதி மூன்று அடிகள் மட்டுமே தலைவிக்கு மகிழ்ச்சியூட்டுவதாகவும், தலைவன் தலைவிமேல் கொண்ட அன்பினைப் புலப்படுத்துவதாகவும் கூறப்பட்டுள்ளது.
- சங்க இலக்கியத்தில் சமூகம் என்ற சொல்லிற்கு கூட்டம், குழு, தொகுதி, சந்ததி ஆகிய பொருள்கள் வழங்கப்பட்டன.
- மக்கள் ஏதேனும் ஒரு தொழிலைத் துவங்கும்முன் தெய்வத்தை வணங்கி பின் தொழிலைத் தொடங்கியதாகவும், மாலை நேர வழிபாடு, கடல் தெய்வ வழிபாடு கந்துடைத் தெய்வ வழிபாடு, பொது தெய்வ வழிபாடு போன்ற வழிபாடுகள் சங்க காலத்தில் இருந்ததையும் அதிலும் மாலைநேர வழிபாடே மிகவும் சிறப்பானதாக கருதப்பட்டதையும் நெடுநல்வாடை மூலமாக உணர்த்தப்பட்டுள்ளது.
- சங்ககால சேரிப்பெண்கள் ஒரு வகையான தழை ஆடையையும், செல்வமகளிர் உயர்ந்த வகை ஆடைகளையும் அணிந்ததை முல்லைப்பாட்டு வாயிலாக அறியமுடிகிறது.
- பழங்காலத்தில் ஆண்களும் பெண்களும் மலர்மாலையையும், பெண்கள் கையணியாக கடகம், தொடி போன்றவற்றையும், பெண்டிர் கையில் சங்கு போன்ற வளையளையும், மோதிரம், குழை, நெளி போன்ற பல்வேறு அணிகலன்களை அணிந்ததையும் பத்துப்பாட்டு இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.
- மக்கள் அந்தந்த நிலத்தில் உள்ள தொழில்களான தினை விதைத்தல், தேன் எடுத்தல், கிழங்கு அகழ்தல், ஆநிரை மேய்த்தல், உழவுத் தொழில், மீன் பிடித்தல், வழிப்பறி செய்தல் போன்ற தொழில்களோடு, ஐவகை நிலத்தாரும் அவரவருக்குத் தெரிந்த ஓவியத்தொழில், நெசவுத்தொழில் போன்ற தொழில்களில் ஈடுபட்டதை பத்துப்பாட்டில் தெளிவாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன.
- தானத்தில் சிறந்த தானம் அன்னதானம் என்ற பழமொழியினை மெய்ப்பிக்கும் வகையில் அரசன் பல்வேறு அன்னச் சத்திரங்களை அமைத்ததையும், அதனால் பலர் பயனடைந்ததையும் காணும்போது சங்ககால சமூகத்தில் பல சிறந்த பண்பாடுகள் இருந்ததைத் தெளிவாக காண முடிகிறது.

# துணைநூற்பட்டியல்


**முதன்மை நூல்கள்**

1. **சோம சுந்தரனார். பொ.வே - "பத்துப் பாட்டு (தொகுதி – 1)",**
கழக வெளியீடு,
திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த
நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
சென்னை – 18, பதிப்பு – 1992.

2. **சோம சுந்தரனார். பொ.வே - "பத்துப் பாட்டு (தொகுதி – 2)",**
கழக வெளியீடு,
திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த
நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
சென்னை – 18, பதிப்பு – 1992.

**துணைமை நூல்கள்**

1. **அகத்தியலிங்கம். ச - "சங்க இலக்கியம் செவ்வியல் பார்வை",**
மெய்யப்பன் பதிப்பகம்,
சிதம்பரம் - 608 001, பதிப்பு – 2010.

2. **அகத்தியலிங்கம். ச - "சங்க இலக்கியங்கள் செவ்வியல் இலக்கியங்களே!',**
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை – 600 108, பதிப்பு – 2010.

3. **அகத்தியலிங்கம். ச - "தமிழ்மொழி அமைப்பியல்",**
மெய்யப்பன் தமிழாய்வகம்,
சிதம்பரம் - 608 001, பதிப்பு – 2002.

4. **அக்னிபுத்ரன். எல்.கே - "இலக்கியமும் சமூகவியல் கோட்பாடும்",**
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை – 600 108, பதிப்பு – 2009.

5. அறவாணன். க.ப - **"திருக்குறள்",**
தமிழ்க் கோட்டம்,
சென்னை – 29, பதிப்பு – 2013.

6. ஆதிநாராயணன். கி - **"தமிழின் செம்மொழிப் பண்புகள்",**
சிபியகம் வெளியீடு,
சென்னை – 600 037, பதிப்பு – 2012.

7. ஆலிஸ். அ - **"கட்டமைப்பு நோக்கில் அகநானூறும் புறநானூறும்",**
பாரதிதாசன் பல்கலைக்கழகம்,
திருச்சி, பதிப்பு – 1991.

8. இளஞ்சேரன். கோவை - **"இலக்கியம் ஒரு பூக்காடு",**
இராக் போர்ட்டு பப்ளிகேஷன்,
சென்னை, பதிப்பு – 1982.

9. இளம்பூரணார் (உ.ஆ) - **"தொல்காப்பியம்" (பொருளதிகாரம்),**
சாரதா பதிப்பகம்,
சென்னை – 600 014.

10. இராகவையங்கார். இரா - **பட்டினப்பாலை ஆராய்ச்சி,**
ஸ்ரீ செண்பகா பதிப்பகம்,
சென்னை, பதிப்பு – 2012.

11. இராசமாணிக்கனார். மா - **"பத்துப்பாட்டு ஆராய்ச்சி",**
மணி ஆப்செட் அச்சகம்,
சென்னை – 77, பதிப்பு – 2012.

12. இராணி. ந - **"சங்க இலக்கியத் தொகுப்பு நெறிமுறைகள்",**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்(பி) லிட்,
சென்னை – 600 098, பதிப்பு – 2012.

13. இராமசாமி. மு. பெரி - **"நக்கீரர் - ஓர் ஆய்வு",**
பார்வதி பப்ளிகேஷன்,
அம்மாபேட்டை, சேலம் - 636 003,
பதிப்பு – 2000.

14. இராமசுப்பிரமணியம். வ.த (உ.ஆ)- **"நம்பியப்பொருள்"**
சிட்டு நூலகம்,
தி. நகர், சென்னை – 600 017.

15. இராமநாதன் செட்டியார்.லெ.ப.கரு- **"பத்துப்பாட்டு வளம்",**
முத்தையா நிலையம்,
சென்னை, பதிப்பு – 1964.

16. இராமமூர்த்தி. எல் - **"தமிழ் இலக்கியங்கள் கட்டவிழ்ப்பும் கட்டமைப்பும்",**
காவ்ய வெளியீடு,
சென்னை – 600 024, பதிப்பு – 2005.

17. இராமலிங்கம் பிள்ளை. வெ - **"இலக்கிய இன்பம்",**
பழனியப்பா பிரதர்ஸ்,
சென்னை – 600 014, 9-ம் பதிப்பு–1994.

18. கடிகாசலம். ந - **"சங்க இலக்கியம் கவிதையியல் நோக்கு சிந்தனைப் பின்புல மதிப்பீடு",**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை – 600 113, பதிப்பு – 1998.

19. கந்தசாமி. அ - **"பழந்தமிழரின் பழக்கவழக்கங்கள்",**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை – 600 113, பதிப்பு – 2013.

20. கரிகாலன். நைசி - **"பத்துப்பாட்டு ஆய்வுகள்",**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
சென்னை – 600 098.

21. காசி விசுவநாதன் செட்டியார் பழ.மு - **"கலித்தொகை" (நச்சினார்க்கினியர் உரை),**
கழக வெளியீடு,
சென்னை, 5 ம் பதிப்பு–1958.

22. காளிமுத்து. ப - **"குறிப்புப்பொருள் கோட்பாடுகள்",**
தேன்மலர் பதிப்பகம்,
பழனி, பதிப்பு – 2004.

23. குருநாதன். இரா - **"குறிஞ்சி வளம்",**
வெற்றி மங்கை வெளியீட்டகம்,
சென்னை–600 078, 2ம் பதிப்பு–1998.

24. கைலாசபதி. க - **“சமூகவியலும் இலக்கியமும்”,**
குமரன் பப்ளிசர்ஸ்,
சென்னை–600 026, 2ம்பதிப்பு – 2002.

25. கோவேந்தன். த - **“அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருதம்”,**
வேமன் பதிப்பகம்,
சென்னை – 34, பதிப்பு – 2007.

26. சசிவல்லி. வி.சி - **“பண்டையத் தமிழர் தொழில்கள்”,**
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை – 600 113.

27. சண்முகம். வீ - **“புதுக்கவிதைப் பாடுபொருள்”,**
தி. பார்க்கர் வெளியீடு,
சென்னை – 600 014, பதிப்பு – 2002.

28. சண்முகம். செ.வை - **“கவிதைக் கட்டமைப்பு”,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
சென்னை – 600 098, பதிப்பு – 2013.

29. சண்முகம் பிள்ளை. மு - **“பதினெண்கீழ்க்கணக்கு தொகுதி-1”,**
முல்லைநிலையம்,
சென்னை–600 017, 2ம் பதிப்பு–2009.

30. சந்திரசேகரன். இரா (ப.ஆ) - **“தமிழ் இலக்கிய வாழ்வியல்”,**
பாரதியார் பல்கலைக் கழகம்,
கோவை – 641 046.

31. சவகர். க - **“திணைவெளி திணைக்கோட்பாட்டுக் கட்டுரைகள்,**
புதுப்புனல் வெளியீடு,
சென்னை – 600 003, பதிப்பு – 2012.

32. சாமி சிதம்பரனார் - **“பத்துப்பாட்டும் பண்டையத்தமிழரும்”,**
அறிவுப் பதிப்பகம்,
சென்னை – 600 014, பதிப்பு – 2003.

33. சாமிநாதையர். உ.வே (ப.ஆ) - **“பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கினியருரையும்”,**
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

34. **சாரதாம்பாள்** - **“சங்கச் செவ்வியல் சங்க கிரேக்க ஒப்பீடு”**
மீனாட்சி புத்தக நிலையம்,
மதுரை – 625 001.

35. **சாரங்கபாணி. இரா** - **“சங்க இலக்கிய மேற்கோள்கள்”,**
மெய்யப்பன் பதிப்பகம்,
சிதம்பரம் – 608 001.

36. **சுந்தரமூர்த்தி. இ** - **“இலக்கியமும் பண்பாடும்”,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
சென்னை – 600 098, பதிப்பு – 1996.

37. **சுப்பராயநாய்கரவர்கள். சூ** - **“பெரியபுராணம் முதல் தொகுதி”,**
முல்லை நிலையம்,
சென்னை – 17, பதிப்பு – 2010.

38. **செயபால். இரா (உ..ஆ)** - **“அகநானூறு”,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
சென்னை–600 098, 3ம் பதிப்பு–2007.

39. **தட்சிணாமூர்த்தி. அ** - **“தமிழர் நாகரிகமும் பண்பாடும்”,**
யாழ் வெளியீடு,
சென்னை – 600 040, 2ம் பதிப்பு–2011.

40. **தட்சிணாமூர்த்தி. க** - **“இந்தியாவின் தேசியப் பண்பாடு”,**
நேஷனல் புக் டிரஸ்ட்
புதுடெல்லி, பதிப்பு – 1995.

41. **தமிழண்ணல்** - **“புதிய நோக்கில் தமிழிலக்கிய வரலாறு”,**
அன்புச் செல்வி பதிப்பகம்,
மதுரை, பதிப்பு – 1980.

42. **தமிழண்ணல்** - **“செவ்விலக்கியச் சிந்தனைகள்”,**
மெய்யப்பன் பதிப்பகம்,
சிதம்பரம், பதிப்பு – 2008.

43. **தமிழண்ணல்** - **“சங்க இலக்கிய ஒப்பீடு இலக்கிய வகைகள்”,**
செல்லப்பா பதிப்பகம்,
மதுரை – 625 001, 2ம் பதிப்பு–2011.

44. **தாணம்மாள். இல** - **“சங்க இலக்கியத்தில் மலர்கள்”,**
வானதி பதிப்பகம்,
சென்னை, 3ம் பதிப்பு–1981.

45. **திருநாவுக்கரசு. க.த** - **“தமிழ்ப் பண்பாடு”,**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை – 600 113.

46. **திருநாவுக்கரசு. சி** - **“கம்பராமாயணம்”,**
நர்மதா பதிப்பகம்,
சென்னை.

47. **துரைசாமிப்பிள்ளை. ஔவை சு. (ப.ஆ)** - **“திருமுருகாற்றுப்படை பத்துப் பாட்டு சொற்பொழிவுகள்”,** திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, பதிப்பு – 1952.

48. **துரைசாமிப்பிள்ளை. ஔவை சு** - **“பதிற்றுப்பத்து”,** பூம்புகார் பதிப்பகம், சென்னை – 600 018, பதிப்பு – 2010.

49. **தேவநேயன். ஞா** - **“பண்டையத் தமிழ் நாகரிகமும் பண்பாடும்”,** நேசமணி பதிப்பகம், காட்டுப்பாடி, பதிப்பு – 1966.

50. **நடராசன். தி.சு** - **“திறனாய்வுக் கலை”,** நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை – 600 098.

51. **நடராசன். பி.ரா** - **“சங்க இலக்கியம் பத்துப்பாட்டு”,** திருமகள் நிலையம், சென்னை – 600 017, பதிப்பு – 2004.

52. **நடேசன்.** - **“திருமுருகாற்றுப்படை புத்துரையும் ஆராய்ச்சியுரையும்”,** ஏவரெடி அச்சுக் கூடம், சென்னை, பதிப்பு – 1936.

53. **நச்சினார்க்கினியர் (உ.ஆ).** - **"தொல்காப்பிய உரை",**
கழக வெளியீடு,
சென்னை – 600 018, பதிப்பு – 1972.

54. **நவநீத கிருட்டிணன். மா** - **"தமிழ் இலக்கியத்தில் ஆற்றுப்படை",**
குறிஞ்சி மலர் வெளியீடு,
மதுரை, பதிப்பு – 1988.

55. **நாராயண வேலுப்பிள்ளை.எம்** - **"பத்துப் பாட்டு (2ம் பகுதி)",**
முல்லை நிலையம்,
சென்னை–600 001, 2ம் பதிப்பு–2003.

56. **நிர்மலா ஔவை** - **"அனுத்துளி",**
விழிச்சுடர் பதிப்பகம்,
காரைக்கால், பதிப்பு – 2014.

57. **பகவதி. கே** - **"தமிழர் ஆடைகள்",**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை – 600 020.

58. **பாலசுந்தரம்பிள்ளை. தி.சு** - **"நாலடியார்",**
கழக வெளியீடு,
திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த
நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
சென்னை – 18, 9ம் பதிப்பு – 1992.

59. **பாலசுப்பிரமணியன். கு.வெ** - **“சங்க இலக்கியத்தில் சமூக அமைப்புகள்”,**
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர் – 1994.

60. **பாலசுப்பிரமணியன். கு.வெ (உ.ஆ)** - **“நற்றிணை”,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
சென்னை – 600 098, பதிப்பு – 2007.

61. **பாலசுப்பிரமணியன். கு.வெ** - **“சங்க இலக்கியக் கொள்கைகள்”,**
மீனாட்சி புத்தக நிலையம்,
மதுரை – 625 001, பதிப்பு – 2008.

62. **பரிமேலழகர் (உ.ஆ)** - **“திருக்குறள்”,**
கழக வெளியீடு,
திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த
நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
சென்னை – 18, பதிப்பு – 1998.

63. **பழனிச்சாமி. பொ.மா (தொ.ஆ)** - **“இலக்கியக் கதிர்”,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
சென்னை–600 098, 2ம் பதிப்பு–2011.

64. **புலியூர்க்கேசிகன்** - **“சிலப்பதிகாரம்”,**
பாரி நிலையம்,
சென்னை – 600 108, பதிப்பு–2009.

65. புலியூர்க்கேசிகன் - **“புறப்பொருள் வெண்பாமாலை”,**
பாரி நிலையம்,
சென்னை – 600 108, பதிப்பு–2003.

66. மனவாளன். அ.அ - **“இலக்கிய ஒப்பாய்வு சங்க இலக்கியம்”,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
சென்னை–600 098, 2ம் பதிப்பு–2011.

67. மாணிக்கம். வ.சுப - **“தமிழ்க்காதல்”,**
மெய்யப்பன் பதிப்பகம்,
சிதம்பரம் – 608 001, பதிப்பு – 2007.

68. மாணிக்கம். அ - **“தமிழ்விடு தூது”,**
மணிக்கவாசகர் பதிப்பகம்,
சென்னை – 600 108, 6ம் பதிப்பு – 2010.

69. மாணிக்கவாசகன். ஞா - **“தொல்காப்பியம் மூலமும் உரையும்”,**
உமா பதிப்பகம்,
சென்னை – 600 001, 3ம் பதிப்பு – 2010.

70. மாணிக்கவாசகன். ஞா (உ.ஆ) - **“புறநானூறு”,**
உமா பதிப்பகம்,
சென்னை – 600 001, பதிப்பு – 1998.

71. மாதையன். பெ - **“தமிழ்ச் செவ்வியல் படைப்புகள்”,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
சென்னை – 600 098, பதிப்பு – 2012.

72. **மோகன். இரா (உ.ஆ)** - **“பத்துப் பாட்டு (தொகுதி–1 மற்றும் 2)”,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
சென்னை – 600 098.

73. **மாயாண்டி பாரதி. க** - **“சிறுபாணாற்றுப்படை”,**
**பத்துப் பாட்டுச் சொற்பொழிவுகள்**
திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த
நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
சென்னை – 18, பதிப்பு – 1952.

74. **ராதா. க** - **“அக இலக்கியத்தில் பெண்ணாளுமை”,**
ஜனகா பதிப்பகம்,
சென்னை – 33, பதிப்பு – 2010.

75. **வரதராசன். மு** - **“பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை”,**
பாரி நிலையம்,
சென்னை – 600 108.

76. **வரதராசன். மு** - **“இலக்கியத்திறன்”,**
பாரி நிலையம்,
சென்னை–600 108, மறுபதிப்பு–2011.

77. **விசுவநாதன். அ** - **“கலித்தொகை”,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
சென்னை – 600 098, பதிப்பு – 2007.

78. **வெற்றிச் செல்வன்** - **“தமிழ் இலக்கியத்தில் மலர்கள்”,**
சென்னை – 600 108,
பதிப்பு – 2000.

79. **வேங்கடசாமி. மயிலை சீனி** - **“தமிழர் வளர்த்த அழகுக் கலைகள்”,**
ஸ்ரீ செண்பகா பதிப்பகம்,
சென்னை – 17, பதிப்பு – 2010.

80. **வேங்கடசாமி. நாட்டார். ந.மு** - **“மணிமேகலை”,**
சாரதா பதிப்பகம்,
சென்னை – 14, 14ம் பதிப்பு – 2011.

81. **வேலம்மாள். நா** - **“தமிழ் இதழ்களில் கட்டமைப்புக் கூறுகள்”,**
தாமரை பப்ளிகேஷன்ஸ் (பி) லிட்,
சென்னை – 600 098, பதிப்பு – 2008.

82. **வையாபுரிப் பிள்ளை. எஸ்** - **“சங்க இலக்கியம் (பாட்டும் தொகையும்)”,**
சென்னை – 600 117, பதிப்பு – 2005.

## ஆய்வுக்கட்டுரைகள்

1. **இளையராஜா. அ** - **“சங்ககால வணிகம்”,**
முனைவர் பட்ட ஆய்வாளர்,
அரசு கலைக்கல்லூரி,
அரியலூர் – 621 713.

2. **சுந்தரராஜன். த** - **“அக இலக்கியம் உணர்த்தும் வாழ்வியல் சிந்தனைகள்”,**
இராஜா நந்தி வர்மன் கலை அறிவியல் கல்லூரி, தெள்ளார் - 604 406.

3. **மங்கலட்சுமி. இல** - **“குறிஞ்சித்திணையில் முதல், கரு”,**
முனைவர் பட்ட ஆய்வாளர்,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,
அண்ணாமலை நகர்.

4. **ரோஸ்லின் மேரி. செ** - **“மதுரைக் காஞ்சி காட்டும் பழந்தமிழக வரலாறு”,**
செங்கமலத்தாயார் மகளிர் கல்லூரி,
மன்னார்குடி.

## ஆய்வேடுகள்

1. **ஆலிஸ். அ** - **“கட்டமைப்பு நோக்கில் அகநானூறும் புறநானூறும்”,**
பாரதிதாசன் பல்கலைக்கழகம்,
திருச்சி.

2. **நிஷாந்தினி. ஜெ** - **“புலவர் கதைகள்: வகைமை, கட்டமைப்பு ஆய்வு”,**
பாரதியார் பல்கலைக்கழகம்,
முனைவர் பட்ட ஆய்வேடு,
கோவை, செப்டம்பர் - 2007.

**களஞ்சியங்கள்**

1. **பாலுசாமி. நா.** - **"வாழ்வியற் களஞ்சியம் (தொகுதி பத்து)",** தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

2. **வையாபுரிப் பிள்ளை. எஸ்** - **"தமிழ் இலக்கியக் களஞ்சியங்கள்",** திருமலா பப்ளிகேஷன்ஸ், சென்னை – 600 114.

**அகராதிகள்**

1. **ஆசிரியர் குழாம்** - **"தமிழ் - தமிழ் - ஆங்கில அகராதி",** சுரா புக்ஸ் பிரைவேட் லிட், சென்னை, பதிப்பு – 2001.

2. **கதிரைவேற்பிள்ளை** - **"தமிழ் - தமிழ் அகராதி" (ஆறாம் பதிப்பு),** ஏசியன் எஜிகேஷனல் சர்வீஸ், டெல்லி.

3. **சிங்கார வேலுமுதலியார்** - **"அபிதான சிந்தாமணி",** ஏசியன் எஜிகேஷன்ஸ் சர்வீர், சென்னை, பதிப்பு – 2001.

4. **செல்வராசு. வி.கே** - **"தமிழ்ச் சொற்றொடர் அகராதி",** மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம் - 608 001, பதிப்பு – 2003.

5. **முத்து சண்முகப் பிள்ளை** - **"பெருஞ்சொல்லகராதி (தொகுதி – 2)",** தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர் – 613 001, பதிப்பு – 1989.